ப்ரமமே - ஸத்யம்

# சொரூபாத்வைதம்
## எனும்
# ஆத்ம ஞான அனுபவ நிரூபம்



நாங்கூர்

ஆனந்ததாஸ்மரத்தலைவர், வேதாந்தகேசரி

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமி வாசுதேவானந்தா

அவர்கள் இயற்றியருளியது

# சொரூபாத்வைதம்

எனும்

# ஆத்ம ஞான அனுபவ நிரூபம்

நாங்கூர்
ஆனந்தாஸ்ரமத் தலைவர், வேதாந்தகேசரி
**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமி வாசுதேவானந்தா**
அவர்கள் இயற்றியருளியது

நாங்கூர்
**ஆனந்தாஸ்ரம அனுமதியுடன் வெளியீடு**

**2018**

# சொரூபாத்வைதம் எனும் ஆத்ம ஞான அனுபவ நிருபம்

ஆசிரியர் : ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமி வாசுதேவானந்தா

முதல் பதிப்பு : மே 1981

இரண்டாம் பதிப்பு : அக்டோபர் 2018

ஒளியச்சு / புத்தக / அட்டை வடிவமைப்பு :

ஐரிஸ் கிராபிக்ஸ், கோவை.

0422 - 2575941 / 9789457940

அச்சாக்கம் : ஜோதி எண்டர்பிரைசஸ், சென்னை - 5.

பக்கம் : 168

விலையில்லா புத்தகம்

பிரம்மம் ஸத்யம்



ஜகத் மித்தை

பாருலகைக் குலுக்கிய பாரதத் துறவி - துறவிகளிலும் தனக்கு நிகர் தானேயான அரசியல் துறவி - பாரத மணித்திரு நாடே; தான் என உருவகித்து வாழ்ந்த பரிபூரண தேசபக்த துறவி - நவீன இந்தியாவின் ஞானாசிரியர் - பாரதீய ஆன்மீக ஞானமும், மேற்கத்திய விஞ்ஞானமும், சேர்மானம் பிசகாது கலந்து உறவாடி ஒளிவிட்ட கூட்டு மேதை - எம்மதமும் சம்மதம் என்ற பொதுநெறிப் பெரியார் - ஏழை எளிய மனிதராசிகளுக் காகக் காலம் முழுவதும் இதயரத்தம் பெருக்கிய கருணைக் கடல் - தீர்க்கதரிசிகளில் தீர்க்கதரிசி - பெரு நாவலர்களில் பெரு நாவலர் - துறவாடையில் திரிந்த புரட்சிவேள் - பேச்சில், பார்வையில், நடையில் வீராதிவீரர்; காட்டுத்தீ; கர்ஜிக்கும் சிங்கம் - கர்மத்தில் அகர்மத்தைக் கண்டவர் - இவர்தான் சுவாமி விவேகானந்தர். இவர் போதித்த உண்மை (அபௌர்ஷேயம்) தான் சொரூபாத்வைதம்.

- அமரர் ப. ஜீவானந்தம்



வேதாந்தகேசரி

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமி வாசுதேவானந்தா சுவாமிகள்**

ஆனந்தாஸ்ரமத் தலைவர்,

நாங்கூர், தமிழ்நாடு.

**தோற்றம்:** **மறைவு: 25.10.1981**



தமிழ்நாட்டுத் தத்துவஞானி

**ஸ்ரீ குரு கிணகர் சுவாமிகள்**

ஸ்தாபகர்

பிர்மவித்யா பீடம்

புலிவலம், திருவாரூர்.

**தோற்றம்: 1905** **மறைவு: 1966**

# தானே வந்து தலையில் வீழ்ந்தது என்னே குரு பிரசாதம்

பாலக்காட்டிலேயுள்ள மண்ணூர் என்ற கிராமத்தில் எங்களுடைய குருநாதரின் குருவான ஸ்ரீ ராமானந்த சுவாமிகளுடைய ஆசிரமம் உள்ளது. அங்கே ஒரு சன்னியாசி, மையிலாடுதுறையிலே நாங்கூர் என்ற கிராமத்தில் மிகச்சிறந்த தத்துவ ஞானியின் சமாதியுள்ளது. அவர் பெயர் வாசுதேவானந்தா சுவாமிகள் ஆவார். அவரை சென்று தரிசித்து வாருங்கள் என்று கூற, நாங்களும் (ஐந்துபேர்) சென்று 2005ம் வருடம் சமாதி தரிசனம் செய்தோம். பின்னர் அவரது பிரதான சீடர் முருகேஷ் சுவாமிகளின் வீட்டிற்கு சென்று சந்தித்து கலந்து உரையாடினோம். பின்னும் ஒரு சீடர் இருக்கிறார் என்று எங்களை அவர் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கே வீட்டினுள் மாடிக்கு சென்று அவரை சந்தித்து கலந்து உரையாடினோம். அவர் பெயர்தான் V.R. ஆறுமுக சுவாமிகள். இவர்கள் இருவரும் எங்களை மிக சிறப்பாக வரவேற்று இனிப்பு, காரம், தேநீரும் வழங்கி உபசரித்தார்கள். பிறகு இருகுருமார்களைப்பற்றியும் அவர்களின் மகிமைகளைப் பற்றியும் பேசி கலந்து உரையாடினோம். பிறகு அவர்பாதம் பணிந்து நமஸ்கரித்துவிட்டு விடைபெற்றோம். அப்போது வாசுதேவானந்தா சுவாமிகள் எழுதியருளிய கைவல்யநவனீத முதல் பாகம், இரண்டாம் பாகமும் மற்றும் சிங்கப்பூருக்கு எழுதிய கடிதத்தை வினா விடையாக அச்சிட்ட புத்தகங்களையும் எங்களுக்கு கொடுத்து ஆசீர்வதித்தார்கள் நாங்களும் அவர்களிடம் இருந்து விடை பெற்று கோவை திரும்பினோம்.

பிறகு ஆறு மாதம் கழித்து சாது ராஜேந்திர சுவாமிகள் என்ற நானும் சிவபால சுவாமிகளும் மீண்டும் நாங்கூர் வாசுதேவானந்தா சுவாமி சமாதிக்கு சென்று வணங்கிவிட்டு, முருகேஷ் சுவாமிகளின் வீட்டுக்கு சென்றபோது சுவாமிகள் இயற்கை (30.9.2005) எய்தி ஒரு வாரகாலமானதைக் கேட்டறிந்தோம். பிறகு அவர் இருந்த அறைக்கு சென்று நமஸ்கரித்துவிட்டு வெளியில் வந்து ஆறுமுகசுவாமிகளின் வீட்டை விசாரித்தோம். அவரும் பக்கத்துத் தெருவில் உள்ளது என்று கூற, நாங்களும் அந்த வீட்டிற்கு சென்று விசாரித்தோம். அவரோ பள்ளி ஆசிரியர் ஆறுமுகமாவார். நாங்கள் சென்ற தினம் நான்கு மணி நேரமாக மழை கொட்டிக்கொண்டு இருந்தது. திரும்பிச் செல்ல நேரம் பற்றாகுறையாய் இருந்தமையால் நனைந்துகொண்டே அனைத்து இடங்களுக்கும் சென்றோம். அதைப் பார்த்த பள்ளி ஆசிரியர் ஆறுமுகம் எங்களை உள்ளே அழைத்து தண்ணீரும் தேநீரும் தந்து உபசரித்தார். பிறகு நாங்களும் எங்கள் குருநாதரைப் பற்றி தெரிவித்தோம். பிறகு ஆறுமுகசுவாமிகளை விசாரித்தபோது அவர் வீடு முன் தெருவில் உள்ளது என்றும் தற்போது அவர் மகள் வீட்டிற்கு சென்றுள்ளார் என்றும் கூறினார். இதற்கு முன் நாங்கள் வந்து முருகேஷ் சுவாமிகளையும், ஆறுமுகசுவாமிகளையும் சந்தித்தபோது வாசுதேவானந்தா சுவாமிகள் எழுதிய புத்தகங் களை எங்களுக்கு கொடுத்தார்கள். இன்னும் சிலபேருக்கு புத்தகம் தேவைப்படுவதால் பெற்றுக்கொள்ளலாம் என்று வந்தோம் என்று கூற, சற்று பொருங்கள் என்று அவரும் குடையுடன் வேகவேகமாக முருகேஷ் வீட்டிற்கு சென்று இருபத்தைந்து புத்தகங்களை எடுத்து வந்து கொடுத்தார். எங்களிடம் இத்தனை புத்தகங்கள் வாங்குவதற்கு பொருளாதாரம் இல்லை, சில புத்தகங்களே போதும் என்று நாங்கள் கூற, அவரும் இதற்கு பணம் ஒன்றும் தரவேண்டாம், அனைத்தையும் எடுத்துச் செல்லுங்கள் என்று கூறி அதனை கட்டி எங்களிடம் ஒப்படைத்தார். எங்களிடம் இருந்த சிறுதொகையை ஆசரமத்திற்கு அன்பளிப்பாக தந்துவிட்டு புத்தகத்தை பெற்றுக் கொண்டு பெருமகிழ்ச்சி அடைந்தோம். அந்த புத்தகம்தான் அஜாதவாதமெனவும், குன்றின்மேலிட்ட விளக்காகவும்,

வைரமலைக்கு ஒப்பாகவும் இருக்கிற அனுபவவேதாந்தசாகரம் எனும் ''எனது நிஜசொரூபம்'' ஆகும். இதில் ஒன்றே உள்ளது என்றபடி பிரம்மமே சத்தியம் என்பதை பலசுருதிகளும் உபநிஷத்துக்களும் மகான்களும் கூறிய, குறிப்பிட்ட வாக்கியங் களை மேல்கோள் காட்டியும் அதனை நிரூபகம் செய்துள்ளார் இவர். ஆதிசங்கரரின் மருபிறப்போவென்று வியக்கும் வண்ணம் அவருடைய அத்வைத முடிவான முடிவினை இந்த ஒரே புத்தகத்தின் வாயிலாக விளக்கிக்காட்டிய ஞானபேற்றினை என்னேவென்று கூறுதும். ''கூறுவதற்கு ஒற்றுமில்லை''. இந்த ஞானபிரகாச வள்ளலை மனதில் இருத்தி சுவாமிகள் தந்த இந்த நூலை கற்று உற்றுணர்ந்து உய்வோமாக.

குருசமர்ப்பணம்



# பிரமமே சத்தியம்

திருநாங்கூர் ஆனந்தாஸ்ரமத் தலைவர் வேதாந்தகேசரி ஸ்ரீலஸ்ரீ வாசுதேவானந்தா சுவாமிகள் இயற்றியருளிய

1. அனுபவவேதாந்த சாகரம் எனும்
"எனது நிஜசொரூபம்"

2. சொரூபாத்வைதம் எனும்
"ஆத்ம ஞான அனுபவ நிருபம்"

எனும் இரண்டு நூல்களையும் சங்கத்தில் 2005 ஆம் ஆண்டு கிடைக்கப்பெற்று வாசித்து வருகிறோம்.

நமது அறியாமையை போக்கிட பிரம்மமே சத்தியம் என்பதை நிருபணம் செய்ய ஸ்ரீலஸ்ரீ வாசுதேவானந்தா சுவாமிகள் எடுத்துக்கொண்ட இமாலய முயற்சி சொல்லி லடங்காது ஒவ்வொரு வினா விடையிலும் ஆதிசங்கரர் முதற் கொண்டு பல மகான்கள் கூறியிருப்பதையும் பல உபநிசத்துக் களிலுள்ள கருத்துக்களை உபமான உபமேயங்களுமாய் வெளியுரை உள்ளுரையாக எடுத்துக்காட்டி இந்நூலை இயற்றியுள்ளார்.

இதனை தத்துவம் அறிந்தோர்களே புரிந்து கொள்வதாக இருக்கிறபடியால் வருங்கால ஆத்ம சாதகர்கள் தக்கார்பால் கேட்டுத்தான் அறிந்துகொள்ள வேண்டியுள்ளது.

இந்த நூலின் மகத்துவத்தையும் எதிர்கால சந்ததியர் களுக்கு இன்றியமையாத தேவையை கருத்தில் கொண்டு நம் சங்கத்திலுள்ள சற்சீடரான ராஜாசுவாமிகள் இதற்கான பெரும்

முயற்சி எடுத்துக்கொண்டதின் பேரிலும் இந்த இரண்டு நூல்களும் மீள் பதிப்பு செய்து வெளிவருவதற்கு உறுதுணை யாகயிருந்த மதிப்பிற்குரிய K.முனிராஜ் M.R. BROTHERS அவர்களுக்கும் இதற்கு ஒத்துழைப்புத்தந்த சத்சங்க அன்பர்களுக்கும் நன்றி.

மேலும் இந்த இரண்டு நூல்களையும் மீள்பதிப்பு செய்து வெளியிடுவதற்கு அனுமதியளித்த ஸ்ரீலஸ்ரீவாசுதேவானந்தா சுவாமிகளின் பிரதான சீடர்களான தவத்திரு V.R. ஆறுமுக சுவாமிகள், தவத்திரு V. மாயழகு சுவாமிகள், தவத்திரு Dr. V.R.A. அறிவழகன் (ஆறுமுக சுவாமிகளின் குமாரர்) அவர்களுக்கும் ஸ்ரீலஸ்ரீ சுவாமி வாசுதேவானந்தா நற்பணி மன்றத்தார்அவர்களுக்கும், ஆனந்தாஸ்ரம கலைமகள் பள்ளியின் தாளாளர் திரு. தணிகாசலம் அவர்களுக்கும், மயிலாடுதுறை ஈஸ்வரன் அவர்களுக்கும், சென்னை கைவல்ய நவநீத ஞானப் பெருமன்றத் தலைவர் பெருவெளிராமன் அவர்களுக்கும் செயலர் முருகு ஏழுமலை அவர்களுக்கும்,

கோவை தீத்திபாளையம் **"குருகுலம் கைவல்ய சுவாமிகள் சாது சங்கம்"** சார்பாகவும்,

திருநெல்வேலி அம்பாசமுத்திரம் பள்ளக்கால் பொதுக்குடி **"குருகுலம் கைவல்ய சுவாமிகள் ஆசிரமம்"** சார்பாகவும் எங்களின் மேலான நன்றியினை தெரிவித்துக்கொள்கிறோம்.

இங்ஙனம்
**சாது ராஜேந்திர சுவாமிகள்**
தீத்திப்பாளையம்
கோவை - 10



## வாசுதேவானந்தா சுவாமிகளின்

# பிரதான சீடர்கள்



V.R. ஆறுமுக சுவாமிகள்

நாங்கூர்.



V. மாயழகு சுவாமிகள்

திருநாடன்பட்டி.



Dr. V.R.A. அறிவழகன் சுவாமிகள்

V.R. ஆறுமுகம் அவர்களின் மகன்

நாங்கூர்.



செ. முருகேசன் சுவாமிகள்

மறைவு (30.09.2005)

நாங்கூர்.

# ராமானந்தா ஆசிரமம்
# பாலக்காடு

கேரளா மாநிலம் பாலக்காடு மாவட்டம் மன்னூர் எனும் கிராமத்திலே சமாதி கொண்டுள்ள மகா மகத்துவம் கொண்ட மண்ணூரப்பா ஸ்ரீ-ல-ஸ்ரீ ராமானந்த சுவாமிகள். அவருடைய பிரதான சற்சீடரான கோயம்புத்தூர் பேரூரில் சமாதி கொண்டுள்ள பேரூரப்பா ராமானந்த சுவாமிகள் ஆவர். அவருடைய பிரதான சீடர்களில் கோயம்புத்தூர் தீத்திபாளையம் ''குருகுலம் கைவல்ய சுவாமிகள் சாது சங்கம்'' தவத்திரு சாது ராஜேந்திர சுவாமிகள், துணைவியார் அன்பு கலைவாணி அம்மா, தவத்திரு சிவபாலன் சுவாமிகள் அவர்களாலும்

மற்றும் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் தாலுகா பள்ளக்கால் பொதுக்குடி ''குருகுலம் கைவல்ய சுவாமிகள் ஆசிரமம்'' வேதாந்த சிரோன்மணி ஞான சற்குரு ஸ்ரீலஸ்ரீ பெருமாளானந்த சுவாமிகளின் பிரதான சீடர்களில் ஒருவரான உயர்திரு லெ. இசக்கிமுத்து அவர்களாலும் இந்நூல் அச்சுப்பிழை திருத்தம் செய்யப்பட்டது.

இதில் மேலும் அச்சுப்பிழையோ பொருட்பிழையோ காணப்பட்டால் பெரியோர் பாசியினை ஒதுக்கி நீரினைக் கொள்வதுபோல் பிழையை நீக்கி பொருளினை கொள்ளுமாறு பிரார்த்திக்கிறோம்.

அச்சுப்பிழையை தெரிவிப்பாரானால் மறுபதிப்பில் திருத்திக் கொள்ளப்படும்.

**விலையில்லாப் புத்தகமாக வெளியீடு**

*சாது ராஜேந்திர சுவாமிகள்*
*ராஜா சுவாமிகள்*
கோவை.

உரிமை: **வேதாந்தகேசரி ஸ்ரீ-ல-ஸ்ரீ வாசுதேவானந்தா சுவாமிகள்**
தலைவர் ஆனந்தாஸ்ரமம்
நாங்கூர் (Po), சீர்காழி (T.K)
நாகப்பட்டினம் மாவட்டம்.

அனுமதியுடன் இரண்டாம் பதிப்பு வெளியீடு

**குருகுலம் கைவல்ய சுவாமிகள்**
**சாது சங்கம்**
2/195, R.K.V. கோல்டன் நகர்,
தீத்திப்பாளையம்,
கோயம்புத்தூர் - 641 010.
செல்: 9865453023

**குருகுலம் கைவல்ய சுவாமிகள்**
**ஆஸ்ரமம்**
பள்ளக்கால் பொதுக்குடி - 627 413
அம்பா சமுத்திரம் தாலுகா
திருநெல்வேலி மாவட்டம்.
செல்: 9865596655

# முன்னுரை

திருநாங்கூரில் வீற்றிருக்கும் எங்கள் குருபிரான், சுவாமி வாசுதேவானந்தா அவர்கள் தங்கள் திருஉள்ளத்தில் தோன்றிய ஆத்மீக சுயானுபவ விஷயங்களை எல்லாம் எங்களுக்கு கடிதங்கள் மூலமாக எழுதி அனுப்புவது வழக்கம், அஞ்ஞான அந்தகாரத்தில் கிடந்து உழன்று வரும் எங்களுக்கு உண்மையான தெய்வீகத்தைப் பற்றி ஒன்றும் தெரியாமல் தேகாதிபிரபஞ்சம் சத்தியம் எனவும் நம்பி உண்மையான பிரம்ம ஞானத்தை உணராமல் தவித்துக் கொண்டிருந்த காலத்தில் சுவாமிகளுடைய கடிதங்களின் மூலமாக ஆராய்ந்து மோட்சநெறி இன்னதென்றும் பிர்மஞானம் இத்தகையது என்றும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறியலானோம். இந்நிலையில் எங்களுக்கு இருந்த அஞ்ஞானமாகிய அறியாமையும், தேகாதிபிரபஞ்சம் சத்தியம் என்ற புத்தியும் நீங்கி சச்சிதானந்த சொரூபமே நமது எதார்த்த சொரூபம் என்று ஐயம் திரிபுஅற உணர்ந்தோம். இவ்வாறான நிலையில் எங்களுடைய இன்றியமையாத தொழில்களும், குடும்ப விவகாரமும் பற்றற்ற கர்மயோகிகளாக செயலாற்றும்படியான தெளிவு ஏற்பட்டது. இது காரணமாக நாங்கள் கவலையின்றி துக்கமின்றி வாழ்வதற்கு வழிதெரிந்து கொண்டோம். இவ்வளவிற்கும் காரணம் எங்கள் குருபிரான் எழுதிய கடிதங்களாகும். இந்த பிரம்ம ஞானத்தை நாங்கள் அறிந்தது போல் எங்கள் சக நண்பர்களும் அறிந்து உய்ய வேண்டும்

என்னுங் கருத்தால் குருபிரான் அவர்கள் கடிதங்களை ஒன்று சேர்த்து புத்தக ரூபமாக வெளியிடவேண்டும் - என்னும் விருப்பத்தால் குருபிரானிடம் சொன்னோம். அவர்களும் சரி என்று அனுமதி கொடுத்தார்கள். உடனே கடிதங்கள் எல்லாம் ஒன்றுசேர்த்து திருவாரூர் - புலிவலம் பிர்மவித்யாபீட தலைவர் ஸாது பிர்மானந்தா அவர்களிடம் ஒப்படைத்தோம். அவர்களும் மகிழ்ச்சியாக ஏற்றுக்கொண்டு இரவும் பகலும் அயராது உழைத்து புஸ்தக ரூபமாக்கி எங்களுக்கு அளித்தார்கள். எனவே பேரறிஞர் ஸாது பிர்மானந்தா அவர்களுக்கு எங்கள் உளம் கனிந்த பாராட்டுதலும் நன்றியும் உரித்தாகுக.

**செ. முருகேசன், நாங்கூர்.**
V.R. **ஆறுமுகம், நாங்கூர்.**
M. **கணபதி, ராமநாதபுரம்.**
V. **மாயழகு திருநாடன்பட்டி, புதுக்கோட்டை.**
**மற்றும் சக நண்பர்கள்.**



# தோற்றுவாய்

ஆனந்த சொரூபத்தின் குழந்தைகளாகிய மக்கள்; தோன்றிய காலந்தொட்டு இன்றுவரை ஒவ்வொருவருடைய உள்ளத்தில் தோன்றிய அபிப்பிராய பேதத்தின் காரணமாக அவரவருடைய குறிக்கோள் ஒவ்வொரு பொருளை நாடிக் கொண்டிருக்கிறது. உதாரணமாக ஒருவருக்கு கல்வியில் பிரியம், மற்றொருவருக்கு சங்கீதத்தில் பிரியம், இன்னொருவருக்கு விஞ்ஞானத்தில் பிரியம். இந்த நிலைமையில் எனது குறிக்கோள், என்னவென்றால் உலகத்தில் கடவுள் என்று சொல்கிறார்களே, அது என்ன பொருள் என்று அறியவேண்டும், என்ற தீவிர தர விருப்பம் இளமையிலேயே உண்டாயிற்று. அதன் காரணமாக நான் எனது பெற்றோர்களை விடுத்து வெளியேறி, குமரி முதல் இமயமலை பரியந்தம் சுற்றிப் பார்த்தேன். ஆங்காங்குள்ள ஞானிகள், மகாத்மாக்கள், யோகிகள், பக்தர்கள் அவதூத சன்னியாசிகள் முதலிய பலபேர்களை சந்தித்து பேசிப் பார்த்தேன். அவர்கள் தெய்வீக விஷயத்தில் பல அபிப்ராயபேதமாக சொன்னார்கள். பிறகு வேத ஆகம இதிகாச புராணாதிகளையும் ஆராய்ந்து பார்த்தேன். அந்த வேதத்தின் வழி நூலாகிய பஞ்சதசி, விசார சாகரம், பிரம்ம சூத்திரம் முதலிய நூல்களையும் வேதத்தை தழுவி வெளிவந்துள்ள சமய நூல்களையும் துருவித் துருவி பார்த்தேன். அதன் வாயிலாக உண்மை வெளியாயிற்று. உபநிஷத் வாக்கியப்படி பிரக்ஞானம் பிரம்மம் அதாவது பேரறிவே கடவுள் என்று உபநிடதங்களில் கூறியிருப்பதை தழுவி எல்லா நூல்களும் கூறிப் போந்துளது. உதாரணமாக திருவருட்பாவில் ''மெய்யறிவாம் வீடு'' என்றும் சைவசித்தாந்த

சாஸ்திரம் 14-ல் ஒன்றான சிவஞான போதம் இரண்டாம் சூத்திரம் 4-ம் அதிகரணம் 50-தாவது பக்கத்தில் ''பேரறிவாய சைதன்யம் ஒன்றே'' என்றும் திருமங்கையாழ்வார் திருமொழியில் ''உய்வதோர் பொருளாம் உணர்வெனும் பெரும்பதம் நான் கண்டுகொண்டேன்'' என்றும் கூறிப் போந்துள்ள சமய நூல்களின் கருத்தும், வேதத்தின் கருத்தும் ஒன்றுதான் என அறிந்தேன். பாகவத புராணத்தில் ''வாக்கினைக் கடந்து ஓங்கி மற்றெங்கனும்; நீக்கம் இன்றி நிறைந்த அறிவினை, ஊக்கமுற்று உணர்தற்கு இடனாதலின், ஆக்கையும் குருவாய தரசனே'' என்று கூறியிருப்பதால் அறிவு நிறைபொருள் என்பதாயிற்று. இந்த அறிவு நம்மைவிட, வேறாகுமா எனின் ஆகாது. உதாரணமாக விருத்தாசல புராணத்தில் செய்யுள் ''கடக்குஞ்சரம் பண்ணி உள்நின்றொருத்தன்; கைபாத கர்ணங்கள் மெய் போலியக்கும்; கிடக்கும் நடத்தா விடத்து இவ்வுடம்பும், கிடக்கும் ஒருத்தன் நடத்தா விடத்தே'' இதன் பொருள் திருவிழாக்காலங்களில் கடைத்தெருவில் மூங்கில் குச்சிகளினால் ஒரு யானையை செய்து வர்ணத்தாள்களை ஒட்டி உயிருள்ள யானையைப்போல் வைத்திருப்பார்கள். அதனுள் ஒரு சிறுவன் புகுந்து கை, கால், காது முதலிய உறுப்புக்களை ஆட்டி அசைப்பான். அவன் ஆட்டாது போனால் அந்த யானை உருவம் அசைவற்று இருக்கும். அதுபோல் இவ்வுடம்பும் கிடக்கும் ஒருத்தன் நடத்தாவிடத்து. அதாவது இந்த உடம்புக்குள் இருந்துகொண்டு ஒரு பேரறிவு சொரூபமான சைதன்யம் இந்த உடம்பை இயங்கச் செய்யாது போனால் இந்த உடம்பும் ஜடமாய் அசைவற்றுக் கிடக்கும் என்பதாயிற்று. எல்லா நூல்களும் எல்லா பெரியவர்களும் சொன்னது முற்றும் உண்மையே. எப்படியென்றால் காரிய காரணமுறைப்படி எல்லா ஆபரணங்களும் ஒரே தங்கம்தான். எல்லா சட்டிப் பானை குடங்களும் ஒரே மண்தான் என்று அறிவதுபோல் ஒரே சைதன்ய சொரூபமான ஆத்மாவே மனைவி, மக்கள் தாய், தந்தை முதலிய எல்லாமாய் அல்லவுமாய் விளங்குகின்றது என்று நான் அறிந்து முக்தனானேன். இந்த உண்மைகளை எனது நண்பர்களும் அறிந்து உய்யவேண்டும் என்ற இரக்கத்தால் பல கடிதம் வரை எழுதினேன். எப்படி மனிதருள் மாணிக்கம்

எனப் போற்றும் நேருஜி அவர்கள் நைனிசிறையில் இருந்த போது அவருடைய புத்திரியாகிய திருமதி இந்திரா காந்தி அம்மையார் அவர்களுக்காக எழுதிய கடிதங்கள் ஒன்று சேர்த்து உலக சரித்திரம் என்று பெயர் சூட்டி வெளியிட்டு இருப்பதை உலகம் அறியும். அதுபோல் நானும் எனது நண்பர்களை முன்னிட்டு எழுதிய கடிதங்களை ஒன்று சேர்த்து வெளியிட வேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள். திருவருள் செயல் அவ்வாறு ஆகுமாயின் ஆகுக! என்று நானும் சம்மதித்தேன். அதன் காரணமாக இப்புத்தகம் அச்சு வாகனம் ஏறி உலாவுவதற்கு பொருள் உதவி செய்த அவர்களுக்கும் மற்றும் உள்ளோருக்கும் எனது ஆசி உரித்தாகுக! வாசகர்கள் இந்நூலைப் படித்து கர்மயோகி களாக, அதாவது பற்றற்ற ஜீவன்முக்தர்களாக வாழ்வார்களாக!

மேலும் ''நான் குமரி முதல் இமயமலை பரியந்தம் பரவியுள்ள பாரத பூமியில் சுற்றிப்பார்த்ததில் ஆங்காங்குள்ள மகாத்மாக்களை எல்லாம் சந்தித்து அவர்களுக்கு சேவை செய்து அவர்கள் மூலமாக எனது ஆத்ம சொரூபமே கடவுள் என்றும் அதுவே சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி என்னும் மோட்சமாகும் என்றும் அந்த நிலையை ஐயம் திரிபு அற தெரிந்துகொண்டு ஓய்வுக்காக சீர்காழி தாலுக்கா நாங்கூரில் வந்து சேர்ந்தேன். அங்கு கோ. சீனிவாச முதலியார் என்னும் ஒரு உத்தம அதிகாரியை சந்தித்தேன். அவருக்கும் எனக்கும் ஏற்பட்ட சந்திப்பு சுவாமி விவேகாநந்தருக்கும், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருக்கும் ஏற்பட்ட சந்திப்பு போன்ற தாகும். என்னிடத்திலே உள்ள ஆத்ம ஞான பொக்கிஷத்தைப் பெறவேண்டும் என்னும் கருத்தால் எனக்கு புகலிடம் அளித்து அன்னபானாதி, சுகசாதனங்களையும் அளித்து என்னைப் பாதுகாத்து வந்தார். தற்போது அவர்களுடைய செல்வக் குமாரர்கள் நால்வரும் கண்ணுக்கு இமைபோல் என்னைப் பாதுகாத்துக் கொண்டு வருகிறார்கள். அவர்களுக்கு எனது ஆசி உரித்தாகுக.

இப்படிக்கு,
**சுவாமி வாசுதேவானந்தா,**
நாங்கூர் போஸ்ட்
சீர்காழி தாலுகா.

பிர்மமே - ஸத்யம்.

இந்நூலாசிரியர்,

**சுவாமி வாசுதேவானந்தா** அவர்கட்கு

திருவாரூர் - புலிவலம்

பிர்மவித்யாபீடத் தலைவர்,

**ஸாது பிர்மானந்தா** அளித்த

# அணிந்துரை

*அத்வைத தத்துவத்தின் ஆழம் காட்டிய ஆதிசங்கர*
*வழித்தோன்றலே வாழ்க! வாழ்க!!*
*ஆனந்தமே பிரதானமென பிரஸ்த்தானத்ரய பாஷிய*
*மருளிய பரம்பரையே வாழ்க! வாழ்க!!*
*இன்பமே தனது சொரூபம், துன்பம் ஆகுந்தமாமென*
*அறிவித்த அருளாளர் வாரிசே வாழ்க! வாழ்க!!*
*ஈகையின் இலக்கணம் காட்டிய இன்புறு குரு*
*குடும்பமே வாழ்க! வாழ்க!!*
*உயிரும், உலகமும் ஒன்றே என உபதேசித்த உத்தம*
*பெரியோய் வாழ்க! வாழ்க!!*
*ஊழ்வினை யாவும் உபசாரீகமென உணர்த்திய*
*உணர்வாளரே வாழ்க! வாழ்க!!*
*எத்துணையும் பேதமென்பதில்லை யென சொரூபாத்வைத*
*கிரந்தமூலம் முரசுகொட்டிய ஏந்தலே வாழ்க! வாழ்க!!*
*ஏகமேவாத்விதியமென அறிவித்த அண்ணல் வழி*
*வந்த வள்ளலே வாழ்க! வாழ்க!!*
*ஐம்புலனடக்கம் அறிந்த அறிவுச் செம்மலே*
*வாழ்க! வாழ்க!!*
*ஒன்றே உள்ளது மற்றவை தோற்ற மாத்ரமென (மாயையை)*
*மதிப்பிட்ட பீடமே வாழ்க! வாழ்க!!*
*ஓயாது ஒழியாது உலக க்ஷேமத்தைக் கோரும்*
*லோக குருவே வாழ்க! வாழ்க!!*
*ஔவியம் அகற்றி அருளிய*
*ஆத்ம ஞானப் பேரொளியே வாழ்க! வாழ்க!!*

Brahmam Sathyam

# AN INTRODUCTION

THE author of this book of these letters the revered Swami Vasudevananda has tried his leval best to instruct the readers by expressing his practical experience and though varied scriptures of Hindu Philosophy, mainly from the puranic incidents like the disclosure of the secrecy of Karna's birth, that the readers need not take any special efforts to understand their "self".

NONE can excel the profound and practical knowledge of Swamiji in VEDAS and UPANISHEDS. His elaborate quotings in logical and scientific sequence highly appeal to readers with keen intelligence.

THIS book gives us a clear and perfect understanding that the material word (Prakrithi) the body being transitory the soul is ever lasting and all pervading. For realisation of this 'self' no great physical achievements through Karma, Bakthi, Yoga and meditation of any kind are necessary.

THE only requisites for this is the spirit of enquiry with a continual identification of 'self' with the Supreme Brahmam the omnipotent.

THE human creations like "PUNYA" the good and "Papa". the bad or 'the Mokaha' or otherwise the objective arrival at the feet of God are nothing but great fantacies. This book is a sure guide for the readers to lead a life of a true Jeevan Mukthi in this present world.

By,

Mangudi. **SWAMI KRISHNANANDA**
Assistant Secretary, Brahma Vidhya Peedam,
PULVALAM - TRUVARUR.

Date : 6-5-1981

# A FOREWORD

Indeed it is a rare privilege confirmed on me to write a foreword on this scarce but excellent collection of the magnificiant master-pieces of Vedhantic Literature ennunciated by the living and revered St. Swami Vasudevanandha the contemporary of my Guru Ginagar Swamigal and his Guru Swami Soundraraja Birhmam.

Out of a great benevolence and real human sympathy his endeavour to clear the doubts of his beloved disciples at singapore and to make them realise their Supreme self has brought forth this fruit, matchless and unique in itself.

Every part of this work of art touches the bottom of the hearts of the readers and makes them forget this material world and realise their inner being, the omnipotent and omnipresent. It acts as a great source of solace and strength to the disturbed and broken hearted and lifts him safely to a glorious. throne where - from he enjoys the mental peace and spiritual tranquility, that is everlasting and dignified to his Spreme existence.

Through these letters that form a lucid commentary of the Vedas and Upanisads the revered Saint shows to the readers the falsity of their physical existence, removes their outer masks, makes them escape from the aweful clutches of birth and death and showers on them the eternity and everlasting bliss. It is

atonce a life guide for the wise and the brave, a life boat for

the drowning and a marvellous life tonic for the sick and wounded. The present world which is divided and factious, disturbed and

discontended, ambitious and ignorant, and often loathsome and

quarrelsome is in a great need of such spiritual scripture that imports the necessary moral values in life, enobles their hearts and enlightens their minds leading to self realisation and social harmony.

For a man of keen intelligence and high concentration this is sure to be a valuable guide book for life. In conclussion it is my fertile hope, beyond any least doubt that this excellent booklet on Advaidha Phylosophy will find an honorable place in the hearts of the good and great. For all this, we owe much thanks to the beloved diciples of Swamiji at Singapore whose ardent faith and financial help have been the sole cause for this publication with the sincere and prudent efforts of Sadhu Birmahananda.

By

**S. VENUGOPALAN, M.A., B.com., B.T.**
Tiruvarur

15-5-1981



# FOREWORD

I am highly pleased to write a foreword on this valuable collection of writings, on "Sorubathvaidham' ennunciated by respectable Guru Swami Vasudevanandha.

For a man who concentrates on this Writings it is sure to get out of mirage and darkness and it will induce him to become a creative thinker leading to his self realisation without which no mental peace or social harmony shall, be achieved in this world.

No penance or piety will lead to salvation but for deep thinking in association with the religious scripts full of wisdom and logical analysis. Here comes the role of this literature on Sorubathvalidham. It lits up the lamp of wisdom in the hearts of the reader throughwich he is able to realise his innerbeing and perceive the perfect equality in the existance of the whole human race in this world. This is the only means by which peace in the heart and prefection in life can be attained.

No politician either by his sacrifice or by his stratagem, no scientist by his new inventions, however deadly or helpful to the humanbeings can pave way for the Selfrealisation of individ-uals and social harmony in the nations of the world.

The reader will definitly get rid of the fear of death and will be above the sorrows and sufferings in life. In his eyes everything will have the same value either gold or stone, either inanimate or animate.

The ardent followers at singapore indeed are very fortunate enough to have an intimate and respectful connection with Swamiji and to have their doubts cleared and they are very considerate and benevolent to collect the personal letters to be printed in the form of a book for the entire benefit of the human race.

They Really deserve our heartfelt thanks for their acts of generosity.

Tiruvarur                                                                                    By
15-5-1981                                                      **K. GANGADARAN, M.A., B.T.**



ஸ்ரீ-ல-ஸ்ரீ வாசுதேவானந்தா சுவாமிகளின் சமாதி

ஆனந்தாஸ்ரமம்

நாங்கூர்.

பிர்மமே ஸத்யம்
அதுவே நித்யம்

# சொரூபாத்வைதம்

## கடிதம் 1

23-9-1977
ஆனந்தாஸ்ரமம்
நாங்கூர்.

பேரன்பின் மிக்க திரு. V. R. ஆறுமுகத்திற்கு நல்ல ஆசி உரித்தாகுக!

நிற்க, உங்கள் தபால் கிடைக்கப் பார்த்தேன். அதில் அங்கு நிலைமைகள் ஒன்றும் சரியில்லை என்று எழுதியிருந்தீர்கள் ''திரைகடல் ஓடியும் திரவியம் தேடு'' என்று ஔவைப்பிராட்டியார் கூறியிருப்பது போல் முயற்சியை கைவிடாமல் கூடுமானவரையில் முயற்சி செய்து பாருங்கள். ஆத்மா சர்வ சாட்சியாய் இருப்பதால் நீங்கள் நினைத்த காரியத்தை கைகூடச் செய்யும். எக்காரணத்தைக் கொண்டும் சோர்வு அடைய வேண்டியதில்லை. மாமேதை நேருஜி அவர்களைப்போன்று கர்மயோகியாக இருந்து செயலாற்றுங்கள். உங்கள் தபாலில் இருள் ஒளியை மறைப்பது போன்ற சில உபமானங்கள் எழுதியிருந்தீர்கள், உண்மையில் இருள் ஒளியை மறைப்பது இல்லை. மறைப்பதுபோல் தோன்றுகிறது. அதுபோல் மாயையின் கற்பனா செயலில் மறைப்பது போன்று தோன்றுவதால் நமக்கு அனுகூலப்பிரதிகூலங்கள் தோன்றுகின்றன. நாம் சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவாக இருப்பதால் எந்தத் தோற்றமும் நம்மை பாதிக்காது என்று துணிந்து செயலாற்றுங்கள். இருள் ஒளியை மறைக்காது என்பதற்கு தாயுமானசுவாமி பாடலைப் பாருங்கள்.

''போதமென்பதே விளக்கொவ்வும் அவித்தை பொய் இருளாம் தீதிலா விளக்கெடுத்து இருள் தேடவும் சித்தா'' ஆதலால் அறிவாய் நின்ற விடத்து அறியாமை ஏதுமில்லை, என்று எம்பிரான் சுருதியே இயம்பும். இதில் போதம் என்பது அறிவையும், அவித்தை என்பது அறியாமையையும் குறிக்கும்.



## கடிதம் 2

*20-2-78*

*நிற்க, இப்பொழுது ஔவைப்பிராட்டியின் ஒரு குறள் எனது ஞாபகத்திற்கு வருகின்றது.*

*அதாவது:-*

***தன்னையறியும் அறுவுதனை அறியில்***
***பின்னைப் பிறப்பில்லை வீடு.***

***இதன் பொருள் :-*** *இந்த உடம்பை நான் என்று அறிந்த அறிவு எதுவோ அந்த அறிவே கடவுள் சொரூபமாகும், என்று ஐயம் திரிபு அற உணரில் அதுவே வீடு. அதாவது மோட்ச மாகும் என்பதாம். இந்த அறிவு நிறைபொருள் அதாவது நீக்கம் அற எங்கும் நிறைந்திருக்கின்ற பரிபூரண ஆனந்தமாகும் என்று தக்கார்பால் கேட்டு உணரும்போது எல்லா மக்களும் ஆனந்த சொரூபிகளாகத் தோன்றும் இன்னிலையில் துக்கத்துக்கோ, கவலைக்கோ, குறைபாட்டுக்கோ இடமில்லை. அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்றார் தாயுமான சுவாமிகளும், சகல ஜீவர்களும் ஆனந்தத்திலே தோன்றி ஆனந்தத்திலே லயமாகின்றது. இதை பிரதி தினமும் ஒவ்வொருவரும் அனுபவிக்கின்ற சுழுத்தி அவஸ்தையில் காணலாம். இந்த ஆனந்தம் விஷயங்களின் வாயிலாக வெளிப்படுகின்றதே ஒழிய விஷயத்தில் ஆனந்தம் இல்லை, உளதாகக் கருதுவது மருளாம். இந்த ஆனந்தம், தாம் என்று அறியா அறிவிலிகள் ஆனந்தம் தேடி அலையும் என்ற வள்ளலார் வாக்கியத்தால் அறியலாம். எனவே ஆத்மாவின் பரிபூரண நிலையில் நாங்கூர் என்பதற்கும் சிங்கப்பூர் என்பதற்கும் இடைவெளிதூரம்*

இல்லை. இப்படி நிறை பொருளான ஆத்மசொரூபம் நாமாக இருக்கின்றோம் என்ற உண்மையை உணருவதற்கு மனிதப் பிறப்பு இன்றியமையாதது அல்லவா!

**திருக்குறள் :**

> **“தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்**
> **துன்னற்க தீவினைப் பால்”**

என்பதாலும் அறியலாம்.



## கடிதம் 3

*14-8-78*

நிற்க, ஒருவன் மண்வெட்டி போன்ற ஆயுதங்களை இரவலாக வாங்கி வந்தால் உடனே அவன் குறிப்பிட்ட வேலையை செய்து முடிக்க வேண்டும். முடிக்காவிட்டால் உடையவன் வாங்கிக்கொண்டு போய் விடுவான். குறிப்பிட்ட காரியம் நடக்காது. அதுபோல் நமது உடம்பையும் இரவலாக வாங்கிவந்துள்ளோம். இதை வைத்துக்கொண்டு விளையாடி காலத்தை வீணாக்கினால், உடம்பைக் கொடுத்த இயற்கை சக்தி இந்த உடம்பை அழித்துவிடும். இந்த உண்மையை உணராமல் சிறுவர்கள் இந்திரஜாலத்தில் காண்பிக்கும் மாம்பழத்தைக் கண்டு ஆசைப்படுவதுபோல் உலகத்தில் காணும் இயற்கையின் இந்திரஜாலத் தோற்றமாகிய விஷயங்களைக் கண்டு மயங்கி காலத்தை வீணாக்குவதில் பயன் இல்லை. உலகத்தில் தோன்றும் பொருள்கள் எல்லாம் இந்திரஜாலசமானம்என்பதைதிருவாசகத்தில் “இந்திரஜாலத்தில் இடற்படும் ஆகாதே” என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியிருப்பதேபோதும், (உடம்பினைபெற்றபயனாவதெல்லாம் உடம்பினுள் உத்தமனைக் காண்.) என்று ஔவை குறள் கூறுவதைக் காண்க. உடம்பினுள் உத்தமனைக்காண் என்று கூறியதின் பொருள்:- தக்கார்பால் கேட்டறியாமல் ஜோதி தரிசனமென்றும் நாடி தரிசனமென்றும், குண்டலி சக்தி யென்றும், தசநாதமென்றும், மூலாதாரத்தில் கணபதி என்றும்,

பிராணாயாமம் என்றும் இன்னும் பலப்பல விதமாகக் கூறி மயங்கிவிட்டார்கள் பலர் இவை அனைத்தும் அறிவு சொரூபமா? அல்லது அறிவற்ற பொருளா ஆராய்ந்தறிய ஆற்றல் அற்றவர்களாயினர் சிலர். இவர்களை எல்லாம் மறுக்கவேண்டி ஔவைப் பிராட்டியார் கூறியிருப்பதைப் பாருங்கள். ''தன்னை அறியும் அறிவுதனை அறியில், பின்னைப் பிறப்பில்லை வீடு'' என்று கூறியிருப்பதால் அறிவின் பரிபூரண நிலையை அறிவதே மோட்சம், அல்லது வீடு என்பதாயிற்று. அறிவுக்கு இயற்கை சொரூபம் ஆனந்தமேயாம். அது செயற்கையை முன்னிட்டு மாறுதல் ஏற்படுகின்றது. இந்த அறிவு எல்லோருள்ளத்திலும் நிறைந்து விளங்குகின்றது. இந்த அறிவின் சமஷ்டியே அதாவது பன்மையே கடவுளென்றும் பிர்மம் என்றும் கூறுகின்றது. இந்த அறிவு நிறைபொருள் என்பதற்கு திருஞானசம்பந்த சுவாமிகள் பாடலைப் பாருங்கள்.

***''பறையர் என்பதும் பண்டிதர் என்பதும்***
***மறையும் இந்த மலின உடலையே***
***பறையர் தம் உள்ளும் பண்டிதர் தம் உள்ளும்***
***அறிவன் ஏகம் என்றார் அறிந்தோர்களே''***

இதில் பண்டிதர் என்பது பிராம்மணர்களைக் குறிக்கும். அறிவன் என்பது இருவர் உள்ளத்திலும் அறிந்து கொண்டிருக்கும் அறிவு நிறைபொருள் எனக் குறிக்கும். உண்மை இவ்வாறு இருக்க அறிவற்ற ஜடப்பொருளையெல்லாம் கடவுளாகக் கருதி காலத்தையும் பொருளையும் வீணாக்கினர் பலர். இன்னும் வீணாக்கிக் கொண்டிருக்கின்றனர். இந்தப் பரிதாப நிலையைக் கண்ட சுவாமி விவேகானந்தர் தமிழகத்தில் சுற்றுப்பிரயாணம் செய்தார். ஏன் என்று கேட்பார் ஒருவரும் இல்லை. முடிவாக கன்னியாகுமரியில் சமுத்திரத்தில் உள்ள ஒரு பாறையில் அமர்ந்து வடக்கை நோக்கி ''ஏ பாரத மாதாவே உனது குழந்தைகள் எல்லாம் இவ்வாறு அஞ்ஞானத்தில் கிடந்து உழல்வது உனக்கு தகுமோ'' என்று அழுதார். அதன் பயனாக கன்னியாகுமரியில் 2 கோடி ரூபாய் செலவில் நினைவுச் சின்னமும் பெரிய மடமும் ஏற்பட்டிருக்கிறது.

இதோ அவருடைய அபிப்ராயம், விவேகானந்தர் ஞானதீபம் 7-வது சுடர் 56-வது பக்கம் ''அறிவின் தொகுதியே நாம் இறைவன் என்கிறோம்'' மேற்படி 51-பக்கம் ''நீங்கள் பிறக்கவில்லை எனவே நீங்கள் இறக்கவும் மாட்டீர்கள். இறப்பும் பிறப்பும் உடலுக்கே'' மேற்படி 295-வது பக்கம் ''நிறைந்த அறிவே நான் நிறைந்த பேரின்பமே நான். அதுவே எனது ஆத்மாவாகும்''. மேற்படி 233-வது பக்கம் ''நமது உண்மை இயல்பே கடவுளாய் இருக்கும்போது அவர் எங்கேயோ தொலைவில் இருப்பதாக ஏன் போதிக்கிறீர்கள்'' மேற்படி 382-வது பக்கம் ''ஒவ்வொரு மனிதனும் ஈஸ்வரனாகவே இருக்கிறான்.'' மேற்படி 191-வது பக்கம் ''குண்டலி சக்தியே மனதின்கண் கற்பனை செய்து பார்க்க வேண்டும்''. சுவாமி விவேகானந்தர் அனுபவ வேதாந்தம் 51-வது பக்கம் ''கடவுள் உங்களுக்குள்ளே இருக்கிறார். நீங்கள் கோவில் கட்டிக்கொண்டும் பலவிதமான மூடத்தனத்தோடும், மூடநம்பிக்கையோடும் இருக்கிறீர்கள். உண்மையான கடவுள் ஆத்மாவே ஆகும்.'' மேற்படி 153-வது பக்கம் ''கடவுள் என்ற பதம் வரும் இடங்களில் எல்லாம் முக்தர்களாகிய ஞானிகள் என்றே பொருள் கொள்ளவேண்டும்'' சுவாமி விவேகானந்தர் ஞானயோக ரகஸ்யம் 7-வது அத்தியாயம் புருஷன் மனைவி குழந்தைகள் பாவிகள் வாழ்க்கை முதலியவைகள் யாவும் கடவுள் சொரூபமேயாம் இவ்வளவுகாலமாக நாம் இந்த உண்மையை அறியாமல் இருந்தோம். சுவாமி இராமதீர்த்தர் M.A., எழுதிய இராமதீர்த்த விஜயம் பக்கம் 142 ''ஆயிரம் யாகம் செய்வதைப் பார்க்கிலும் ஒரு ஏழை மனிதனுக்கு ஒரு ரொட்டித்துண்டு கொடுப்பது மேலானதாகும்''

சீர்காழி சிவஞான வள்ளலார் அருளிய வள்ளலார் சாஸ்திரம்,

### வெண்பா

**''ஆலயமே காய மறிவே சிவலிங்கம்**
**மாலயனுங் காணாத வள்ளலுக்குச் - சீலமும்**
**அன்பே அபிஷேகம் அன்பேநல் லர்ச்சனையும்**
**அன்பேநை வேத்தியமு மாம்''.**

இவ்வாறாக சகல சாஸ்திரங்களையும் துருவித்துருவி ஆராய்ந்து பார்க்கும்போது பேரறிவு சொரூபமே கடவுளாம் என்பதற்கு ஐயம் இல்லை அப்படியானால் மக்கள் பேரறிவு சொரூபமாய் இருந்தும் அளவிலாத துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பது ஏன் எனின் இதோ சுவாமி விவேகானந்தர் அளிக்கும் சமாதானத்தைப் பாருங்கள்.

அமெரிக்கா பிரசங்கம் 334-வது பக்கம் ''நான் ஜடப் பொருளால் ஆன அசேதனப் பொருளே எனக் கொள்ளலாமா? கொள்ளக்கூடாது. ஏன் எனின் வேதம் என்னை ஜடப் பொருளின் சேர்க்கை அல்ல என்கின்றது. நான் என்பது இந்த தேகத்துக்குள் வசிக்கும் ஆத்மாவே ஆகும். நான் இச் சரீரம் அல்லன்; இவ்வுடம்பு அழிந்து போம்; நானோ என்றும் அழியமாட்டேன்; நான் இப்பொழுது இங்கே இந்த சரீரத்தில் இருக்கிறேன்; இந்த சரீரம் அழிந்த பின்னரும் இருந்து கொண்டே இருப்பேன்; இந்த உடலை அடைவதற்கு முன்பும் நான் இருந்தேன்; ஆத்மா சிருஷ்டிக்கப்பட்ட பொருளன்று. ஏனெனில் சிருஷ்டி என்பதற்கு சேர்க்கை என்பது பொருள். அந்த சேர்க்கைப் பொருள் நிச்சயமாக என்றாகிலும் அழியவே வேண்டும். ஆதலின் ஆத்மா என்பது சிருஷ்டிக்கப்பட்ட வஸ்துவானால் உறுதியாக அழிய வேண்டியதுதான். சிலர் பிறவியில் சுகங்களையே அனுபவிக்கின்றனர். சிலர் பூரண தேகாரோக்கியம், அழகு அமைந்த மேனி, மனோவலிமை முதலியவற்றுடன் எவ்விதக் குறையும் இன்றி பாக்கியவந்தர் களாகப் பிறக்கின்றனர். வேறு சிலர் நிர்ப்பாக்கியர்களாக உழலுகின்றனர். சிலர் அங்கஹீனமுற்றும், பின்னும் சிலர் மந்த புத்தி உள்ளவர்களாயும் தோன்றி கஷ்டப்படுகின்றனர். அவர்கள் அனைவரும் சர்வேஸ்வரனால் படைக்கப்பட்டவர்கள் ஆனால் நியாயவானும் கருணாநிதியுமான சர்வேஸ்வரன் அத்துணை பட்சபாதமாக ஒருவனை சுகியாய் மற்றொருவனை துக்கியாயும் படைப்பானேன்? இதற்கு இந்தப் பிறவியில் துக்கப்படுவோர் மறுபிறப்பில் சுகத்தை அனுபவிப்பர் என்பதும் தக்க சமாதானம் ஆகாது. நியாய மூர்த்தியும் கருணாநிதியுமான கடவுளின் சன்னிதானத்தில் ஒருவன் ஏன்

இப்படி நிர்ப்பாக்கியனாக வேண்டும். இதனை நினைக்கும் போது என் உள்ளம் உருகுகின்றது, கலங்குகின்றது எனினும் பிரகிருதி அதாவது மாயாசக்தியின் ஏற்பாடு அவ்வாறு இருக்கிறது. ஆனால் இதற்கு வேறு ஆறுதல் இல்லையா? இந்த துன்பத்தினின்றும் தப்பிப்பிழைக்க உபாயம் ஏதும் இல்லையா என்ற இரக்க மொழிகள், பிறவித்துன்பத்தில் உழலும் மனத்தின் உள்ளகத்தில் இருந்து கிளம்பிற்று. அவ்வொலி கருணாநிதியான கடவுளின் சிம்மாசனத்தை எட்ட அங்கு இருந்து ஆறுதல் அளிக்கும் அபயமொழிகள் ஓர் வேதகால மகரிஷியின் மனதினிடத்தே வந்து இறங்கின. அவர் ஆன்மகோடிகளின் முன்னாக எழுந்து கம்பீரமாக உரக்க வெளியிட்ட சேதியாவது,

''ஹே அழிவற்ற ஆனந்த சொரூபத்தின் குழந்தைகளே உங்களுடைய உண்மை சொரூபமான அறிவானந்த சொரூபத்தை அறிவாய். அதனால் இந்த கால கர்ம சக்கரத்தினின்றும் தப்பிக்கலாம்'' என்று அருளிச்செய்தார்.

இந்த அமிர்த மொழிகளை அமெரிக்கவாசிகளாகிய உங்கள் முன்னிலையில் உங்களை ஹே! ஆனந்த சொரூபத்தின் குழந்தைகளே என்று அன்போடு அழைக்கின்றேன். மேலும் விசார சாகரத்தின் 4-ம் தரங்கம், மாணவனுடைய கேள்வி:

''ஏ குருவே! தாங்கள் சர்வக்ஞராய் இருக்கின்றீர்கள். நாங்கள் ஜனன மரணாதி துக்கரூப சம்சாரத்திற்கு பயப்படு கிறோம். அவை நிவர்த்திக்கும் உபாயமும் பரமானந்த பிராப்தியாகிய மோட்சத்தை அடைய உபாயமும் அருள் செய்ய வேண்டும்.''

**குரு உத்தரம்:** ''அன்பனே துக்க நிவர்த்திக்கும் பரமானந்த பிராப்திக்கும் மோட்சம் என்று பெயர்'' சிஷ்யனுடைய உள்ளத்தில் மோட்ச இச்சை இருக்கிறது. சிஷ்யனே! பரமானந்த பிராப்திக்கும் உனக்குண்டான இச்சை பிராந்தியினாலேதான் என்று அறி; ஏன் எனில் நீ இயற்கையிலே பரமானந்த சொரூபமாய் இருக்கின்றாய். ஆனதால் அதை அடைய நீ இச்சிப்பது சரியல்ல உன்னுடைய சொரூபமோ எப்போதும்

அடையப்பட்டதாகவே இருக்கிறது என்று கூறியிருப்பதால் நமது யதார்த்த சொரூபம் பரமானந்த சொரூபமாய் இருக்கும் போது பந்தமோ! மோட்சமோ! அல்லது குறைபாடோ! துக்கமோ! உளதாக நினைக்கவேண்டியதில்லை, எனவே நீங்கள் ஜீவன் முக்தனாக இருந்துகொண்டு இன்றியமையாத செயல் ஆற்றுங்கள்.

இவ்வாறு அந்தர்யாமியின் உத்தரவுப்படி இந்த கடிதம் எழுதியிருக்கிறேன். பலமுறை சிந்தித்துப் பாருங்கள்.



## கடிதம் 4

*18-7-1978*

நிற்க, பிரம்மாநந்தத்தைப் பற்றி பிரபல வேதாந்த நூலான கைவல்யத்தில் கூறியிருப்பதை கீழே பாருங்கள்.

***"தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்***
***விழிதுயில் வோர்கள்***
***தாங்கும் மலரணை நன்றாகச்சிலர் சம்பா திப்பது தானசுகம்,***
***தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா***
***அமளிசெய் பொழுதே போல்,***
***ஆங்குள் வெளிகளு மறியா வநுபவ மதனாலது பிரமாநந்தம்"***

குறிப்பு:- இதில் அமளி என்பது தூக்கத்தை குறிக்கும். இச்செய்யுளின் பொருள், ஒவ்வொரு மனிதர்களும் பிரதி தினமும் தூங்குகின்றபோது உண்டாகும் சுகம் மெய்ப் பொருளாகிய கடவுளின் சொரூப சுகமாம் என்று கூறுவது நான்கு வேதத்தின் கருத்தாகும். திருஷ்டாந்தமாக பாய், தலையணை, கொசுவலை முதலிய சுக சாதனங்கள் சம்பாதிப்பது பின் அனுபவிக்கப் போகும் தூக்கத்தில் வரும் பிரம்மாநந்த சுகத்தை வரவேற்கப்படுவதை அறிவிக்கும் அறிகுறியாகும். அந்த பிரம்மாநந்தத்தில் நலம், தீது, ஆண், பெண் என்ற பேதமும் தெரியாது. அன்றியும் நாம் உள்ளே இருக்கின்றோமா? அல்லது வெளியேயிருக்கின்றோமா?

என்பதும் தெரியாது என்பதாகும். மீண்டும் நனவுக்கு வரும்போது நான் சுகமாய் இருந்தேன் என்று கூறுவது சகல பேர்களுக்கும் அனுபவமாம். அந்த சுகம் மண், பெண், பொன் முதலியவற்றில் நின்று வந்ததாகக் கூறலாமா? இல்லை, இவைகள் ஒன்றும் அந்த தூக்கத்தில் இல்லை. அதனால் அந்த சுகம் ஆத்மாவின் சொரூப சுகமேயாம். இவ்வாறே அதர்வண வேதத்தின் ''சுழுத்தி காலத்தில் ஜீவன் சுகரூபமான பிரம்மத்தை அடைகின்றான்'' என்று கூறி இருப்பதைக் காண்க.

''அறிவான தெய்வமே தேஜோமய ஆனந்தமே'' என்று தாயுமான சுவாமிகள் கூறிப்போந்துள்ள தெய்வத் தன்மை வாய்ந்த இந்த அறிவுக்கு ஆதாரம் சுழுத்தியில் உள்ள ஆனந்தமேயாகும். எனவே சுழுத்தி ஆனந்தமே அறிவாக நனவில் செயல்படுகின்றது. ஆனந்தத்தில் நின்று அறிவு வெளிப்படுகின்றபோது அறிவுக்கு உண்மை சொரூபம் ஆனந்தமேயாகும். மண்ணில் நின்று தோன்றிய குடம் மண்ணாயவாறு போல எனக்கொள்க. துக்கம் தோன்று கின்றதே எனின் விருப்பு வெறுப்பு நாமரூப நாட்டம் இவை களால் உண்டாவதாகும். இந்த அறிவுக்கு தெய்வத்தன்மை பெரியோர்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறபோது அறிவுக்கு ஆதாரமான பிரமாநந்தத்தை எங்ஙனம் கூறமுடியும். சர்க்கரையின் தித்திப்பு எவ்வாறு இருந்தது என கூறமுடியுமா? புளியின் புளிப்பு எவ்வாறு இருந்தது என ஒருவருக்கு அறிவிக்க முடியுமா? இதுபற்றி அன்றோ! தொல்காப்பியத்திற்கு உச்சிமேல் புலவர் கொள் நச்சினார்க்கிணியார் இயற்றி அருளிய உரையில் ''ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்து பிறந்த பேரின்பம் தத்தமக்கு புலனாக இவ்வாறு இருந்தது என கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்து உணர்வே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாதலின் அதனை அகம்'' என்றார். இதன் பொருள் சிற்றின்பம் இவ்வாறு இருந்தது என கூறமுடியாது. அதனால் அதை அனுபவித்தது அறிவுதான். எனவே இந்த அறிவானந்த சொரூபமே நான் என்ற சொல்லுக்குப் பொருளாக கொள்ளவேண்டும். எனவே இந்த சிற்றின்பமே பேரின்பத்தின் லேசமாம் என்பதாயிற்று.

இந்த அறிவு தனக்கு ஆதாரமான சுழுத்தி ஆனந்தத்திற்கு செல்லுகின்றபோது அங்கு குருவும் இல்லை, சிஷ்யனும் இல்லை, ஆண்டான் அடிமையும் இல்லை என்று ஆதிசங்கரர் கூறியிருக்கிறார். உலகத்தில் மனிதர்கள் அனுபவிக்கின்ற சகலவித ஆனந்தங்களும் பிரமாநந்தத்தின் லேசங்களாம். அதாவது சமுத்திரத்தின் சிறுதுளிகள் போன்றதாம். பிரளய வெள்ளக்கடல் போன்றது பிரமாநந்தமாம் இந்த நிலைமை எந்தவித அப்பியாசத்தாலும் கைகூடாது. தனது உண்மையை தக்கார்பால் விசாரித்து அறியும் பழக்கத்தால்தான் கைகூடும். உதாரணமாக கைவல்யம் சந்தேகம் தெளிதல் படலம் 63-வது செய்யுள். ''இந்த ஞானந்தான் வருவதெப்படியெனிலிடை விடா விசாரத்தால் வந்தடைந்திடும் விசாரந்தானேதெனில் அனாதியாஞ் சரீரத்தில் இந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டு மொன்றாகூடும் பந்தமெது வீடேதனவுசாவுதல் பகர்விசாரமதாகும்''.

இதன் பொருள்:- இந்த ஞானம் ஒருவனுக்கு எப்படி வரும் எனில் இடைவிடாத ஆத்ம விசாரத்தால் வரும். எதைப்பற்றி விசாரிப்பதெனில் அனாதி காலந்தொட்டு இந்த சரீரத்தில் நான் நான் எனக் கூறுவது எது? சடம் எது? சித்து எது? இரண்டும் ஒன்றாகக்கூடும் பந்தமெது? வீடேது என விசாரிப்பதே உண்மை விசாரமாகும். இங்ஙனம் விசாரித்துப் பார்க்கும்போது நாம் அனுபவிக்கும் சகல விஷய சுகங்களும் சடப்பொருளில் இல்லை. அறிவு தன் சொரூப சுகத்தை விஷயத்தின் வாயிலாக அனுபவிக்கின்றது. இந்த உண்மையை விவேகம் அற்றவர்கள் அறிவது இல்லை. சடத்தின் நின்று சுகம் வருவதாக அவர்கள் கருதுகிறார்கள். அது எதுபோல் எனில் பசையற்ற ஒரு பழைய எலும்பை நாய் கடிக்கும்போது தன் பல் இடுக்கிலிருந்து வரும் இரத்தம் எலும்பிலே இருந்து வருவதாக விபரீதமாகக் கருதி மீண்டும் மீண்டும் கடிக்கின்றது. உண்மையில் தன் பல்லிலே இருந்துதான் அந்த இரத்தம் வருகிறது. அதை அந்த நாய் அறிவதில்லை. இதுபோல் தன்னை ஆனந்த சொரூபம் என்றறிந்த ஞானிகள் சகல விஷயானந்தங் களும் தனது சொரூபாநந்தத்தின் திவலைகளேயாம் என்று

அறிந்து அனுபவித்து சுகமாய் வாழ்கிறார்கள். அதுபோல் நீங்களும் தன்னை அறிவானந்த சொரூபமாகக் கண்டு ஜீவன் முக்தர்களாய் வாழ்வீர்களாக, எலும்பை நாய் கடிப்பதற்கு உவமானம் சீர்காழி திருஞானசம்பந்தருடைய இரண்டாவது சிஷ்யர் கண்ணுடைய வள்ளலார் எழுதிய ஒழிவில் ஒடுக்கம் என்ற புத்தகத்தின் 293-வது பக்கத்தில்:

## வெண்பா

**பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி**
**விட்டுவிட மாட்டார் வெறுவீடர் - வெட்ட**
**வெறுவெலும்பை நாய்கறண்ட வேந்தர்வர நாய்பார்த்**
**துறுமுவதை காட்டுவோ மோ.**

இதன் பொருள்:- பட்டினத்து சுவாமிகளையும் அவர் சிஷ்யராகிய பத்ரகிரி சுவாமிகளையும் ஆகிய பெரியோர்களின் கொள்கையைப் பின்பற்றி ஆசையை குறைக்காதவர்கள் வீணர்கள் ஆவார்கள். பசையற்ற வெறும் எலும்பை நாய் கடித்துக் கொண்டிருக்கிறபோது ஒரு வேந்தன் வேட்டை ஆடிவிட்டு அந்தவழியே வரும் நேரத்தில் அந்த நாயானது தனது எலும்பை கவர்ந்து கொள்வதற்காக வேந்தன் வருவதாகக் கருதி உறுமுகின்றது, அதுபோல் ஒரு பெரும் தனவானிடத்தில் ஒரு ஞானி செல்லுமேயானால் அந்த செல்வந்தன் தன் செல்வத்தைக் கவர வருவதாகக் கருதி கடிந்துபேசுவான்.

ஞானிகளுடைய பெருமையை அறிவதற்கு போதுமான கல்வி இல்லாத காரணத்தால் செல்வந்தர்கள் ஞானிகளிடத்தில் பழகமாட்டார்கள். உதாரணமாக சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவிற்கு செல்வதற்கு முன் நான்கு ஆண்டு காலம் தமிழகத்தில் கால்நடையாக சுற்றினார்கள். யாரும் கவனிக்க வில்லை என்பது உலக பிரசித்தமாம். பிறகு அமெரிக்காவுக்குச் சென்று ''சர்வ மத சகோதர சங்கத்தில்'' பேசுகின்றபோது ''ஹே ஆனந்த சொரூபத்தின் குழந்தைகளே'' என்று ஆரம்பித்து ''நீங்கள் எல்லோரும் ஆனந்தத்திலேயிருந்து தோன்றி

ஆனந்தத்திலே வாழ்ந்து ஆனந்தத்திலே லயம் ஆகின்றீர்கள்'' என்று விளக்கிக் கூறியதன் காரணமாக உலகின் முன்னணியில் இன்று அவர் நிற்கிறார். இந்த உண்மையை ''நான் கண்ட உண்மை'' என்ற புத்தகத்திற்கு நான் அளித்த முன்னுரையில் பிரம்ம சூத்திரத்திலேயிருந்து ஒரு சூத்திரத்தை மேற்கோளாகக் காண்பித்திருக்கிறேன். அந்த சூத்திரம் யாதோ எனில் ''ஆனந்தாதய ப்ரதானஸ்ய.''

**இதன் பொருள்:-** எல்லா பொருள்களுக்கும் அதாவது எறும்பு முதல் யானை பரியந்தம் உள்ள தோற்றங்களுக்கு உபாதான காரணம் அதாவது முதற் காரணம் (குடத்திற்கு மண்போல்) ஆனந்தமேயாம். எனவே ஆனந்தத்தில் இருந்து தோன்றிய பொருள்கள் முக்காலத்தும் ஆனந்தமாக இருக்கவேண்டும் என்பதற்கு ஐயம் இல்லை. சைவ சித்தாந்த நூல் 14-க்குள் ஒன்றான திருவருள் பயன் என்ற புத்தகத்தின் முதற் பயன்:

> ''அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
> நிகரில் இறைநிற்கும் நிறைந்து''

**இதன் பொருள்:-** அகர ஒலி ஒன்றே ஏனைய எல்லா எழுத்துக்களுமாய் அமைந்திருப்பது போல் ஒப்பற்ற இறைவன் அறிவுவடிவாய் எல்லா உயிர்களிடத்திலும் விளங்குகிறது என்பதாம்.



## கடிதம் 5

*27-11-1978*

நிற்க, நீங்கள் அன்புடன் எழுதிய தபால் கிடைக்கப் பார்த்தேன். அதில் நீங்கள் எழுதியிருந்த விஷயங்கள் எல்லாம் படித்துப் பார்த்தேன். நீங்கள் பேரானந்தக் கடலில் மூழ்கியிருப்பதுபோல் தெரியவந்தது. வேதாந்தம் ''நூதன விவேகியின் உள்ளம் நுழையாது, நுழையுமாகில் பூதஜென்மங்கள் கோடி புனிதனாம் புருடனாமே'' என்று கைவல்யம் கூறியிருப்பதால்

பூத ஜென்மம் அதாவது பல்லாயிரம் பிறப்பில் செய்த நிஷ்காம புண்ணியத்தின் பலனாக உங்கள் மனதில் பிரம்ம வித்தை நுழைந்து இருப்பதாகத் தெரியவருகிறது. ''இனிப் பிறவா முடிவில் மெய்ஞானம் எளிதில் உண்டாம்'' என்று வசிட்டமாமுனிவர் கூறியிருக்கிறார்.

இத்துடன் இருக்கும் கட்டுரை கடிதத்தை பலமுறை படித்துப் பார்த்து பின் உங்கள் அபிப்ராயத்தையும் உங்கள் உடல் நலத்தைப் பற்றியும் எழுதுவீர்கள் என நம்புகிறேன்.



## கடிதம் 6

5-2-1979

நீங்கள் குடத்துக்குள் இருக்கும் விளக்குபோல் இராமல் பெட்ரோமாக்ஸ் லைட் மாதிரி நீங்கள் அறிந்த ஆத்மீகத் துறையில் தன் சொரூபானந்தத்தை நீங்களும் அனுபவித்துக் கொண்டு உங்கள் நண்பர்களுக்கும் விளக்கிக்காட்டி பேரின்பக் கடலில் மூழ்கச் செய்து ''இனிப் பிறவா முடிவிலே மெய்ஞானம் எளிதில் உண்டாம்'' என்ற ஆன்றோர் வாக்கியப்படி பிறவிக் கடலில் விழாமல் கரைசேர்ப்பதில் எடுத்துக் கொண்ட முயற்சிக்காக பாராட்டுகிறேன். அந்த முறையில் உங்களுடைய நண்பர் M. கணபதி அவர்கள் ஆத்ம ஞானப் பாதையில் திரும்பி இருப்பதை அறிந்து சந்தோஷம் அடைந்தேன். அது பூர்வ புண்ணியத்தின் பயனாகும் என்பதற்கு ஐயம் இல்லை. பிரம்ம வித்தை ஆனது ''நூதன விவேகியின் உள்ளம் நுழையாது நுழையுமாகில் பூத ஜென்மங்கள் கோடி புனிதனாம் புருடனாமே'' என்று கைவல்ய நவநீதம் கூறுவதால் அறியலாம்.

மற்றும் உங்கள் எல்லோருக்கும் எனது உளம் கனிந்த ஆசி உரித்தாகுக.



## கடிதம் 7

*6-3-1979*

நிற்க, நீங்கள் அன்புடன் 19-2-79-ல் எழுதிய தபால் கிடைக்கப் பார்த்தேன். அதில் விரிவாக பல விஷயங்கள் காணப்பட்டது. எனினும் குறிப்பாக தமிழ்வாணன் எழுதிய கதை ஒன்றும் எழுதியிருந்தீர்கள். அதன் சாரம் என்னவென்றால் மக்கள் தங்கள் வாழ்க்கையில் தோன்றும் சுக துக்க அனுபவங்கள் இந்திரஜாலப் பொருள்கள் போல் பொய்யாம். அதில் மயங்காமல் ஆத்ம சிந்தனையில் இருக்கவேண்டும் என்பதாம். அறிந்தவன் மயங்கான் என்பது கைவல்ய செய்யுள். நிற்க, 18-2-79-ல் திரு. முருகேசன் அவர்கள் இங்கு நலமாக வந்து சேர்ந்தார். அவர் மூலமாக உங்கள் நலன்களை தெரிந்துகொண்டேன். திரு. கணபதி. அவர்களின் நலத்தையும் அறிந்தேன். உங்கள் எல்லோருக்கும் எனது மனம் உவந்த ஆசி உரித்தாகுக. நிற்க, உங்களுடைய சத்சங்க பழக்கத்தினால் முருகேசன் அவர்கள் ஜனகராசனைப் போல் ஜீவன் முக்தி நிலையில் இருந்து கொண்டு தங்கள் குடும்ப வாழ்க்கையை நடத்தி இன்புறக்கூடிய அறிவாற்றல் பெற்றுள்ளதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன்.

நிற்க, சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்தில் ''ஹே! அழிவற்ற ஆனந்த சொரூபத்தின் குழந்தைகளே'' என்று அழைத்திருப்பதுபோல் அந்த மதுரமான நாமத்தால் உங்களை நான் அழைக்க எனக்கு அனுமதி அளிக்கவேண்டும் என்று சுவாமி விவேகானந்தர் சிக்காகோவில் கேட்டுக் கொண்டுள்ளதை நாம் அவர் பிரசங்கத்தின் வாயிலாக அறிந்தோம் அல்லவா? இந்த வாக்கியம் சகல வேதத்தின் அடிப்படையின் முடிவான வாக்கியமாகும்.

இந்த வாக்கியப்படி பார்த்தால் நாம் சச்சிதானந்த சொரூபிகள் என்பது புலனாகின்றது. ஆனால் நாம் சச்சிதானந்த சொரூபமாய் இருக்கின்றோம் என்பதை பலர் அறியவில்லை.

அப்படி அறியாத காரணத்தால் அவர்கள் வெளியுலகில் ஆனந்தம்தேடி பல இன்னல்களுக்கு ஆளாகிறார்கள். அது எதுபோல் எனில் புனுகுப்பூனையின் உடலில் புனுகு இருக்கிறது என்பதை அந்தப் பூனை அறியவில்லை. கஸ்தூரிமான் உடலில் கஸ்தூரி இருப்பதை அந்த மான் அறியவில்லை, மணிப்பாம்பின்வாயில் இருக்கும் இரத்தினத்தின் ஒளியினால் அதற்கு இரை (உணவு) தேட முடியவில்லை. அது ஒளி தேடி அலைகின்றது. ஆனால் இரத்தினத்தைக் கக்கி வைத்துவிட்டால் ஒளி தானாக வந்து விடும். இந்த உண்மையை அறியாது, அந்தப்பாம்பு ஒளியைத் தேடி அலைகின்றது. அதுபோல் ஒவ்வொருவர் இடத்திலும் இருக்கும் ஆத்மாவாகிய கடவுளை வெளியில் தேடி அலைகின்றார்கள். சுவாமி விவேகானந்தர் கூறியது போல் நாம் ஆனந்த சொரூபிகள் என்று அறியாமல் வெளியில் ஆனந்தம் தேடி அலைபவர்களைப் பற்றி சீர்காழியில் தோன்றிய திருஞானசம்பந்த சுவாமிகளின் முதல் மாணவராகிய சிவஞானவள்ளலார் எழுதிய வள்ளலார் சாஸ்திரம் 144-வது பக்கத்தில் உள்ள ஒரு பாடலைப் பாருங்கள்.

## வெண்பா

**"ஆறாறு தத்துவத்துக் கப்பா லதீதத்தே**
**வேறாகத் தம்மை விசாரித்துங் - கூறாக**
**வாநந்தந் தாமென் றறியா வறிவிலிக**
**ளாநந்தந் தேடி யலையும்"**

இதன் பொருள்:- ஆறு ஆறு முப்பத்தாறு தத்துவத்தால் அமைந்த இந்த உடம்பை விளக்கிக்கொண்டிருக்கும் ஆத்மாவைப்பற்றி நன்றாக விசாரித்தும் அந்த ஆத்மா ஆனந்த சொரூபம் என்று அறியாத அறிவிலிகள் வெளி உலகில் ஆனந்தம் தேடி அலையும் என்பதாம். இந்த வெண்பாவினால் வெளியில் ஆனந்தம் தேடுவது அறிவிலிகள் செயலாகும் என்பதாயிற்று, 36 தத்துவங்களாவன: பஞ்சபூதம் 5, சூட்சும சரீர தத்துவம் 20, தூல சரீர தத்துவம் 6, மாயை 1, மாயாப் பிரதிபிம்ப ஈசுவரன் 1, அவித்தை 1, ஜீவன் 1, பிரம்மம் 1

ஆக தத்துவம் 36. இதில் பிரம்மம் ஒன்றே நித்யம். பாக்கி 35-ம் அநித்தியமான கற்பிதப்பொருள். இதில் நித்தியமான பிரம்மமே தன் வாஸ்தவ சொரூபம் என்று அறிந்தவன் ஞானியாவான். இந்த ஞானம் வருவது அனந்தங்கோடி ஜென்மத்தில் செய்த நிஷ்காம புண்ணியத்தின் பலனாகும். இதை அஸ்தாமலகர் சரித்திரத்தால் அறியலாம். அதாவது ஆதிசங்கரர் திக்கு விஜயம் செய்தபோது மேற்கு திசையில் ஸ்ரீவலி என்னும் கிராமத்தில் 13 வயது உள்ள ஒரு சிறுவன் வாய் பேசாமல் ஊமையாக இருந்தான். அவன் பிதாவானவர் அவனை அழைத்துக் கொண்டு போய் சங்கரருடைய பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரிக்க செய்தார். அப்பொழுது அச்சிறுவனைப் பார்த்து சங்கரர் கீழ்வருமாறு கேட்கிறார். அந்தக் கேள்விகளை கீழ்வரும் செய்யுளால் காணலாம். இந்த செய்யுளை வடமொழியில் இருந்து தமிழில் மொழிபெயர்த்தவர் திருவண்ணாமலையில் ரமணாஸ்ரமத் தலைவர் ரமணரிஷி அவர்களாவார்.

***"இங்குறு நீயார் பிள்ளாய் யாருடை மைந்தனீதா***
***னெங்கு செல்கின்றா யுன்பே ரென்ன நீயெங்கிருந்து***
***மிங்குவந் தனையென் னுள்ள மின்புற விசைப்பாயென்று***
***சங்கர னவிலப் பாலன் சாற்றிட வாய் திறந்தான்"***

இதன் பொருள் வெளிப்படை. இந்த செய்யுளின் வாயிலாக ஊமையாக இருந்த பாலகன் வாய்திறந்து அளித்த பதில் யாதோ எனின் கீழேப் பாருங்கள்.

## செய்யுள்

***"நானலன் சுரனியக்க னானல அந்தணன் மற்***
***றரசனும் வணிகன் சூத்ர னல்லனற் பிரமசாரி***
***கிரகியும் வானப் ரத்தன் கேடகல் சந்நியாசி***
***நிரையினி லாரு மல்லே னிச போத வடிவனாமே"***

இதன் பொருள்:- நான் மனிதனல்லன், தேவனும் அல்லன், ராட்சதனும் அல்லன், அந்தணனும் அல்லன்,

அரசனும் அல்லன், வணிகனும் அல்லன், சூத்திரனும் அல்லன், பிரமசாரியுமல்லன், கிரகஸ்தனுமல்லன், வானப் பிரஸ்தனுமல்லன், சந்நியாசியுமல்லன் இந்தப் பூமியில் யாரும் நானல்ல. பின்னே நான் யார் தெரியுமா? நித்தியமாய் அழியாத அறிவானந்த சொரூபமான பிரம்மமேயாம் என்றான். இதைக் கேட்டு ஆச்சார்ய சுவாமிகளும் இவரை தன் சிஷ்யனாக்கி அஸ்தாமலகர் என்ற தீட்சா நாமம் சூட்டி ஆச்சார்யருடைய நான்கு சிஷ்யர்களுள் ஒருவராய் விளங்கினர். அஸ்தம்-கை ஆமலகம்-நெல்லிக்கனி அதாவது உள்ளங்கையில் இருக்கும் நெல்லிக்கனியே போல் ஆத்ம சொரூபத்தைப் பற்றி தெளிவாக விளக்கிக் கூறுபவர் ஆதலால் அவருக்கு அஸ்தாமலகர் என குருநாதரால் பெயர் சூட்டப்பட்டது. இந்த சரித்திரத்தினால் பூர்வஜென்ம வாசனையால் இளமைப் பருவத்திலேயே பிரம்ம ஞானம் உண்டாகும் என்பதற்கு ஐயமில்லை என்பதாயிற்று. ஆதி சங்கரர் திக்கு விஜயத்தின்போது காசியில் உள்ள கங்கா நதியோரத்தில் வரும்போது ஒரு தாழ்த்தப்பட்டவன் எதிரில் வந்தான். அவனைப் பார்த்து பண்டைக்காலத்து பழக்கம்போல் ''விலகிப் போ'' என்றார், உடனே அந்த தாழ்த்தப்பட்டவனுடைய கேள்வியைப் பாருங்கள்.

''ஹே! உத்தம சந்நியாசியே சுக்கில சுரோணிதத்தால் உற்பத்தியாகி அன்னத்தால் விருத்தியடைந்த இந்த சரீரம் குடத்திற்கு மண் போல் எனக்கும் உனக்கும் சமமாய் இருக் கிறது. எனவே அதை விலகிப்போ என்று சொல்லமுடியாது. அல்லது ஆகாயத்தைப் போல் எங்கும் நிறைந்து சைதன்ய சொரூபமான ஆத்மா எனக்குள்ளும் உனக்குள்ளும் நிறைந் திருக்கிறது. அதையும் விலகச்சொல்ல முடியாது. அப்படி யிருக்க நீ எதை விலகச்சொன்னாய் என்று கேட்டபோது; சங்கரர் ஆச்சரியப்பட்டு நான் உலக வழக்கத்தையொட்டிச் சொன்னேன். நீ சொன்னது உண்மையான கருத்தாகும். ஆகையால் நீயே எனக்கு குருநாதன் ஆகும் என்று அருளிச்செ சய்தார். இந்த வரலாறு மனீஷா பஞ்சகம் என்ற புத்தகத்தில் காணலாம். இதனால் சரீரத்தைப் பொருத்தே சகல விவகாரமும் ஆகும். ஆத்மா, நித்யம், பூரணம், அது பற்றற்ற பொருள்

என்று தெரிகிறதல்லவா? நித்தியப் பொருள் எதுவோ? அது எங்கும் நிறைந்த பொருளாகும். சடப்பொருள்களுக்கு நிறைபொருளாகும் தன்மையில்லை. உதாரணமாக ரஷ்ய நாட்டு ராக்கெட் சுக்கிரகிரகத்தைச் சுற்றிக்கொண்டு உடனுக்குடன் பூமியில் செய்திகள் பதிவாகிறது. சிங்கப்பூர், அமெரிக்கா முதலிய நாடுகளுடன் டெலிபோன் பேசுகிறது. ஜடப்பொருள்களுக்கே இடைவெளியில்லாது இருக்கிறபோது அதற்கு அப்பாலுக்கு அப்பாலாய் எங்கும் நிறைந்த பிரம்மமே நம் நிஜ சொரூபமேயாம். இந்த சொரூபானந்தம் ஒரு குடைக்கீழ் ஆளும் ஏக சக்ராதிபதியின் ஆனந்தமும் தேவர்களாகிய பிரம்மா, விஷ்ணு முதலியவர்களுடைய ஆனந்தமும் தேவேந்திரன் பிரகஸ்பதி முதலியவர்களுடைய ஆனந்தமும் இந்த சொரூபானந்தத்திற்கு ஈடாகாது என்பது தைத்ரீய உபநிடதத்தின் கருத்தாகும். மேற்கூறிய அவர்களுடைய ஆனந்தங்கள் பிரம்மானந்த சமுத்திரத்தின் அலைகளாகும். நமது சொரூபானந்தம் பிரளய வெள்ளக் கடல் போன்றதாகும். இதை கைவல்யம் சந்தேகம் தெளிதல் 131-வது பாட்டில் ''பிரளய வெள்ளக்கடல் பிரம்மானந்தம்'' என்றும் இதை அறிந்தவனுடைய பெருமையைப் பற்றி அடுத்த பாட்டில் ''அவன் அடி உதிரும் பொடிகளென்முடி மேலே'' என்றும் கூறியிருப்பதால் அறிந்துகொள்க. மேலும் கைவல்யம் 172-வது பாட்டில் ''சித்து நான் நிறைந்தோன் என்ற திடம் மறவாதிருந்தால் எத்தனை யெண்ணினாலும் ஏது செய்தாலும் என்ன? என்றும் மேற்படி 175-வது பாட்டில் ''என்ன புண்ணியமோ செய்தேன் ஏது பாக்கியமோ காணேன் நன்னிலம்தனில் எழுந்த நாரணன் கிருபையால் தன்னியன் ஆனேன்'' என்றும் மேற்படி 177-வது பாட்டில் ''வந்ததோர் இவ்வானந்த மகிழ்ச்சியாருடன் சொல்வேன்'' என்றும் 180-வது பாட்டில் ''குலவு சற்குருவின் பாத குளிர் புனல் தலைமேல் கொண்டால் உலகினில் தீர்த்தமெல்லாம் உற்ற பேர் அடைவார்'' என்றும் கூறி ஆனந்த தாண்டவம் ஆடுகின்றார்; நூலாசிரியரும், அதுபோல் நாமும் ஆனந்த சொரூபிகளாக வாழ்வோமாக!!!

மேற்காட்டிய 175-வது பாட்டில் 'தன்னியனானேன்' என்பதன் பொருள்: அடையத் தக்கவையெல்லாம் அடைந்து முடிந்தவன் எனக்கொள்க.

முடிவுரை:- சுவாமி விவேகாநந்தரின் நிச்சயமும், அஸ்தாமலகர் நிச்சயமும், ஆதி சங்கரருடைய நிச்சயமும், சங்கரருக்கு தாழ்த்தப்பட்டவன் சொன்ன நிச்சயமும், கைவல்யம் பாடிய தாண்டவராய சுவாமிகளின் நிச்சயமும் போல் உங்களுக்கும் ஆத்மாவே பிரம்மம், பிரம்மமே ஆத்மா அதுவே தன் நிஜசொரூபம் என்ற ஐயம் திரிபு அற்ற நிச்சயம் மேலும் மேலும் உறுதிபட ஆசீர்வதிக்கிறேன்.

மேற்கூறிய கருத்துக்கள் வேதத்தின் கருத்தாகும் என்பதை வள்ளலார் சாஸ்திரம் 144-வது பக்கத்தில்,

### வெண்பா

**"ஆக்கைநீ யல்ல வறிவுநீ யென்று மறை**
**வாக்கியங்க ணான்கும் வகுத்துரைக்க - நோக்காமல்**
**மீட்சிதரு மீசன் விழியெதிராய் முன்னின்று**
**காட்சிதா வென்னுங் கடை"**

இதன் பொருள் வெளிப்படை.

(காட்சி என்பது முன்னிலை சுட்டுப் பொருளைக் குறிக்கும்).



## கடிதம் 8

**2-5-1979**

நிற்க, நீங்கள் மெய் அன்புடன் 1-4-79-ல் எழுதிய தபால் கிடைக்கப் பார்த்தேன். அதில் நீங்கள் ஆனந்த பரவசத்துடன் பல அமுத வாக்கியங்கள் எழுதி இருந்ததைப் பார்த்து அக மகிழ்ச்சி அடைந்தேன்.

நானும் முருகேசன் அவர்களும் திருவாரூர் புலிவலத்தில் நடைபெற்ற பிரம்மவித்யாபீட ஆண்டு விழாவிற்கு போயிருந்தோம், அங்கு எனக்கு படுத்துத் தூங்குவதற்கு மெத்தை விரிப்பு ஒன்று அமைத்திருந்தது. அதில் படுத்து தூங்கினேன். காலையில் விழித்துக்கொண்ட பின் யோசித்துப் பார்த்தேன். தூக்கமே வராத எனக்கு இப்படி தூக்கம் வந்ததற்கு காரணம் மெத்தைதான் என்று தெரிந்துகொண்டேன். எனவே மெத்தை ஒன்று வாங்கவேண்டும் என்று நினைத்துக்கொண்டு நாங்கூருக்கு வந்தேன். ஐந்து நாட்களுக்குப்பின் எனக்கு மெத்தை ஒன்று வாங்கிக் கொடுக்கும்படி உங்களிடம் இருந்து முருகேசன் அவர்களுக்கு கடிதம் ஒன்று வந்ததைப் பார்த்தேன். நான் எண்ணிய எண்ணம் உங்கள் எண்ணத்திலும் பிரதிபலித்தது என அறிந்தேன். என்ன ஆச்சரியம்!!! உலகமே கடவுளின் சரீரமாய் இருக்கும்போது ஏன் பிரதிபலிக்காது என அமைதியடைந்தேன். உடனே முருகேசன் அவர்களும் நானும் சேர்ந்து கும்பகோணம் சென்று மெத்தை வாங்கி வந்து அதில் படுத்து சுகமாக பிரம்மானந்த சுகத்தை அனுபவித்து வருகிறேன். நன்றி! ''தூங்கும் சுகமது பிரம்ம சுகம்'' என்பது கைவல்யம், நிற்க மேலும் ஒரு மனிதனும் அவனுடைய எண்ணங்களும் உண்மையான கடவுள் சொரூபத்திற்கு வேறல்ல என்பதற்கு உபநிடதத்தில் கூறியிருக்கும் பஞ்ச ஐக்கியத்தைப் பாருங்கள்.

எல்லா ஸ்தூல சரீரமும் அவனுக்கு ஒரு ஸ்தூல சரீரமாகும், எல்லா சூட்சும சரீரமும் அவனுக்கு ஒரு சூட்சும சரீரமாகும், எல்லா காரண சரீரமும் அவனுக்கு ஒரு காரண சரீரமாகும், எல்லா சாட்சியும் அவன் சாட்சியாகும். எனில் இவன் சாட்சி வேறா? இல்லை. இதுவே பஞ்ச ஐக்கியமாகும். எனவே ''அவனன்றி ஓர் அணுவும் அசையாது'' என்பது உறுதியாயிற்று.

முன் கூறப்பட்ட எண்ணங்களின் ஒருமைப்பாட்டைப் பற்றிச் சிந்திப்போம். சமஷ்டி, வியஷ்டி அதாவது பன்மை ஒருமை பேதத்தால் தோன்றுகின்ற எண்ணங்கள் எல்லாம் ஒரே சமஷ்டி சூட்சும சரீரத்தில் நின்று உண்டாகின்றன. அதனால்

அந்த சமஷ்டி சூட்சும சரீரத்திற்கு இரணியகர்ப்ப சரீரம் என்று உபநிடதங்களில் கூறப்பட்டிருக்கிறது. இதில் பேராசை பெருக்கத்தால் ஏற்படுகின்ற சுயநல வேட்கையான எண்ணங் களுக்கு வியஷ்டி. அதாவது ஒருமையான எண்ணங்கள் எனப்படும். குடத்துக்கு மண்போல் சகல ஆத்மாக்களின் ஒருமைப்பாட்டு உண்மையை காண்பது சமஷ்டியான அதாவது மெய்யான எண்ணங்கள் எனப்படும். இந்நிலையை உணர்ந்த மகாத்மா காந்திஜீயின் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பல இன்னல்களான சந்தர்ப்பத்தில் எனது அந்தராத்மா அனுமதி கொடுத்தால் சத்தியாக்கிரகம் பண்ணுவேன் என்று கூறிப் போந்துள்ளதை ஹரிஜன் என்ற பத்திரிகையிலும் சத்திய சோதனையிலும் நீங்கள் பார்த்திருப்பீர்கள். மேலும் பன்மை ஒருமையான எண்ணங்களுக்கு உதாரணம் ஒன்றைக் கூறுகின்றேன். சமஷ்டியான நெருப்பை சமையல் மூலமாக உபயோகப்படுத்தி சுகம் அடைவது சமஷ்டி எண்ணமாகும். அந்த நெருப்பை எடுத்து வீட்டைக் கொளுத்தி விட்டு துன்பத்தை அடைவது வியஷ்டி எண்ணங்களாகும்.

இனி காந்திஜீ கூறிய அந்தராத்மாவைப்பற்றி பார்ப்போம்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் எழுதிய வேதாந்த சூடாமணியில் சர்வ வியாபகமாகிய ஆத்மா ஒன்று என்றும் அது சந்தர்ப்ப பேதத்தால் ஜீவாத்மா என்றும் அந்தராத்மா என்றும் பரமாத்மா என்றும் அழைக்கப்படுகின்றது. இவைகள் மூன்றுக்கும் மேற்கோளுடன் விளக்கம் தரும்படி கேட்டால், விளக்கம் தருபவர்கள் இலட்சத்தில் ஒருவர் கூட இல்லை. ''பிலாசபி'' வேதாந்தம் படித்தவர்கள் கூட சண்டபிரசண்டமாக பேசுகிறார்களே ஒழிய தானும் குழப்பத்தை அடைந்து பிறரையும் குழப்பம் அடையும்படி செய்கிறார்களே தவிர தெளிவு அடையவில்லை. சுருதி, யுக்தி அனுபவத்திற்கு ஒத்து தெளிவு அடைந்தவர்கள்; எனக்கு நாங்கூர் வாசம் 50 ஆண்டு காலத்தில் ஒருவர்கூட அகப்படவில்லை, பரிதாபம்!!!

இனி மேற்கூறிய ஜீவாத்மா முதலிய மூன்றுக்கும் மேற்கோள் செய்யுள் கீழே தருகிறேன்.

## வேதாந்த சூடாமணி செய்யுள்

*"காய்ந்துள விரும்பு போலுடம் பாதி*
*கலந்துறு குடும்பமென் வழக்கிற்*
*சார்ந்துளன் சீவான் மாவெனப் படுவான்*
*றாமரை யிலையினீர் போலத்*
*தோய்ந்துள குடும்பப் பெரு விவகாரந்*
*தோய்வில னந்தரான் மாவாம்*
*போந்துல கிற்குப் பரிதிபோற் சான்றாய்ப்*
*பொருந்தினோன் றான்பர மான்மா"*

**இதன் பொருள்:** ஜீவாத்மா லட்சணம் கூறப்படுகிறது.

ஒரு இரும்புத்துண்டை நெருப்பில் வைத்து பழுக்க வைத்தபின் பார்த்தால் ஒரே நெருப்புத்தணலாக தெரியுமே ஒழிய இரும்பின் தன்மை தெரியாது. அதுபோல் சச்சிதானந்த ரூபமாகிய ஆத்மா சடமாகிய சரீரத்தில் பிரதிபிம்பித்தவுடன் உடம்பின் சடத்தன்மை தெரியவெட்டாமல் சட உடம்பும் சேதனம் போல் தோன்றுகின்றது.

இக்காரணத்தால் சடமான உடம்பை நான் என்றும் உடம்புக்கு வேறான குடும்பம் எனது என்றும் தோன்றுகின்ற வழக்கத்தில் சார்ந்திருக்கும் காலத்தில் தேகியான இந்த ஆத்மாவிற்கு ஜீவாத்மா என்று பெயர் கூறப்படும்.

இனி அந்தராத்மாவின் லட்சணம் கூறப்படுகிறது. எங்கும் நிறைந்த ஆத்மா தேகோபாதியினால் ஜீவாத்மாவாக தோன்றிய பின் மீண்டும் குருசந்நிதானத்தில் வேதாந்த விசாரம் செய்து இந்த சட உடம்பு; நான் என்ற சொல்லுக்கு உண்மைப் பொருளாகுமா? ஆகாதே! இது பஞ்சபூத காரியமாயிற்றே; காரியம் அனைத்தும் பொய் என்பது வேதவாக்கியம் அல்லவா? உதாரணமாக "காரியம் தனக்கு உற்பத்தியில்லாமையால் இல்லா ஒன்றாம்" என்று பிரம்ம கீதையில் கூறியிருப்பதால் காரியம் பொய் என்பதற்கு ஐயம் இல்லை. குடத்தை

அறிந்தவன் குடத்துக்கு வேறு என்று அறிவதுபோல் சடமான உடம்பை அறிபவன் உடம்புக்கு வேறு என்றும், அப்படி அறிந்த அறிவே சச்சிதானந்தம் என்றும், அதுவே தன் நிஜசொரூபம் என்றும் ஐயந்திரிபற உணர்ந்தபின் தான் தோய்ந்துள குடும்ப மாகிய பெருவிவகாரத்தில் தாமரையிலையில் நீர்த்துளிகள் பற்றாது இருப்பதுபோல் பற்றற்று சகல விவகாரமும், செய்துகொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில், இந்த ஆத்மா அந்தராத்மா என பெயர் பெறுகின்றது.

மீண்டும் குரு சந்நிதானத்தில் செய்யும் வேதாந்த விசாரணையின் பயனாக ஜீவாத்மாவாகவும், அந்தராத்மா வாகவும் விளங்கும் சேதன சொரூபமே பரமாத்மாவாகவும் விளங்குகின்றது. அது எவ்வாறு எனின் செய்யுளின் நான்காவது அடியைப் பாருங்கள். ''பரிதிபோல்'' அதாவது சூரியனைப் போல் சான்றாய் அதாவது சாட்சியாய் பொருந்தினோன் பரமாத்மா. அதாவது தோன்றி விளங்கும் உலக விவகாரத்திற்கு சூரியன் எப்படி ஒன்றிலும் பற்றின்றி சாட்சிமாத்திரமாக விளங்குகின்றதோ அப்படி இந்த அந்தராத்மாவும் தேகாதி பிரபஞ்சத்திற்கு சாட்சியாய் ஒரு பற்றும் இன்றி விளங்குவதால் பரமாத்மாவாகவும் இருக்கிறது. இந்த பரமாத்மாவே நான் என எவன் உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல் உணர்ந்து அமைதியாக இருப்பானோ அவனே ஜீவன் முக்தன் என்பது இச்செய்யுளின் திரண்ட பொருளாகும்.

இனி ஆத்மாவுக்கு சாட்சித்துவம் உண்டா எனின் உண்டு எங்ஙனம் எனின் ஒரு அரசன் தாம் கண்ட கனவில் பிச்சை ஏற்று உண்பவனாக தன்னைக் கண்டபின் நனவில் அதை பிறரிடம் சொல்லுவதற்கு அவன் வெட்கப்படவில்லை. ஏனெனின் கனவில் கண்ட நிகழ்ச்சிகள் பொய்யென்று அறிந்து வினோதமாக கூறுகின்றான். ஆனால் கனவில் கண்ட காட்சிகளுக்கு அவன் சாட்சி என்பது உறுதியாயிற்று. இதை ''ஆலமர் கடவுளாணை அவைகளுக்கெல்லாம் சாட்சி நீயே'' என்றும் ''ஓய்ந்த கனவிற் கண்ட பழங்கதை ஓதுவன் வாதனையால்

ஆய்ந்து அறிவுற்றவனப்படி செப்புகினும் ஆபாசனும் ஆகான்'' என்ற கைவல்ய செய்யுளாலும் அறியலாம். மேலும் நன்மை தீமைகள் சேரினும் கண்ணாடியின் செயல்போல் பற்றாது இருப்பவனே ஞானி என்று கைவல்யம் கூறுவதாலும் அறியலாம். இவ்வாறாக ஜீவாத்மா, அந்தராத்மா, பரமாத்மா ஆகிய மூன்றுபெயரும் ஒரு பொருளைக் குறிக்கும் பரியாயப் பெயர்களாகும். உதாரணமாக அஸ்தம், கரம், பாணி என்று கைக்கு மூன்று பெயர் கூறினாலும் பொருள் ஒன்றுதானே. மேலும் ஒரு பெண்மணியை தன் தாயாரின் பார்வைக்கு மகளாகவும், சகோதரன் பார்வைக்கு தங்கையாகவும் புருஷன் பார்வைக்கு மனைவியாகவும், அவள் பெற்றெடுத்த குழந்தையின் பார்வைக்கு தாயாகவும் இப்படி பலவிதமாக காட்சி அளித்தாலும் அவள் ஒருத்திதானே! அதுபோல ஆத்மா ஒன்றே சந்தர்ப்ப பேதத்தால் ஜீவாத்மாவாகவும், அந்தராத்மாவாகவும், பரமாத்மாவாகவும் எல்லோருடைய உள்ளத்திலும் விளங்கிக் கொண்டு இருப்பதை சிறிது சிந்தித்துப் பார்த்தால் அறியலாம்.

இவ்வாறாக ஆத்ம விசாரம் செய்தபின் தன்னை சர்வ சாட்சியான பரமாத்ம சொரூபன் என்று நிச்சயம் செய்தல் வேண்டும். இந்த நிச்சயத்துடன் சகல விவகாரமும் பற்றற்று செயலாற்றவேண்டும். ஞானிகளின் உள்ளத்தில் ஒரு பற்றும் இல்லை என்பதற்கு உதாரணம் காட்டுகிறார் சீர்காழி வள்ளலார். உலக நூல்கள் ஓதி காலத்தை வீணாக்காமல் அறிவியல் செய்யுள்கள் தமிழ்மக்கள் வாயில் தேனொழுகுவது போல் ஒழுக வேண்டும் என்ற அவாவினால் ஒரு செய்யுளை எழுதுகிறேன்.

**சீர்காழி வள்ளலார் சாஸ்திரம்**

## வெண்பா

***"ஒரா யிரம் வருட மோதத் திருந்தாலு***
***மீரங் கிடச்சைக் கிலாமைபோ - லாராக்***
***குடும்பத் திருத்தாலுங் கோதற்ற முக்த***
***னடங்கத் துறந்தவனே யாம்"***

இதன் பொருள்:- இச்செய்யுளில் கிடைச்சை, என்பது தண்ணீரில் கிடக்கும் நெட்டியைக் குறிக்கும். அதாவது ஒரு ஆயிரம் ஆண்டு காலம் நெட்டியானது தண்ணீரில் கிடந்தாலும் அதன் உள்ளே ஈரம் ஏறாது, அதுபோல் ஒரு ஞானியானவன் துன்பம் விளைவிக்கக்கூடிய குடும்பத்தில் இருந்தாலும் அவன் ஒரு பற்றும் அற்று குற்றம் இல்லாத ஜீவன் முக்தனேயாம் என்பது இந்த வெண்பாவின் திரண்ட பொருளாகும்.

இவ்வாறு பற்று அற்று வாழ்க்கை நடத்தும் ஜீவன் முக்தர்களின் பெயர்கள் கீழேவரும் வெண்பாவினால் காணலாம். சீர்காழி திருஞானசம்பந்தரின் முதல் சிஷ்யர் சிவஞான வள்ளலார் சாஸ்திரம்.

## வெண்பா

***"சுகன் வாம தேவன் றுருவாசன் காதி***
***மகன் விதுரன் வெண்காடன், மாறன் - சகமாண்ட***
***பத்ரகிரி வான்மீகி பற்றற்றே முத்தியினை***
***யுற்றா ருறார்க் கிவரொப் பார்"*** (செய்யுள் 91)

இதன் பொருள் வெளிப்படை.

இந்த வெண்பாவில் குறிப்பிட்டுள்ள அத்துனை பேர்களும் பற்று அற்ற நிலையில் செயலாற்றிய முக்தர்கள் எனத் தெரிகிறதல்லவா? இது பற்றி அன்றோ திருவள்ளுவரும்

***"பற்றற்ற கண்ணே பிறப் பறுக்கும்***
***மற்று நிலையாமை காணப்படும்"***

என்றார்போலும்!!!

மேலும் "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என திருவாய் மொழியில் நம்மாழ்வாரும் கூறிப் போந்துளதே போதிய சான்றாகும். மேலும் ஆத்ம சொரூபமான தன்னை விசாரித்து அறியாமல் எந்தவிதமான அப்பியாசத்தாலும் அதை அறிந்து கொள்ள முடியாது என்பதற்கு நமது சீர்காழி வள்ளலார் அருளிச் செய்த ஒரு வெண்பாவை பாருங்கள்.

## வெண்பா

*"அறிவுநா மென்றறிய மாட்டாத ரன்றோ*
*வெறிகாற் புனலருந்தி யென்றுந் - தறிபோலு*
*நிட்டையுடன் மட்டாய் நெடுங்கால நின்றார்க*
*ணட்டமலா லுண்டோ நயம்"* (வெண்பா 86)

பேரறிவு சொரூபமே நான் என்று அறியாதவர்கள் வெறிபிடித்து காற்றைத்தான் உட்கொள்வேன், ஜலத்தைதான் சாப்பிடுவேன் என்று கூறிக்கொண்டு ஆசனம் கட்டி, நிஷ்டை கூடி மரக்கட்டையைப்போல் நீண்டகாலத்தை வீணாக்கியவர்களுக்கு நஷ்டமேயொழிய லாபமில்லை என்பது இவ்வெண்பாவின் திரண்ட பொருள்.



## கடிதம் : 9

*4-2-1980*

நிற்க, நீங்கள் எழுதிய தபால்கள் கிடைக்கப் பார்த்தேன். அதில் அனேக பரமார்த்திக விஷயங்களைப்பற்றி எழுதியிருந்தீர்கள். அதற்குத் தக்கபடி அங்குள்ள அன்பர்களுக்கும் பயன்படும்படி ஒரு தபால் எழுதவேண்டும் என்று நினைத்தேன். எனது உடல் நலம் இல்லாததின் காரணமாக எழுதமுடியவில்லை. தற்போது எனது உடல் நலம் சிறிது ஆரோக்கியமாக இருக்கிறது. உடம்புக்கு வயது 90 தாண்டி விட்டது. அதனால் உடல் நலம் பலவழியில் தொந்தரவை கொடுக்கிறது. என்றாலும் சத்துள்ள உணவாகிய பால், நெய், தயிர், பழங்கள் போன்றவற்றை உபயோகப்படுத்தி வருவதால் வயோதிகப் பருவத்தில் ஏற்படுகின்ற துன்பங்களை எதிர்த்துப் போராட சக்தி கொஞ்சம் ஏற்பட்டிருக்கிறது. முதுமைப் பருவத்தில் ஏற்படுகின்ற துன்பங்களைப் பற்றி ஒரு வாலிபனைக் கேட்டால் அவனால் சொல்லமுடியுமா? முடியாதல்லவா? வயோதிகப் பருவத்திலும் சரி, பிரம்ம ஞானம் உண்டான காலத்திலும் சரி இந்த உடம்பு நமக்கு எப்படித் தோன்றும்

என்பதைப் பற்றி சீர்காழி திருஞானசம்பந்த சுவாமிகளின் 2-வது மாணவனாகிய கண்ணுடைய வள்ளலார் எழுதிய ஒழிவியலொடுக்கம் என்ற புத்தகத்தின் 325-வது பக்கத்தில் நின்று ஒரு வெண்பாவை கீழே காண்பிக்கின்றேன்.

## வெண்பா

''கருமந் திரிவிதத்திற் கட்டவிழுங் கால
அரவுந் தவளையும் போலாகி - இருதலையிற்
கொள்ளி யெறும்பாய் உடம்பே கூற்றாகித் தோற்றுமெனி
உள்ளினரும் ஊரும் என் ஆகும்'' (22)

இதன் பொருள்:- ஒருவனுக்கு தெய்வ கதியால் ஆத்ம ஞானம் உண்டான காலத்தில் மறுப்பிறப்பிற்கு ஏதுவாகிய சஞ்சித வினையும் இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கும் பிராரப்த கருமமும் நிகழ்காலத்தில் செய்கின்ற ஆகாமிய கருமமும் ஆகிய மூன்றுவித கருமமும் கட்டு அவிழ்ந்து தன்னை விட்டுப் பிரியும் காலத்தில் அந்த ஞானிக்கு இந்த உடம்பு எப்படித் தோன்றும் எனின் பாம்பின் வாயில் அகப்பட்ட தவளை தான் தப்பித்துக்கொண்டால் போதும் என்று நினைப்பதுபோலும், மூங்கிற்குழாயின் இரண்டு பக்கமும் நெருப்பு பற்றியபின் அதன் உள்ளே அகப்பட்டுள்ள எறும்பின் நிலமையைப்போலும் தோன்றுமாம். அன்றியும் இந்த உடம்பு எமனாகவும் தோன்றுமாம். இப்படி இருக்கும் நிலையில் சுற்றத்தாரும் உறவினர்களும் என்ன ஆகும் என்று கேட்கிறார் வள்ளலார். இந்த வெண்பா எனக்காக 600-ஆண்டுகளுக்கு முன் எழுதிவைத்திருக்கிறார்கள். எனது அனுபவமும் இந்த வெண்பாவின் பொருளை ஒத்தே இருக்கிறது. மேலும் இந்த வெண்பாவிற்கிணங்க அதன் கருத்தை சுருக்கமாக திருவள்ளுவர் கூறியிருப்பதைப் பாருங்கள்.

''மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை'' (345)

மற்றபடி எல்லோருக்கும் எனது ஆசி உரித்தாகுக!

# கடிதம் : 10

*6-7-1980*

உலகத்தில் எது பரம ரகசியமோ? அதுதான் பிரம்மவித்தை. இது ஒருவருக்கு எளிதில் புரியக்கூடியது அன்று, சுயநலக்காரர்கள் இதை மறைத்து வைத்தார்கள். உதாரணமாக ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இடத்தில் சுவாமி விவேகானந்தர் 10 அவதாரத்தின் ரகசியத்தைப் பற்றி கேட்டார். அப்போது அவர் சொன்னதைப் பாருங்கள்.

1. **மச்ச அவதாரம்:-** மீனுக்கு எப்படி ஜலமே கதியோ அப்படி ஒரு குழந்தையின் முதற்பருவத்தில் தன் தாயின் மடியே கதி.
2. **கூர்ம அவதாரம்:-** எப்படி ஆமைக்கு ஜலமே ஆதாரமாய் இருந்தாலும் சிறிதுநேரம் ஜலத்தை விட்டு கரையில் ஏறி விளையாடும். மனிதர்களைக் கண்டால் தன் தாயகமாகிய ஜலத்தை தஞ்சமடையும். அதுபோல் குழந்தையின் 2-வது பருவத்தில் தன் தாயின் மடியை விட்டு சிறிது தூரம் விளையாடும். யாராவது வந்தால் தன் தாயின் மடியை தஞ்சமடையும்.
3. **வராக அவதாரம்:-** பன்றியானது நலம் தீது தெரியாமல் செல்வதுபோல் குழந்தையின் மூன்றாவது பருவத்தில் நலம் தீது தெரியாமல் நடக்கும்.
4. **நரசிம்ம அவதாரம்:-** எப்படி சிங்கமானது வீரத்தோடு பார்க்குமோ அதுபோல் குழந்தையின் நாலாவது பருவத்தில் மாயா காரியமான பொய்யை கோபத்தால் பார்க்கும்.
5. **வாமன அவதாரம்:-** குழந்தையின் ஐந்தாவது பருவத்தில் பிரம்ம ஞானியாக விளங்குவான் எப்படி வாமனன் ஞானியாய் இருந்தானோ அப்படி எனக்கொள்க .
6. **பரசுராம அவதாரம்:-** பரசுராமன் எப்படி திக்குவிஜயம் செய்தானோ அப்படி குழந்தையின் ஆறாவது பருவத்தில் அஞ்ஞானத்தை எதிர்த்து போராடுவான்.

7. **பலராம அவதாரம்:-** எப்படி பலராமன் ஆசை அற்றவனாய் இருந்தானோ அதுபோல் குழந்தையின் 7-வது பருவத்தில் ஆசை அற்றவனாய் இருப்பான்.

8. **இராமாவதாரம்:-** இராமன் எப்படி எல்லாவற்றையும் தம்பியிடம் கொடுத்தானோ அதுபோல் குழந்தையின் எட்டாவது பருவத்தில் எல்லாம் பிரம்மார்ப்பணமாக செய்வான்.

9. **கிருஷ்ணாவதாரம்:-** கிருஷ்ணன் எப்படி குடும்பத்தையும் நடத்தி கீதையும் உபதேசித்தாரோ அதுபோல் குழந்தையின் 9-வது பருவத்தில் குடும்பமும் நடத்துவான் கீதையும் உபதேசிப்பான்.

10. **கல்கி அவதாரம்:-** கல்கி அவதாரத்தில் எப்படி எல்லோருக்கும் பிரம்ம ஞானத்தைப் போதித்தாரோ? அதுபோல் குழந்தையின் பத்தாவது பருவத்தில் எல்லோருக்கும் பிரம்ம ஞானத்தைப் போதித்து தானும் பிரம்ம சொரூபமாய் விளங்குவான். இதுவே தசாவதாரத்தின் பரம ரகசியமாம் எனக்கூறி முடித்தார் இராமகிருஷ்ணர். சுவாமி விவேகானந்தரும் இதைக் கேட்டு ஆனந்த பரவசம் அடைந்தார்.

மற்றபடி எல்லோருக்கும் எனது ஆசி உரித்தாகுக.



## கடிதம் : 11

*24-11-1980*

பண்டைக்காலத்தில் காதி வேதியன் என்று ஒருவன் இருந்தான். அவன் பகல் 12 மணியளவில் ஒரு கனவு கண்டான். அதாவது அக்காலத்தில் புரணங்களில் கூறப்பட்டுள்ள புலையர் என்ற வம்சத்தில் தான் பிறந்ததாகவும், அந்த வம்சத்தில் சேர்ந்த ஒரு பெண்ணை திருமணம் செய்ததாகவும் அதில் பல குழந்தைகள் பிறந்ததாகவும், அப்போது நாட்டில்

பஞ்சம் ஏற்பட்டதாகவும், அதிக மழையினால் பெருவெள்ளம் வந்ததாகவும், அதனால் மனைவி மக்கள் எல்லோரும் இறந்து போனதாகவும், அந்த துக்கம் தாங்காமல் தான் அக்கினி பிரவேசம் செய்ய முற்பட்டதாகவும் கண்டான். உடனே விழித்துக் கொண்டான். என்ன ஆச்சரியம்! ஒரு முகூர்த்த நேரத்தில் இவ்வளவு காரியமும் சத்தியமாகவும் அனுபவ பூர்வமாகவும் தோற்றிவைத்த ஒரு பிரம்ம சக்தியின் ஆற்றலை நினைத்து பெருமூச்சு விட்டான். உடனே அவனுக்கு பிர்மம் ஒன்றே சத்தியம் எனவும்; தேகாதி பிரபஞ்சம் கனவில் கண்டதுபோல் நிலையாமை உடையது என்றும்; மக்களுக்கு பறைசாற்ற ஆரம்பித்து விட்டான். அதுபோல் இவ்வுலகில் தோன்றிய புத்தர் பிரான், சங்கரர், விவேகானந்தர் போன்ற மகாத்மாக்கள் பலரும் தாங்கள் கண்ட உண்மைகளை எடுத்து உரைத்தார்கள். அது மக்களுக்கு பயன்பட்டதோ! இல்லையோ? அதைப்பற்றி அவர்கள் கவலைப்பட்டதில்லை. தங்கள் தங்கள் கடமையை ஆற்றிவிட்டு சென்று விட்டார்கள். அதுபோல் நானும் இவ்வுலகமாகிய நாடகமேடையில் ஒரு வேஷத்தை போட்டுக்கொண்டு எனது கடமையை ஆற்றி முடித்து விட்டேன். நான் சொல்வதை உலகம் ஏற்றுக்கொள்ளுமா? ஏற்றுக் கொள்ளாதா? என்பதைப் பற்றி முன்னோர்கள் போல் நானும் கவலைப்படுவதில்லை. இவ்வுலகம் ஒரு நாடகமேடை அல்லது சினிமா காட்சியே போன்று அனுபவித்த சுக துக்கங்கள் அப்பொழுது மெய்யாகத் தோன்றினும் முடிவில் அதாவது ஆராய்ந்து பார்த்தால் கனவில் கண்டது போன்று நனவில் காணும் இவ்வுலகத்தில் உள்ள சுகதுக்க அனுபவங்களும் பிரம்ம சக்தியின் கற்பனாதோற்றமாம் என்பது திண்ணம். இத்தகைய பிரம்ம சக்தி நனவு கனவுகளில் ஒரு கணத்தில் பல உலக தேகாதி பிரபஞ்சத்தை தோற்றிவைக்கக்கூடிய அபார சக்தி வாய்ந்ததாகும். இந்த பிரம்ம சக்தி எப்படி இருக்கும் எனின், ''பிரம்ம சக்திகள் அனந்தம் அதைக் கண்டுபிடித்திடல் கூடாது'' என்று கைவல்யக்காரர் கூறியிருப்பதால், அதன் சொரூபம் இத்தகையது என்று காண முடியாது. எப்படி

இந்திரஜால வித்தை காண்பிக்கும் இடத்தில் காண்பிக்கக் கூடிய ஆளையும் அவனால் காண்பிக்கப்பட்ட மாம்பழம், பாம்பு முதலியவைகளும் நம் கண் புலனுக்கு தெரியும். ஆனால் எந்த சக்தி அவ்வாறு மாறுதலாக காண்பிக்கப்பட்டதோ! அந்த சக்தி நம் கண்களுக்கு புலனாகாது அல்லவா? அதுபோல் இந்திரஜாலப் பொருள்களைப் போன்ற தேகாதி பிரபஞ்சத்துக்கு ஆதாரமான பிரம்மமாகிய பேரறிவு சொரூபம் ஒன்றுண்டு என்று நம் புத்தி விருத்தியைக் கொண்டு ஆராய்ந்து பார்த்தால் விளங்கும். இந்திரஜாலப் பொருள் போல் அந்தப் பிரம்மத்தால் காண்பிக்கப்பட்ட நம் தேகம் மனைவி மக்கள் உடைமைகள் முதலியவைகளையும் ஜனன மரண முதலியவைகளையும் நிஜம் போல் தோற்றிவைத்த ஒரு சக்தி உண்டு என்பது அனுமானத்தால் அறிய வேண்டும். இந்த சக்தியின் காரியமான தேகாதிப் பிரபஞ்சம் இந்திரஜாலப் பொருள் போல் கற்பனையாம். இதற்கு மேற்கோள் கண்ணபிரான் கீதாசார தாலாட்டில் கூறியிருப்பதைப் பாருங்கள்.

**“இந்திர ஜாலம்போல் இவ்வுலகை நம்மிடத்தில்**
**தந்திரமாய் தோற்றிவைத்தோம் சத்தியமல்ல என்றவரோ”**

என்று கூறியிருப்பதாலும், திருவாசகத்தில் “இந்திர ஜாலத்து இடர்ப் படுமாகாதே” என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியிருப்பதாலும் அறியலாம். இனி இந்த சக்தி என்ன செய்யும் எனின் இதன் செயல் விஷமத்தனமானது. இதற்கு விபரீதகரணி என்று வடமொழி நூல்கள் கூறுகின்றது. அதாவது புத்தி விருத்தியில் விபரீத எண்ணங்கள் தோற்றிவைக்கும். உதாரணமாக ஒருவருடைய அபிப்பிராயம் மற்றொருவருக்கு பிடிக்காது. புருஷன் மனைவி சண்டை, தாய் பிள்ளை சண்டை, பிதா புத்திரன் சண்டை, ஒரு தாய்க்குப் பிறந்த சகோதரர்கள் சண்டை, குரு சிஷ்ய சண்டை, வசிட்டமாமுனிவர் அவருடைய சிஷ்யனாகிய சிபிச் சக்கரவர்த்தியை கொலை செய்தார். சொல்லப்போனால் சிற்றரசர்கள் முதல் வல்லரசர்கள் வரையில் சண்டை அதுமட்டுமா, தேவ அசுர சண்டை அதுமட்டுமா, பிரம்ம தேவனுடைய ஐந்து தலையில் ஒரு

தலையை கிள்ளி எடுத்துக்கொண்டு போய்விட்டானாம் பரமசிவன். இத்தகைய விபரீத எண்ணங்களை உண்டுபண்ணி சகோதரத்துவம் - அன்பு, கருணை, அகிம்சை முதலிய பரிசுத்த எண்ணங்களுக்கு இடமில்லாமல் செய்தது இந்த மாயா சக்தி அன்றி வேறு யாது காரணமாய் இருக்கலாம்? இதுமட்டுமா, இந்த சக்தியின் காரியமான விஷமத்தனமான சிருட்டியைப் பாருங்கள். மனிதர்களுக்குள் செவிடு, குருடு, அலி, அங்கஹீனர்கள், தேள், பாம்பு, புலி முதலிய சிருட்டிகளால் பல இன்னல்களுக்கு இடம் தருகின்றது அல்லவா? இவைகளை கடவுள் சிருட்டித்தார் எனின் அதுவும் பொருந்தாது. ஏனெனில் மனிதர்களுக்கு இடையூறான சிருட்டிகள் கடவுள் செய்வாரா? செய்யமாட்டார். செய்தால் பாரபட்ச தோஷம் உண்டாகும். இனி முன் செய்த கர்மமே காரணம் எனின் அதுவும் பொருந்தாது. ஏன் எனின்? முன் சரீரம் இருந்தே கர்மம் செய்யவேண்டும். அந்த சரீரம் அதற்குமுன் செய்த கர்மத்தாலே தான் வரவேண்டும். அங்ஙனமாயின் முந்தியிருந்தது சரீரமா? கர்மமா? இது மரம் முந்தியதா? விதை முந்தியதா? என்பன போன்ற முடிவு பெறாத குற்றமாம். இக்காரணம் பற்றி இராமலிங்க சுவாமிகள் திருவருட்பாவின் திருவண்ணப் பதிகம் என்ற தலைப்பின் கீழ் எண்ணுரு விருப்பாதி என்ற பாட்டில்,

> **"வித் தொன்றும் இன்றியே விளைவெலாம் தருகின்ற**
> **விஞ்ஞான மழை செய்முகிலே"**

என்று கூறியிருப்பதால் சிருஷ்டிக்கு முன் காரணம் கூறக்கூடாது என்பதாயிற்று. மேலும் வசிட்டமாமுனிவர் வாசிட்டத்தில் "பண்ணு காரணம் ஒன்று இல்லை படைக்கும் முன்" என்று கூறியிருப்பதால் சிருட்டிக்கு முன் காரணம் எதுவும் கூறுவது பொருந்தாது. ஏன் எனின்? இந்திரஜாலப் பொருள் போன்ற மாயாசக்தியின் தோற்றத்திற்கு முன் காரணம் கூறுவது வேதவிரோதமாம் எனக் கொள்க. இந்திரஜாலத்தில் காண்பிக்கப் பட்டுள்ள மாம்பழம், பாம்பு, மண்ணை எடுத்து சர்க்கரை ஆக்குதல் போன்ற தோற்றத்திற்கு முன்காரணம் தேவையாகுமா?

முன் கூறிய காதிவேதியன் கண்ட கனவுக்கு முன் காரணம் தேவையா? இல்லை அல்லவா? இக்காரணம் பற்றி அன்றோ, கைவல்ய நவநீதத்தில்,

**"விதன மாயை ஏன் வந்த தென்றால் புத்தி**
**விசாரம் அற்றதனாலே"**

என்று கூறியிருப்பதால் அறியலாம். புத்தியைக் கொண்டு விசாரித்துப் பார்த்தால் இந்திர ஜாலப் பொருள்கள் வெறும் கற்பனை என்று அறிவதுபோல, தேகாதிப்பிரபஞ்சமும் வெறும் கற்பனா தோற்றமாம், என்று அறிந்து அத்துடன் பழகினால் சுக துக்க லாப நஷ்டங்களில் பற்றின்றி சுகமாக வாழலாம். இதுபற்றி அன்றோ, கைவல்யகாரரும்

**"காண்பவை யெல்லாம் சொர்ப்பனம் போல்**
**எண்ணித் துணிந்தவன் ஞானியாவன்"**

என்று கூறியிருப்பதால் தேகாதிப் பிரபஞ்சம் சொர்ப்பன காட்சிபோல் கற்பிதமாம் என்பதற்கு ஐயமில்லை. இனி இத்தகைய ஒரு சக்தி ஆத்மாவாகிய பிரம்மத்திற்கு வேறாகுமா? அல்லது பிரம்மமும் மாயையும் ஒன்றாகுமா? எனின் இரண்டும் அன்று. பிரம்மத்திற்கு வேறாகுமானால் அது ஜடமாகும். ஆகுமானால் எப்படி சிருட்டியாதி செயலாற்ற முடியும். இனி பிரம்மமும் மாயையும் ஒன்றெனில் பிரம்மத்துக்குள்ள சச்சிதானந்த இலட்சணம் மாயைக்கு இருக்கவேண்டுமே? அப்படி இல்லை. எனவே சந்திரனில் தோன்றும் ஒரு கருப்பு நிறம் சந்திரனும் அல்ல, சந்திரனுக்கு வேறுமல்ல, ஆனால் சந்திரனாலேயே அந்தக் கருப்பு விளங்குகின்றது. அதுபோல் ஆத்மாவாகிய பிரம்மத்தில் தோன்றும் மாயாசக்தி பிரம்மமும் அல்ல; பிரம்மத்துக்கு வேறும் அல்ல; பிரம்மத்தாலேயே அது விளங்குகின்றது. எப்படி சுவரில் எழுதிய சித்திரங்கள் சுவரும் அல்ல; சுவருக்கு வேறும் அல்ல, ஆனால் சுவற்றினாலேயே அவை விளங்குகின்றது. இதைப்பற்றி நமது பட்டினத்து சுவாமிகள் எழுதிய, திருகழுமல மும்மணிக்கோவை என்ற புத்தகத்தில் கீழ்வருமாறு கூறியிருப்பதைப் பாருங்கள்.

“எந்தை நின்
திருவருள் நாட்டங் கருணையிற் பெறலும்
யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற வெழுதிய
சிற்ப விகற்ப மெல்லா மொன்றிற்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றுந் துணிவு போன்றனவே”

இதன் பொருள் வெளிப்படையாயினும் சிறிது விளக்கிக் கூறுவோம். எனது தந்தையும் தாயுமாகிய எனது யதார்த்த சொரூபமாகிய பரம்பொருளை உனது திருவருள் நாட்டம் என் மேல் சிறிதளவு ஏற்பட்டவுடன் எனக்கு தேகாதிப்பிரபஞ்சம் முழுதும் இந்திரஜாலப் பொருள் போல் கற்பனையாக தோன்றிவிட்டது. ஆனால் அடைவதற்கு அரிதான நீயே மெய்யாகிய நித்தியப் பொருள் என ஐயம் திரிபு அற அறிந்தேன். உதாரணமாக ஓவியப்புலவன் ஒருவன் சுவற்றில் அழகான பெண், ஆண், அலி, செடி, கொடி முதலிய சித்திரங்கள் வரைந்தான்; பார்ப்பவர்களுக்கு பேராசை உண்டு பண்ணக் கூடியதாயினும் ஒரு விவேகியானவன் அந்த சித்திரங்கள் வெறும் கற்பனை என்றும் அவை சுவற்றுக்கு வேறாக இல்லையென்றும், உண்மையாக உள்ளது சுவர்தான் என்றும் துணிவான் என்பதுவே முன்கூறிய மும்மணிக்கோவையின் கருத்தாகும். அதுபோல் நீங்களும் தேகாதிப்பிரபஞ்சம் வெறும் கற்பனையென்றும், தன் சொரூபத்துக்கு வேறாக அவை இல்லையென்றும்; அறிந்து அத்துடன் விளையாடிக்கொண்டு உங்கள் கடமையை செய்வீர்களாக!!!

இந்த மாயா சக்தியின் விபரீத போக்கைக் கண்டு இராமலிங்க சுவாமிகள் அழுவதா? சிரிப்பதா? என்று கேட்டார். நான் சொல்வேன் அழுகை வேண்டாம், சிரித்துக்கொண்டிருங்கள். அது உடம்புக்கு நல்லது. இந்த உண்மை ஞானத்தை மக்கள் உணர்ந்தால் சர்வகலா சாலை அவர்கள் உள்ளத்தில் புகுந்து

விட்டதாககருதலாம். அப்போது அந்த நாட்டுக்கு இராணுவமும், போலீசும் தேவையில்லை என்று சுவாமி இராமதீர்த்தா M.A., அவர்கள் லாகூர் காலேஜில் பேசியிருப்பதை உங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

இந்தக் கடிதத்தை பலதடவை எல்லோரும் படித்துப் பாருங்கள்.

திரு. M. கணபதி அவர்களுக்கும், திரு. ஏகாம்பரம் அவர்களுக்கும், திரு. முருகேசன் அவர்களுக்கும், திரு. குஞ்சு அவர்களுக்கும், தி. சொக்கலிங்கம் அவர்களுக்கும், உங்களுக்கும் எனது உளங் கனிந்த ஆசி உரித்தாகுக!



## கடிதம் 12

*20-12-1980*

பேரன்பின்மிக்க திரு. V. R. ஆறுமுகமே! கேட்பாயாக!

உலகத்தில் ஞானிக்கு மறு பிறப்பு இல்லை, அஞ்ஞானிக்கு மறு பிறப்பு உண்டு என்று பலர் கூறுவதும் சரியில்லை.

ஒரு ஞானிக்கு காரண சரீரமான அஞ்ஞானம்; ஞானத்தால் நஷ்டமாய் விட்டபடியால் மறு பிறப்பு வராது எனின் அதுவும் பொருந்தாது. ஏனெனில் அஞ்ஞானம் என்பது எதைக் குறிக்கின்றது எனின் ஒரு வஸ்துவின் யதார்த்த நிலையை அறியாதது அறியாமை அல்லது அஞ்ஞானமாம். உதாரணமாக ரேடியோப்பெட்டி எப்படி அமைகின்றது என்று நமக்கு அறியாமல் இருப்பதைப் பொருத்தது அஞ்ஞானமாகும். ஒரு பவுனுக்கு மாற்று எத்தனை என்று நாம் அறியாமல் இருப்பது அதைப் பொருத்து அஞ்ஞானமாகும்; இவ்வாறான அஞ்ஞானம் இந்த தேகாதிப்பிரபஞ்சத்திற்கு காரணம் என்று சொன்னால் அது பொருந்துமா? பொருந்தாது. ஏனெனில்? தேகாதிப் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம் பொருளாய் இருக்க வேண்டும். அஞ்ஞானம் பொருள் அல்லவே! பஞ்சபூதம்

ஐந்து. சூரியன் சந்திரன் திக்கு காலம் ஆகிய ஒன்பது பொருளைப் பற்றியே தர்க்க சித்தாந்த கௌமதி முதலிய தர்க்க சாஸ்திரங்களில் கூறியிருக்கின்றதேயொழிய இருளாகிய அஞ்ஞானத்தை பத்தாவது பொருளாகக் கூறவில்லையே. தேகாதிப்பிரபஞ்சத்திற்கு குடத்திற்கு மண் போல் ஒரு பொருள் உபாதான காரணமாய் இருக்கவேண்டுமே! அது அஞ்ஞானமாகுமா? அஞ்ஞானம் மண்போல் பொருள் அல்லவே. எனவே தேகாதிப்பிரபஞ்சத்திற்கு காரணம் அஞ்ஞானம் அல்லது அவித்தை என்று பெரியவர்கள் எல்லாம் சொன்னதின் உண்மையான கருத்து என்னவென்றால்; ஒரு ஆலமரத்தின் விதையை எடுத்து இரண்டாகப் பிளந்து பார். அதில் ஒரு பாதியை இரண்டாகப் பிளந்து பார் என்று சுவேதகேதுவுக்கு அவனுடைய பிதாவாகிய உத்தாலகர் சொன்னார். உடனே சுவேதகேது எனது பிதாவே இதில் ஒன்றும் தெரியவில்லை என்றார். உத்தாலகர் அன்புக்குரிய புத்திரனே! ஒன்றும் தெரியவில்லை என்று சொன்ன அஞ்ஞானம் இருக்கிறதே அதில் நின்று இவ்வளவு பெரிய ஆலமரம் தோன்றி விட்டது. அந்த ஆலமரம் தோன்றுவதற்கு காரணமான அணுக்கள் அந்த விதையில் இருந்தது, அதை அறியமுடிகிறது இல்லை. அதுபோல் பஞ்சபூத அணுக்களில் ஒரு அணுவை பிளந்து பார் என்ன தெரிகின்றது, ஒன்றும் தெரியவில்லை. அப்படி ஒன்றும் தெரியாதது அஞ்ஞானமாம்; இந்த அணுக்களின் முடிவும் அறிய முடியாமையால் அதை அஞ்ஞானம் என்றார்கள் பெரியோர்கள். பல அணுக்கள் கூட்டுப் பொருளாக ஒன்று சேர்ந்து தேகாதிப்பிரபஞ்சம் உண்டாயிற்று. எனவே சிருட்டிக்குக் காரணம் அணுக்களே ஒழிய அஞ்ஞானம் அல்ல. ஜகத் காரணம் ஆன அணுக்களின் முடிவே இன்றைய வரைக்கும் ஒருவராலும் காண முடியவில்லை. இனிமேலும் காணப் போவதுமில்லை. எனவே அஞ்ஞானமே காரண சரீரம் என்றால், அணுக்களின் முடிவு அறிய முடிகிறது இல்லை என்பது பொருளாகும். இந்த அணுக்களை மற்றும் இரண்டு சரீரத்திற்கும் காரணமாய் இருப்பதால் காரண சரீரம் என்று

கூறப்பட்டது. இந்த அணுக்களாகிய காரண சரீரம் ஞானி, அஞ்ஞானி ஆகிய இருவருக்கும் சமமாய் இருப்பதால் பஞ்சபூத அணுக்களுக்கு பிறப்பு இறப்பு கூறுவது பொருந்தாது. ஆகவே ஞானி அஞ்ஞானி ஆகிய இருவருக்கும் பிறப்பு இறப்பு பொருந்தாது. மெய் உணர்வால் ஆயுங்கால் பிறந்து இறப்பது யாருக்கும் இல்லை என்று கண்ணபிரான் கீதாசார தாலாட்டில் கூறியிருப்பதே சாலச் சிறந்த உபதேசமாகும். பஞ்சபூத அணுக்கள் அநாதி ஆகையால் அது சில பேருக்குத் தோன்றி நஷ்டமாக ஆகுவதாகவும், சில பேருக்கு நஷ்டமாகாமல் இருந்து பிறப்பு இறப்பைக் கொடுக்கும் என்று கூறுவது அநாதி என்ற சப்தத்துக்கு பொருள் தெரியாமையே ஆகும் என்பதற்கு ஐயம் இல்லை. இதை ''அநாதியாம் சீவர் எல்லாம்'' என்று கைவல்யம் கூறுவது போதுமான சான்றாகும்.

இப்படிக்கு,

- சுவாமி வாசுதேவானந்தா

திரு. V. R. ஆறுமுகம் அவர்களுக்கு எழுதிய தபால் இத்துடன் முற்றுப்பெற்றது.

1. **மனிதனே! உன்னை நீ மாசற உணர்ந்தால்**
   **இனிதுள மெய்ப்பொருள் இறைவனை உணரலாம்.**

2. **வீரனாகயிரு! அல்லது விவேகமிகுந்த சாதுவாகயிரு.**
   **கோபமிருக்கட்டும்; கோபியாக இராதே!**

3. **கடவுள் இல்லை என்பவனும் நாஸ்தீகன்:**
   **கடவுளுக்கு வேறாக தன்னை கருதுபவனும் நாஸ்தீகன்.**

4. **நீ வேண்டப்படும் கடவுள் வெளியிடங்களில் இல்லை. வேண்டப்படும்**

**நினைவிற்கு விளக்கம் தருவதாய் உன்னுள்ளே நீயா யிருக்கிறது.**

- ஸ்ரீ குரு கிணகர் சுவாமிகள்.

ஓ

பிர்மமே ஸத்யம்
அதுவே நித்யம்

# கடிதம் 13 [1]

*28-11-1978*
*ஆனந்தாஸ்ரமம்*
*நாங்கூர்.*

பேரன்பின் மிக்க திரு. S. முருகேசன் அவர்களுக்கு விரும்புவது நலம், நலமறிய அவா.

நிற்க, இந்த பூவுலகத்தில் தோன்றிய மக்களுள் சிறந்த மாபெரும் பேரறிவாளர்கள் ஆற்றிய அரும்பெரும் முயற்சியின் பயனாககண்டுபிடிக்கப்பட்டுள்ளபொருள்கள் இரண்டு விதமாய் இருக்கின்றது. அதில் ஒன்று பேரறிவுப் பொருள், மற்றொன்று அறிவற்ற ஜடப்பொருள். இந்த இரண்டு பொருள்களில் அறிவும், அறிவின் சமஷ்டியும் சேர்த்து ஆத்மா என்றும், கடவுள் என்றும் பிரம்மம் என்றும், சேதனம் என்றும் சித்து என்றும் இன்னும் பலப் பெயர்களால் அழைக்கப்படுகின்றது.

பஞ்சபூதமும் அதன் காரியமான உடம்பும் அதில் உள்ள உறுப்புக்களும் ஜடம் அல்லது அசத்து என்றும் சொல்லப்படு கின்றது. இதில் முன்கூறிய ஆத்மாவே பகவான் என்ற சொல்லுக்கு பொருளாகும். அல்லது கடவுள் என்ற சொல்லுக்கும் அதுவே பொருளாகும். இதை ஞான வாசிட்டம் சுரகு கதையில் 29-வது பாட்டில் ''பகவான் ஆகும் இவ் ஆன்மதத்துவம் பரமமாம்'' என்று கூறியிருப்பதால் அறியலாம். இதில் பரமமாம் என்பது மேலானதாகும் என்பது பொருள். இனி ஆத்மா சித்தாய் அதாவது அறிவாய் நிற்கும் என்பதற்கும் மேற்கோள் தமிழுக்கு இலக்கணம் கூறவந்த நன்னூலின் உயிரியல் பத்தாவது சூத்திரத்தின் உரையில் உயிர் சித்தாயும் உடம்பு ஜடமாயும் நிற்கும் என்று கூறியிருப்பதை காணலாம்.

ஜடமாகிய உடம்பில் சித்தாகிய ஆன்மாவின் பிரகாசம் ஏற்படுகின்றபோது நான் எனது என்ற எண்ணங்கள்

உண்டாகின்றது. இந்த எண்ணங்கள் நான்கு விதமாக இருக்கின்றது. அவற்றுள் ஒன்றை நினைப்பதற்கு மனம் என்றும், யோசிப்பதற்கு சித்தம் என்றும், நிச்சயிப்பதற்கு புத்தி என்றும், இப்படி வரலாமா என்று வேகப்படுவதற்கு அகங்காரம் என்றும் கூறப்படும். ஆக இந்த நாலும் சேர்த்து மனம் என்று பெயர். இந்த மனம் தனக்கு அன்னியமான சகல பொருள் களையும் அனுபவித்துக் கொண்டிருப்பதற்கு விஷயானந்தம் அல்லது சிற்றின்பம் என்று பெயர் பெறும். இதுபோல் தனக்கு அன்னியமான பொருள்களை அனுபவிப்பது பேரின்பம் ஆகுமா? ஆகாது. சிந்திக்கவேண்டும். மனம் வாயுவின் அம்சம் ஆகும். வாயு எப்படி ஜடமோ அப்படி மனமும் ஜடம் ஆகவேண்டும். எப்பொழுது ஆத்மாவாகிய அறிவின் பிரகாசம் ஜடமாகிய மனதின் கண் ஏற்படுகின்றதோ அப்போது மனம் சித்துரூபமாக அதாவது அறிவு சொரூபமாக விளங்குகிறது. அந்த ஆத்மாவே தன் நிஜ சொரூபமாக தக்கார்பால் கேட்டு உணரும்போது அதுவே பேரின்பமாகும்.

ஏன் எனில் மனதின் கண் விளங்கும் சேதனம் உற்பத்தி நாச ரகித நித்திய ஆனந்த நிரதிசய பொருளாம். ஆதலால் அதன் வடிவம் பேரானந்தமாம். இவ்வாறாக மனம் என்ற சொல்லுக்கு சேதனபாகமும் ஜடபாகமும் ஆக இரண்டு அம்சங்கள் உண்டு. இதில் ஜடபாகம் கற்பனை என தள்ளி விட்டு சேதன பாகம் நித்தியம் எனக்கொள்ள வேண்டும். குடத்தில் தோன்றும் ஆகாயமும் வெளியில் தோன்றும் ஆகாயமும் ஒன்றாய் இருப்பதுபோல் ஒருவனுடைய மனதில் விளங்கும் அறிவும் சகல மனிதர்களுடைய அறிவும், சமஷ்டி, வியஷ்டி அதாவது பன்மை ஒருமை பேதத்தால் ஒன்றே ஆகும். இதனால் இந்த அறிவே நிறைபொருள் என்றும் பேரறிவு என்றும் வேதம் கூறுகின்றது. ''சித்தம் அறியாதபடி சித்தத்தில் நின்று இலகும் திவ்ய தேஜோ மயத்தை என்றும், சித்தமிசை குடி கொண்ட அறிவான தெய்வமே என்றும் மனதற்ற பரிசுத்த நிலை அருள்வாய் என்றும்'' தாயுமான சுவாமிகள் கூறியிருப்பதின் பொருள் இந்த அறிவே ஆகும்.

எனவே அறிவுக்கு தெய்வத்தன்மை கூறப்பட்டிருக்கிறது. சுழுத்தியில் உள்ள ஆனந்தமும் இந்த அறிவும் ஒன்றே ஆகும். அறிவும் உடம்பும் ஒன்று சேருகின்றபோது எண்ணங்கள் உண்டாகின்றன. இந்த எண்ணங்களில் ஒன்று நான் என்பது. இந்த நான் கற்பிதமேயொழிய உண்மையல்ல. இந்த நான் உடம்பிலும் இல்லை. இருக்குமானால் பிணமானபோது இருக்கவேண்டுமே. அங்ஙனம் இல்லை இனி அறிவிலும் நான் என்பது இல்லை. இருந்தால் சுழுத்தியிலும் இருக்க வேண்டுமே. அங்கும் இல்லையே. ஏனெனில் சுழுத்தியிலும் அறிவு இருக்கிறது. நான் என்பது இல்லை. சுழுத்தியில் அறிவு இல்லாது போனால் நனவில் நான் சுகமாய் தூங்கினேன், என்ற ஞாபகம் வரமுடியாது அல்லவா? வருவதால் அங்கு அறிவு இருக்கிறது. நான் என்பது இல்லை. இந்த நான் அத்தியாசம் அதாவது கற்பனையாகும். இதை அறியவேண்டுமேயானால் திருவண்ணாமலை ரமண சுவாமிகள் ஆங்கிலத்தில் எழுதிய நான் யார்? என்ற புத்தகத்தைப் படித்துப் பாருங்கள். இவ்வாறாக கற்பனையான நான் என்பதே ஜீவன் என்பதாகும். இந்த ஜீவன் எல்லாவித கற்பனா சிருஷ்டிகளையும் செய்கின்றது. இந்த ஜீவனுடைய சிருஷ்டியே துன்பத்திற்கும் ஜனன மரணத்திற்கும் காரணமாகும்.

உதாரணமாக பூமி ஈஸ்வர சிருஷ்டி; வீடு, மடம், கோவில் போன்றவைகள் ஜீவ சிருஷ்டி, தங்கம் ஈஸ்வரசிருஷ்டி; ஆபரணங்கள் ஜீவ சிருஷ்டி. பஞ்சு ஈஸ்வர சிருஷ்டி; ஆடைகள் ஜீவ சிருஷ்டி, மரம் ஈஸ்வர சிருஷ்டி; மேஜை, நாற்காலி முதலியன ஜீவ சிருஷ்டி, இரும்பு ஈஸ்வர சிருஷ்டி; ஆயுதங்கள் ஜீவ சிருஷ்டி, இதேபோல் மனிதன் ஈஸ்வர சிருஷ்டி; ஆசை, கோபம், லோபம், மதம், மாச்சரியம், அகந்தை, அபிமானம், தற்பெருமை இவைகள் ஜீவ சிருஷ்டி, ஈஸ்வர சிருஷ்டியான அன்னம், பழம், காய், கறிகள் உண்டு ஆத்ம விசாரம் செய்து மோட்சம் அடைவதற்கு சாதகமாய் இருக்கிறது. ஜீவ சிருஷ்டி ஜனன, மரணத்தை உண்டு பண்ணுவதாய் இருக்கிறது. இவ்வாறாக இரண்டு வகை சிருஷ்டிகளின் பாகுபாடு அறியாமல் ஜீவ சிருஷ்டியை நம்பி துன்பப்படுகின்றனர் பலர். இதில்

ஈஸ்வர சிருஷ்டி என்பது ஒருவனால் செய்கின்றது என்று கொள்ளாமல் மாயாசிருஷ்டி, எனப் பொருள்கொள்ளவேண்டும்.

இந்து மதத்தில் அடிப்படையில் கூறாது ஒழிந்த கீழ்மட்டத்தில் காணப்படுகின்ற 33,00,00,000 (கோடி) கடவுளர்களும் ஜீவனுடைய சிருஷ்டிதான். அந்தக் கடவுளர் களுக்கு கோடானுகோடி ரூபாய் செலவில் கோவில் கட்டி காப்பாற்றுவதும் இந்த ஜீவ சிருஷ்டிதான். சதி பதிகள் சண்டை, பிதா புத்திரன் சண்டை, குரு, சிஷ்யன் சண்டை, என் தெய்வம், உன் தெய்வம் என்ற சண்டை, இந்த தெய்வம் உயர்வு, அந்த தெய்வம் தாழ்வு என்ற சண்டை, சைவ, வைணவ சண்டை முதலிய சகல சண்டைகளும் ஜீவ சிருஷ்டிதான். இவ்வாறான ஜீவ சிருஷ்டிக்கு ஆதாரமான மனதின் கண் உள்ள சேதன பாகமான அதாவது பேரறிவான ஆத்மாவே அழிவற்ற உண்மைப் பொருள். அந்த ஆத்மாவை நான் என்று உணராமல் ஜீவ சிருஷ்டியான கற்பனாக் கடவுளை தேடி அலைந்து கஷ்ட நஷ்டப்படுவது அறியாமையின்றி யாதாம்? இந்த உண்மைகளை அறிவிக்கும் பெரியவர்கள் நான்கு விதமாய் இருப்பார்கள், அவர்களின் பெயர்களாவன 1. பிரம்மவித்து, 2. வரன், 3. வரியான், 4. வரிட்டன்.

இவர்களில் பின்கூறிய மூவரும் அதாவது வரன், வரியான், வரிட்டன், மண், பெண், பொன் என்கின்ற விஷயங்கள் என்னும் பாம்பு கடித்துவிடும் என்ற பயத்தால் சமாதி மேடையில் அமர்ந்தனர். இவர்களால் சிஷ்யர்களுக்கோ, உலகத்தவர் களுக்கோ உபகாரமில்லை. பின்கூறிய பிரம்ம வித்தானவன் விஷயம் என்னும் பாம்பால் கடிபட்ட விஷம் தனக்கு ஏறாமல் அகம் பிரம்மாஸ்மி அதாவது நானே மெய்ப்பொருள் என்னும் மந்திரத்தால் தானும் சுகமாக வாழ்ந்துகொண்டு ஏனைய பிரம்ம வித்தியார்த்திகளுக்கும் விஷயம் என்னும் பாம்பால் கடிபட்ட விஷம் ஏறாமல் அகம் பிரம்மாஸ்மி என்னும் மந்திரத்தை உபதேசித்து அவர்களையும் ஜீவன் முக்தர்களாக்கி வாழ வைப்பதுடன் தானும் ஜீவன் முக்தனாய் வாழ்வதால் இவனால் உலகம்உய்ய வேண்டும். இக்காரணம் பற்றி அன்றோ? கைவல்யம் சந்தேகம் தெளிதற் படலத்தில் 154-வது செய்யுளில்,

"சொன்ன நடுப்பூமியில் வந்த ஞானிகளே பிரம்ம வித்தாம், தூயமுத்தர்"

என்று கூறியிருப்பதால் விவகார ஞானிகளே தூயமுக்தன் என்று அடைமொழி கொடுத்து சிறப்பித்து இருப்பதால் அறியலாம்.

ஆகையால் நீங்களும் பிரம்ம வித்தான ஞானிகளைப் போல் வாழ்வீர்களாக!

ஆசை, கோபம் முதலியவையான ஜீவ சிருஷ்டிக்கு காரணம் ஈஸ்வர சிருஷ்டியாக மாற்றி கூறக்கூடாதோ! எனின் கூடாது. இதற்கு மேற்கோள் காண விரும்புபவர்கள் கைவல்யம் சந்தேகம் தெளிதற் படலம் 55-56-57 பாடல்களில் காணலாம். மேலும் சுழுத்தியில் அறிவு உண்டு என்பதற்கு மேற்கோள் கைவல்யம் சந்தேகம் தெளிதல் படலம் 143-வது செய்யுளில் காண்க.

நிற்க, திரு. முருகேசுக்கு,

நீங்கள் அன்புடன் எழுதிய தபால் கிடைக்கப்பெற்றேன். அதில் உங்களுடைய உள்ளம் அன்பிலும் பக்தியிலும் பேரறிவிலும் நிறைந்து விளங்குவதாய் அறிந்தேன். உங்களுக்கு எனது பரிபூரண ஆசி உரித்தாகுக.

இந்தக் கடிதத்தை பலமுறை படித்துப்பார்த்து பின்னர் V. R. ஆறுமுகம் அவர்களிடம் கொடுங்கள்.

ஓ

## கடிதம் : 14 [2]

*4-2-1980*

அன்புள்ள முருகேசா! ஆதிசங்கர பகவத்பாதாளுக்கு நான்கு சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்களுக்குள்ளே படித்தும் பாடம் கேட்காமலும், குருவின் தொண்டே முக்கியம் எனக் கருதியபடியால் குருவின் கருணையினால் மற்றும் உள்ள மூன்று பேரையும் விட சிறந்த ஆத்ம ஞானியாகி விளங்கியவர் துரோடகாச்சாரிய சுவாமிகள் ஆவார். அவர் பத்ரிகாஸ்ரமத்தின்

ஜோதிர் மடத்தின் மடாதிபதியாய் இருந்து வேதாந்தத்தை பரப்பி வந்தார்கள். அதுபோல் நீங்களும் இருக்கிறீர்கள்; மிக்க மகிழ்ச்சி. இந்த பெருமை V.R. ஆறுமுகம் அவர்களையே சேரும். எனது கழுத்தில் ஏற்பட்ட வீக்கம் பல இன்னல்களை கொடுத்து வருகிறது. மருந்தும் சாப்பிட்டு வருகிறேன். எனை ஆளும் ஈசன் செயல் எப்படியோ அப்படியே நடக்கட்டும். தற்போது முக்கால்பாகம் வீக்கம் குறைந்து சௌகரியமாய் இருக்கிறது. நான் உங்களிடம் கொடுத்த விசாரசந்திரோதயம் என்ற புத்தகத்தை நீங்களும் நன்றாகப் படித்து திரு. ஆறுமுகம் அவர்களிடம் கொடுக்கவும். நான் அடிக்கடி தபால் எழுத வில்லை என்று நினைக்கவேண்டாம். நான் உங்களுடனேயே உடன் நிகழ்ச்சிப்பொருளாக இருப்பதாக நினைத்துக்கொண்டு செயலாற்றுங்கள்.

*மற்றபடி எல்லா அன்பர்களுக்கும் எனது ஆசி உரித்தாகுக!*



## கடிதம்: 15 [3]

*13-5-80*

நிற்க, திரு. V.R. ஆறுமுகம் அவர்களுக்கும், திரு. M. கணபதி அவர்களுக்கும், உங்களுக்கும் மற்றும் உள்ளோருக்குமாக சில நாட்களுக்கு முன் ஒரு தபால் எழுதியிருந்தேன். அது உங்களுக்குக் கிடைத்து இருக்கும் என நினைக்கிறேன். தற்போது எனது உடல்நிலை சௌகரியமாய் இருக்கிறது. அதனால் மீண்டும் பரமார்த்திகம் கலந்த ஒரு தபால் எழுத வேண்டும் என்று திருவருள் தூண்டியதின் காரணமாக இந்த தபால் எழுதுகின்றேன். இங்கு யாவரும் நலம் இதுபோல் உங்கள் நலத்தையும் கருதுகின்றேன். எனது கழுத்தில் கண்ட வீக்கத்திற்கு T.B. கிளான்ட்ஸ் என்ற வியாதியாகும் என்று டாக்டர்கள் கூறுகிறார்கள். இது மீண்டும் வரக்கூடும். அதனால் தொடர்ந்து மருந்து சாப்பிட வேண்டும் என்று கொள்ளிடம் டாக்டர் கூறுகின்றார். நானும் 15 நாட்களுக்கு ஒருமுறை கொள்ளிடம் சென்று மருந்து வாங்கி வருகிறேன். இந்த

உடம்பு நீர்க்குமிழி போன்று அசுத்த பதார்த்தமாயினும் இந்த உடம்பு ஒரு குருவாகும் என்று உடம்பின் அருமை பெருமைகளைப் பற்றி பாகவத புராணத்தில் நாரதமுனிவர் கூறிய ஒரு செய்யுளைப் பாருங்கள்.

## பாகவத செய்யுள்

**"வாக்கினைக் கடந்து ஓங்கி மற்றெங்கனும்**
**நீக்கம்மி ன்றி நிறைந்த அறிவினை**
**ஊக்கம் உற்று உணர்தற்கு இடனாதலின்**
**ஆக்கையுங் குருவாயது அரசனே"**

இதன் பொருள் :- மனோவாக்கு காயங்களுக்கு அப்பாலாயும் அதை விளக்கிக்கொண்டும் பஞ்சபூதங்களுக்கும், சூரிய சந்திராதிகளுக்கும் விளக்கங்கொடுத்துக்கொண்டு எங்கும் நிறைந்து இடைவெளி இல்லாமல் நிற்கும் இந்த அறிவினை ஒரு குரு கிருபையினால் தன் வாஸ்தவ சொரூபமாக உணர்வதற்கு இடங்கொடுத்தது இந்த உடம்பு ஆதலின் அதுவே ஒரு குருவாகும் என்று பரிகி என்ற அரசனை நோக்கி நாரத முனிவர் கூறியிருப்பதை நோக்கும்போது அதன் அருமை புரிகின்றதல்லவா? இந்த உடம்பு அநித்தியமான மல பாண்டமாயினும் விவேகிகளுக்கு ஜனன மரணமாகிய சம்ஸார சாகரத்தில் வீழ்ந்து சுழலாமல் ஆனந்த சொரூபமான ஆத்மாவை தன் வாஸ்தவ சொரூபமாக அறிந்து உய்வதற்கு இந்த சரீரத்தின் உதவி இன்றியமையாத சாதனமாகையால் நாரதமுனிவர் இந்த உடம்பை குருவாகும் என்று கூறியிருப்பது பொருத்தமாகும்.

நீக்கம் இன்றி நிறைந்த அறிவு என்று முனிவர் கூறியது நான்கு வேதத்தின் முடிவான சித்தாந்தமாகும். ஏனெனில் அறிவுக்கு அன்னியமான பொருள்கள் யாவும் ஜடமேயாகும். ஆகுமானால் அது தோன்றி அழியும் நாமரூபபொருளாகும். கடவுளானாலும் அது அறிவு சொரூபமாகவே இருக்க வேண்டும். கடவுள் ஜடமானால் நம்மை பக்தன் என்றும் அல்லது துஷ்டன் என்றும் அறிய எப்படி முடியும். முடியாதல்லவா? ஆகையால் நிறைந்த அறிவே கடவுள் என்று முனிவர் கூறியது

மிகப் பொருத்தமேயாகும். இனி மக்கள் தோன்றிய காலந்தொட்டு அறிவே கடவுள் என்றும் அதுவே சகல ஜீவராசிகளின் உண்மை சொரூபமாகும் என்றும் அறிஞர்களும் வேதங்களும் அறிவியல் நூல்களும் கூறிப்போந்துள்ளதை உணர்ந்தவர்கள் கோடிக்கொருவர் இருக்கலாம்போலும். இதுபற்றி ஔவைப் பிராட்டியாரும்,

''தாதா கோடிக்கொருவர் உண்டாயின் உண்டென்றறு'' என்று திருவிளையாடற்புராணத்தின் பொற்கிழி படலத்தில் கூறிய கருத்தை தழுவி கூறியிருப்பது சாலப்பொருந்தும். ஆனால் இக்காலத்தில் பல ஆயிரம்பேர்கள் ஞானிகளாக இருக்கக்கூடும்.

இனி நாரதமுனிவர் பேரறிவே பரம்பொருளாகும் என்று கூறிய அமுதவாக்கியத்தின் கருத்தை ஔவைப்பிராட்டியாரும் ஒரு குறளின் மூலம் சித்தரித்துக் காட்டியிருப்பதைப் பாருங்கள். இதன் விபரம் நான் ஏற்கனவே திரு. V.R. ஆறுமுகம் அவர்களுக்கு எழுதிய தபாலில் எழுதியிருக்கிறேன். மீண்டும் விளக்கமாக இங்கே கூறுகிறேன்.

### ஔவைக் குறள் 81–வது பக்கம்

*''தன்னை அறியும் அறிவுதனைப் பெறில்*
*பின்னைப் பிறப்பில்லை வீடு''*

**இதன் பொருள்:-** தன்னை அறியும் அறிவுதனை அதாவது ஒரு மனிதன் தான் பிறந்திருக்கின்றோம் என்றும் இந்த உடம்பை தான் என்றும், நான் இறந்து போகப் போகின்றோம் என்றும், நான் இன்ன சாதி என்றும் அறிந்த அறிவு எதுவோ அந்த அறிவை பெறுதல் வேண்டும். அந்த அறிவே தன் சொரூபமாக நிச்சயிப்பதே அறிவைப் பெறுதல் என்பதற்கு பொருளாகும். அப்படி நிச்சயித்தால் அதாவது ஐயம் திரிபு அற நிச்சயித்தால் அவனுக்கு பிறப்பில்லை. அதுவே வீடு மோட்சமும் ஆகும் என்பதாம். இதில் அறிவைப் பெறுதல் எங்ஙனமாம்? எனின் தேகமே நான் என்று எப்படி உறுதி வந்ததோ அதுபோல் அறிவானந்த பிரம்மமே நான்

என்ற திடம் வயிரமலைக்கு ஒப்பாக வரவேண்டும். இந்த அறிவு நித்தியமான பொருள் என்றும் அது சத்து, சித்து, ஆனந்தம் ஆனது என்றும் அது கத்தியால் வெட்ட முடியாது, நெருப்பால் எரிக்கமுடியாது, காற்றால் உலர்த்த முடியாது. ஜலத்தால் நனைக்க முடியாது என்று கண்ணபிரான் பகவத்கீதையின் இரண்டாம் அத்தியாயத்தில் கூறியிருப்பதை ஊகித்துணர்க. இந்த அறிவுக்கு வேராக கடவுள் ஒருவர் இருக்கிறதா? என்ற கேள்விக்கு ஔவைப்பிராட்டியார் விடை பகர்ந்திருக்கிறார், இதோ பாருங்கள்:

## ஔவைக் குறள் 76–வது பக்கம்

***"அனைத்துருவாய அறிவை அகலில்***
***தினைத் துணையும் இல்லைசிவம்"***

**இதன் பொருள்:-** காணப்படுகின்ற எல்லா உருவமுமாய் அல்லவுமாகி விளங்கும் அறிவே சிவம். அதாவது கடவுளாம். இந்த அறிவை நீக்கிவிட்டுப் பார்த்தால் ஒரு தினை அளவுகூட கடவுள் இல்லை என்பதாம். இந்த அறிவின் சமஷ்டி பாகத்திற்கே கடவுள் என்றும் இன்னும் பல பெயர்கள் சூட்டி அழைக்கிறார்கள். அவை அனைத்தும் அறிவுக்கு பரியாயப் பெயர்களாகும். ஒரு பொருளுக்கு பல பெயர் கூறுதல் பரியாயம் எனப்படும். இவ்வாறே பாரதியாரும் தமது பாடலில் "எதனோடும் நின்றோங்கும் அறிவொன்றே தெய்வமென்று ஓதியறியீரோ" என்றும் "ஒன்று பிரமமுள துண்மை அஃதுன் உணர்வெனக் கொள்வாயே" என்றும் கூறியிருப்பதால் அறியலாம். மேலும் சீர்காழியில் தோன்றிய வள்ளலார் எழுதிய வள்ளலார் சாஸ்திரத்தில் ஒரு பாடலைப் பாருங்கள்.

## செய்யுள்

***"கற்புடை மகளிரெல்லாங் கணவனே தெய்வமென்பர்***
***சிற்பொலி சமயவேடர் எல்லாம் சிலையையே தெய்வமென்பர்***
***தற்கொலி மாந்தரெல்லாம் தாருவே தெய்வமென்பர்***
***அற்புறு பெரியோ ரெல்லாம் அறிவே தெய்வமென்பர்"***

இதன் பொருள் வெளிப்படையாயினும் மூன்றாவது அடியில் வரும் தாருவே தெய்வம் என்பது வேப்பமரம், ஒதியமரம் முதலியவைகளில் தெய்வம் உளதாகப் பாவித்து ஆடு, கோழி முதலிய உயிர்களை பலியிடுபவர்களைக் குறிக்கும். இதில் தற்கொலி மாந்தர் என்பது எவ்வுயிரும் தானாதலால் அவைகளை கொலை செய்வது தன்னைத்தான் கொலை செய்து கொள்வதற்கு சமமாகும் என்பது பொருள். இதனால் பெரியவர்கள் அறிவை தெய்வமாகக் கொண்டார்கள் என்பதாயிற்று. ''அறிவான தெய்வமே தேஜோமயானந்தமே'' என்றார் தாயுமான சுவாமிகள், வடலூர் இராமலிங்க சுவாமிகளும் தம்மை மறந்து என்ற பாட்டில் ''மெய்யறிவாம் வீட்டில்'' என்றும் கூறியிருப்பதால் மெய்யறிவே கடவுள் என்பதாயிற்று. சைவ சித்தாந்த சாஸ்திரம் 645-வது பக்கம் ''அறிந்து வருகின்ற அறிவுதான் நீயாகிய ஆத்மா'' என்று கூறியிருப்பதால் சமயங்கள் கண்ட கடவுளும் அறிவுதான் என்பதாயிற்று. திருப்புகழிலும் ''அறிவை அறிவது பொருளென அருளிய பெருமானே'' என்றும் கூறியிருப்பதால் அருணகிரிநாதருக்கு உபதேசித்ததும் அறிவே கடவுள் என்பதாகும். இவ்வாறே திருமந்திரத்தின் 379-வது பக்கம் ''அறிகின்ற என்னை அறியாது இருந்தேன்'' என்று கூறியிருப்பதால் நந்தியம் பெருமான் குருவாக வந்து நீ பேரறிவு சொரூபன் என்று கூறி உபதேசித்தார். உடனே அறிவுதான் கடவுள் அதுதான் நமது நிஜ சொரூபம் என்றும் அறிந்துகொண்டார் திருமூலர். இனி அறிவின் சமஷ்டியே சிவம் என்பதற்கு மேற்கோள் பிரமகீதை 12-ம் அத்தியாயம் 34-ம் செய்யுளின் ஈற்றடியில் ''பூரணமாய் எல்லாக் காரணங்களும் கடந்த போத இன்பத்தினுள் புக்கான்'' என்று கூறியிருப்பதால் இந்தக் கடவுளர்கள் யாவரும் அறிவானந்தத்தில் நின்று வெளிப்பட்டு அறிவானந்தத்திலே லயமாகின்றார்கள் என்பதே இதன் பொருள். இனி நாமும் அறிவானந்தத்தில் நின்று தான் வந்தோம் மீண்டும் அந்த அறிவானந்தத்திற்கே போகப்போகிறோம் என்று அறிதல் வேண்டும். இனி அறிவானந்த சொரூபமான பிரம்மத்தை முன்னிலை சுட்டுப் பொருளாக்கி அறியமுடியாது என்பதற்கு சீர்காழி திருஞானசம்பந்த சுவாமிகள் கூறிய ஒரு வெண்பாவை காண்பித்துக் கொண்டு முடிக்கிறேன்.

## வெண்பா

*"அறிவால் அறியப்படு பொருளேயாகில்*
*பொறியால் அறியப் புகாவோ - பொறியாரக்*
*கண்ட தெலாம் மாயையெனக் கண்டித்தான்*
*மெய் ஞானம் உண்ட திருச்செவ்வாயான் ஊற்று"*

**இதன் பொருள்:-** மெய்ஞானத்தை உண்ட சிவந்த திருவாயை உடைய திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாயில் இருந்து வெளியில் வந்த ஊற்று அதாவது அருள் வாக்கு என்ன தெரியுமோ? ஏ! பக்தர்களே நீங்கள் விரும்பும் கடவுள் நமதறிவினாலே முன்னிலைச் சுட்டுப்பொருளாக அறியக் கூடுமாயின் அப்போது கண் பொறிகளுக்கு தெரியவேண்டுமே! ஆனால் வேதக்கட்டளை என்ன தெரியுமோ? கண்களால் பார்க்கப்படும் பொருள்கள் எல்லாம் மாயாக்காரியமான அநித்தியப் பொருள்கள் தோன்றி அழியும் பொருள்கள் என்று யாவரையும் கண்டனம் செய்துகொண்டே வந்தாராம் சம்பந்த சுவாமிகள். இவ்வாறாக துருவித் துருவி ஆராய்ந்து பார்க்கும் போது அறிவானந்த சொரூபமாகிய நமது ஆத்மா நித்தியமானது என உள்ளங்கையில் கனிபோல் அறிந்து ஜீவன் முக்தர்களாக வாழ்வாயாக.

இது நிற்க நீங்கள் அதாவது ஆறுமுகம் அவர்கள் 28-4-80-ல் எழுதிய கடிதம் கிடைக்கப்பார்த்தேன். அதில் விசாரசந்திரோதயம் போட்டோ காப்பி எடுத்து எல்லோரும் படிப்பதாக அறிந்து மகிழ்ச்சி அடைந்தேன். உங்கள் கடிதத்தில் மேலும் "புன்புலால் உடம்பின்" என்ற வள்ளலார் பாட்டில் நான் இந்த உடம்பில் இருந்து கொண்டு ஏன் இந்தப்பாடுபட வேண்டும் என்று கேள்விக்குறியாக எழுதியிருந்தீர்கள். இதே இடத்தை சுவாமி விவேகானந்தர் சிகாகோ பிரசங்கத்தில் கண்ணீர்விட்டு அழுதார். பிறகு அவரே அதற்கு ஒரு சமாதானமும் கூறினார். அதாவது மாயையின் செயல் இவ்வாறு இருக்கிறது என்று சமாதானம் கூறி முடித்தார். இனி நான் படும்பாடு என்ற சொல்லுக்கு உண்மைப்பொருளான ஆத்மாவுக்கு அந்த

துன்பம் இல்லை. சரீரத்தோடு உள்ள தொடர்பினால் உளதுபோல் தோன்றுகிறது. சரீரம் வருவதற்கு காரணம் நான் பிரம்ம சொரூபன் என்று அறியாத அறியாமை அதாவது அஞ்ஞானமே காரணமாகும். இந்த அஞ்ஞானமே காரண சரீரமாகும், இந்தக் காரண சரீரமே மற்று தூலசூட்சுமமாகிய இரண்டு சரீரத்தையும் உற்பத்தி பண்ணிவிடும். ஆகையால் இந்தக் காரண சரீரத்தைப் பற்றி அறிய விரும்பின் கைவல்யம் சந்தேகம் தெளிதல் 171-வது பாட்டில் காணலாம்.

## பாட்டு

***"காரண சரீரம் தன்னை களைவது எவ்வாறென்றோதின்***
***ஆரணம் பொய்சொல்லாது அதன் பொருள் அகத்தில் உன்னி***
***பூரணம் ஆகும் என்மேல் புவனங்கள் தோன்றும் என்று***
***தாரணை வந்ததாகில் தரித்திடும் அவித்யை யெங்கே"***

இதன் பொருள்:- பிறப்புக்குக் காரணமான காரண சரீரத்தை களைவது எவ்வாறு எனில்; வேதம் பொய் சொல்லாது. அந்த வேத வாக்கியத்தின் கருத்தை உன்னிப்பாகக் கவனித்து பரிபூரண சொரூபமான ஆத்மாவாகிய என்னிடத்தில் தேகாதிப் பிரபஞ்சம் வெறும் தோற்ற மாத்திரமேயாகும் என்ற நிச்சயம் ஐயம் திரிபு அற வந்து விட்டால் அப்போது காரண சரீரமான அஞ்ஞானம் எங்கே இருக்கும், இல்லையென்பது பொருள். நான் பிரம்மம் என்ற ஞானம் உண்டானால் காரண சரீரம் வறுத்த விதையைப் போன்று மீண்டும் பிறவியைக் கொடுக்காது வறுத்த விதை எங்ஙனம் முளைக்கும். அங்ஙனமே காரண சரீரமான அறியாமை நஷ்டமானால் மற்று இரண்டு சரீரத்தையும் தோற்றிவைக்காது இந்தக் காரண சரீரத்தைப்பற்றி விசாரசந்திரோதயம் சரீரத்திரயம் என்ற அத்தியாயத்தில் காணலாம்.

மகாத்மா காந்திஜீ எழுதிய பஜனாவளி என்ற புத்தகத்தில் நின்று எடுத்தது. காலை பிரார்த்தனை என்ற தலைப்பில்.

நான் காலையில் உள்ளத்தில் உணரப்படும் ஆத்ம தத்துவத்தை நினைக்கின்றேன். எந்த ஆத்மா சச்சிதானந்தமாய் (உண்மையாயும் - ஞானமாயும் இன்பமாயும்) உளதோ, எது பரமஹம்ச யோகியர் இறுதியில் சேருமிடமோ - எது துரியம் எனும் நான்காம் நிலையோ, எது விழிப்பு, சொர்ப்பனம், உறக்கம் என்ற மூன்று நிலைகளையும் எப்பொழுதும் அறியும் சுத்த பிரம்மம் எதுவோ, அதுவே நான்.

''மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்கள் சேர்ந்தமைந்த இவ்வுடல் நானல்ல''

என்று மகாத்மாஜீ கூறியிருப்பதால் ஆத்மாவே கடவுளாம் என்பதற்கு ஐயமில்லை.



## கடிதம்: 16 [4]

*15-7-80*

நிற்க, நீங்கள் அன்புடன் எழுதிய தபால் கிடைக்கப் பார்த்தேன். உங்கள் எல்லோருடைய நல் எண்ணத்தின் அறிகுறியாக உடல் இன்னும் சில காலம் நடமாட்டத்தில் இருக்கும்போல் தெரிகிறது. 90-வயதான இந்த உடம்பின் உதவி மேலும் நாம் எதிர்பார்ப்பதற்கு இல்லை அல்லவா?

உங்கள் கடிதத்தில் முக்கியமான ஒரு கேள்வி காணப்பட்டுள்ளது. அந்தக் கேள்வி எதைப் பற்றியது எனின் ஜீவாத்மா எது? அந்தராத்மா எது? பரமாத்மா எது? மகாத்மா காந்திஜி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அந்தராத்மா அனுமதி கொடுத்தால் நான் சத்தியாக்கிரகம் பண்ணுவேனென்று கூறிப்போந்துள்ளது, நீங்கள் எங் இண்டியா ஹரிஜன் முதலிய செய்தித்தாளில் படித்திருக்கலாம். எனவே ஒரே ஆத்மாவிற்கு சந்தர்ப்ப பேதத்தால் மூன்றுவித பெயர் பெறுகின்றதே யொழிய ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக பேசினாலும் பொருள் ஒன்றேயாகும். ஒரு பொருளுக்கு பல பெயர் கூறுதல்

பரியாயம் எனப்படும். உதாரணமாக அஸ்தம், கரம், பாணி என்று கைக்கு மூன்று பெயர் கூறுவதால் கை மூன்றாகின்றதா? இல்லை. இனி முருகேசன் அவர்களுடைய கேள்விக்கு சுமார் ஆயிரம் வருடங்களுக்கு முன்பு கன்னட தேசத்தில் நிஜகுணயோகி என்ற ஒரு பெரியாரிடம் அவருடைய சிஷ்யன் கேட்டார். அதற்கு பதில் அளிக்கும் முறையில் ஒரு நூல் எழுதினார். அந்தப் புத்தகத்திற்குப் பெயர் வேதாந்த பரிச்சேதம் எனப்படும். இந்த நூலை திருச்சிக்கு அடுத்த துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமிழில் 183 செய்யுளாக மொழி பெயர்த்தருளினார். அந்த நூலுக்குப் பெயர் வேதாந்த சூடாமணி. அதில் ஒரு செய்யுளை மட்டும் இங்கு காண்பிக் கின்றேன்.* இந்த செய்யுளால் ஜீவாத்மா, அந்தராத்மா பரமாத்மா ஆகிய மூன்றிற்கும் உள்ள அபேதம் தெரிந்துகொள்ளலாம். அபேதம் என்றால் ஒன்றானது அல்லது பேதம் அற்றது.

ஈரேழு பதினாலு உலகத்திலும் இராமலிங்க சுவாமிகள் கூறிய 2,600 உலகத்திலும் இந்த அறிவைத் தவிர வேறு கடவுள் கிடையாது. அங்குள்ளவர்களும் அறிவால் அன்றோ ஒன்றை அறியவேண்டும். ஜடப்பொருள் ஒன்றை அறியுமா?

எல்லா சரீரங்களையும் விளக்கிக் கொண்டிருக்கும் அறிவை நீக்கிப் பார்த்தால் ஒரு தினை அளவு கூட கடவுள் இல்லை என்பதாம். இதனால் அறிவு நிறைபொருள்; அதுவே கடவுள் என்பதும் வயிரமலைக்கொப்பாம். இனி இத்தகைய பேரறிவு சொரூபமாகிய கடவுள் நமக்கு வேராக இருக்குமோ? என்ற ஐயப்பாட்டை நீக்கும் பொருட்டு சீர்காழி சிவஞான வள்ளலார் இயற்றி அருளிய ஒரு செய்யுளையும் பாருங்கள். இந்த செய்யுள் யாருக்கு யார் கூறியது எனின் சுகப்பிரம்ம ரிஷியானவர் மிதுலாபுரியை ஆண்ட ஜனகராஜனை சந்தித்து கடவுள் வேறா? நான் வேறா? எனக்கேட்டார். அதற்கு அவர் சொன்ன பதிலே இந்த செய்யுளாகும்.

---

★ இதைப்பற்றிய விளக்கம் இந்நூலில் 46-வது பக்கத்தில் காணலாம்.

### செய்யுள்

*"உன்றந்தை யுரைத்ததுவு முயர் முனிவனுரைத் ததுவு*
*மன்றல் கமழ் கமலனுரை வாக்கியமு மகதேவ*
*நன்றுரைத்த வாக்கியமும் யானுரைத்த வரும் பொருளு*
*மொன்றே யாமையமிலை யுனை யன்றி வேறில்லை"*

**இதன் பொருள்:-** ஹே! ஆனந்த சொரூபியான சுகப் பிரம்ம ரிஷியே கேளும். உன் தந்தையான வேதவியாசர் பிரம்ம சூத்திரத்தில் கூறிய பிரம்ம நிச்சயமும் உயர் முனிவனான வசிஷ்டமாமுனிவர் ஆறாயிரம் சுலோகத்தில் கூறிய ஞானவாசிட்டத்தின் பிரம்ம நிச்சயமும் கமலாசனத்தில் வீற்றிருக்கும் பிரம்மதேவன் பிரம்ம கீதையில் சொன்ன பிரம்ம நிச்சயமும் மகாதேவன் சனகாதி முனிவர்களுக்கு தெட்சிணா மூர்த்தியாக வந்து சொன்ன பிரம்ம நிச்சயமும் சனகராஜனான நான் இப்போது உனக்குச் சொன்ன பிரம்ம நிச்சயமும் (சுவாமி வாசுதேவானந்தாவாகிய நான் முருகேசனாகிய உனக்கு சொன்ன பிரம்ம நிச்சயமும்) ஒன்றேயாம். ஆனால் அந்த பிரம்ம சொரூபம் முக்காலத்திலும் உன்னைவிட வேறாக இல்லை என்பது பசுமரத்தாணி போல் உறுதியாம் என்று கூறி முடித்தார் சனகராஜன். சுகப்பிரம்ம ரிஷியும் பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைந்த பரிபூரணானந்தமே தமது உண்மை சொரூபம் என உணர்ந்து சுகனும் தமது நாட்டிற்கு திரும்பினார். இவ்வாறாக துருவித் துருவி ஆராய்ந்து பார்த்தால் நாம் ஒரு நித்திய வஸ்துவிற்கு வேறாக இல்லை என அறிந்து நிம்மதியாக வாழ்வாயாக!

**முடிவுரை:-** ஒரே பிரம்ம சொரூபமான ஆத்மா இந்த சந்தர்ப்ப பேதத்தால் மூன்று பெயராக விளங்கும் அதனால் பொருள் மூன்றாவது இல்லை உடம்பை நான் எனவும் குடும்பம் எனது எனவும் செயல்படுங்காலம் ஜீவாத்மா எனவும், அதில் தாமரை இலை நீர் போல் பற்றற்று செயல்படுங்காலம் அந்தராத்மா எனவும், சூரியனைப் போல் சகல விவகாரங்களிலும் சம்பந்தமின்றி சாட்சியாய் விளங்கும் காலம் பரமாத்மா எனவும் பெயர் பெறும். ஔவையார் குறளால் இவை அறிவுக்கு வேறாக இல்லை எனவும், சுகப்பிரம்மரிஷி, சனகராஜன்

சம்வாதத்தால் அறிவானந்த சொரூபமான பிரம்மம் நமக்கு வேறாக இல்லை எனவும் அறியத்தக்கது. இனி நாம் பரமாத்மாவை அனுபவிக்க வேண்டாமோ! எனின் அனுபவம் என்ற சொல்லுக்கு பொருள் நிச்சயமான தெளிவு என்பதே யொழிய இட்லி, காப்பி போன்று அனுபவிப்பது அன்று. அனுபவிக்கப்படும் பொருளும் அனுபவிப்பவனும் ஒன்றாதலால் கூடாது. அது மேல் காட்டிய பாடல்களுக்கு விரோதமாம்.



## கடிதம் : 17

*13-12-1980*

சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் இமாலய அடிவாரத்தில் உள்ள ரிஷிகேசம் என்ற இடத்தில் நான் ஒரு மகாத்மாவை குருவாகக் கொண்டு சரணாகதி அடைந்தேன். அவர் உபயகலாநிதி என்ற பட்டம் பெற்றவர். அதாவது தென்மொழி, வடமொழி இரண்டிலும் புலமை வாய்க்கப் பெற்றவர். வடமொழியில் பரசமயகோளறி என்ற பட்டமும் பெற்றுள்ளார். அவருக்கு நான் பல நாட்கள் தொண்டு செய்தபின் கீழ்வருமாறு கேட்க ஆரம்பித்தேன்.

1. **வினா: குருதேவா! எனக்கு கடவுளின் ஒரு பெயரை சொல்லிக் கொடுங்கள் நான் ஜபம் பண்ணிக்கொண்டிருக்கிறேன்.**

   விடை:- அன்பனே! உண்மையான பரம்பொருளுக்கு ஒரு உருவமும் ஒரு பெயரும் இல்லை. அப்படியிருக்க கற்பனையாகத்தானே நான் உனக்கு சொல்ல வேண்டும். பெயரின் பொருள் தெரியாமல்; பெயர்மட்டும் சொல்லிக் கொண்டிருப்பதினால் பலன் இல்லை. உதாரணமாக இராமா என்றால் அதன் பொருள் 'ர' என்றால் ஞானத்தையும் 'மா' என்றால் மாயையையும் குறிக்கும். இப்படி எல்லாப் பெயர்களுக்கும் பொருள் தெரிந்து கொள்ளாமல் பெயர் மட்டும் சொல்வதினால் பலன் இல்லை. இருக்குமானால் டேப் ரிக்கார்டுக்கும் பலன் இருக்கவேண்டுமே? பெயரும் உருவமும் கற்பனை என்பதற்கு திருவாசகத்தில்

''ஒரு உருவமும், ஒரு நாமமும் ஒன்றும் இல்லாததற்கு ஆயிரம் திருநாமம் பாடி தெள்ளேனம் கொட்டோமோ?'' என்றும் காஞ்சிபுரம் தேவாரத்தில் ''ஓர் ஊரன் அல்லன், ஒரு உருவன் அல்லன்'' என்றும் கூறியிருப்பதால் அறியலாம்.

2. ***வினா: உத்தம குருவே! நான் கடவுளை அடைய தபசு செய்ய விரும்புகிறேன்? அதைப்பற்றி விளக்கிக்கூறி அருள்வீராக?***

விடை: உத்தம சிஷ்யனே கேட்பாய்! தபசு என்பது காட்டுக்குச் சென்று கந்தமூலங்களை - அருந்தியும், பட்டினி கிடந்தும் வெறும் தண்ணீர் மட்டும் அருந்தியும் ஒற்றைக்காலில் நின்றும் உடம்பை வாட்டி கஷ்டப்படுவது தபசு என்று பலர் கருதி அன்றும், இன்றும் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. ஆனால் தபசு என்பதற்கு உண்மையான பொருள் என்னவென்றால் உனது ஆத்ம சொரூபம் எத்தகையது? அதன் சொரூபம் என்ன? என்று தக்கார்பால் விசாரித்து அறியும் விசார ஞானத்திற்கு தபசு என்று வேதங்களில் கூறப்பட்டுள்ளது. உதாரணமாக வித்யாரண்ய சுவாமிகள் அருளிச் செய்த பஞ்சதசி என்ற புத்தகத்தில் ''தபசு என்பது விசார ஞானத்திற்கு உரிய பெயராம்'' என்று கூறியிருப்பதே போதுமான சான்றாகும். மேலும் கைவல்ய நவநீதத்தில் ''தவமான மனைத் தொழிலை செய்யும்போதும் தழுவி அனுபவித்த சுகம்தனை விடாதே'' என்று கூறியிருப்பதால் தபசு என்ற சொல்லுக்கு பொருள் விளங்குகிறது அல்லவா? ஒரு குடும்பத்தில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை வளர்த்து ஆளாக்கி அந்த குழந்தை களுக்கு நல் அறிவூட்டும் வகையில் முயற்சிகளை செய்யும் பெற்றோர்களும் தவம் உடையவர்கள்தான் என்றல்லவா? இந்தப் பாட்டின் பொருள் அமைந்துள்ளது. மேலும் திருக்குறள் தவம் என்ற அதிகாரத்தில்

***''உற்றநோய் நோன்ற லுயிர்குறுகண் செய்யாமை***
***அற்றே தவத்திற் குரு''*** *(261)*

இதன் பொருள்:- தனக்கு வந்த துன்பங்களை பொருத்துக் கொள்வதோடு தான் பிற உயிர்களுக்கு துன்பம் செய்யாது இருப்பது தவத்திற்கு இலக்கணமாம் என்று வரையறுத்து தவத்தின் இலக்கணம் கூறிவிட்டார் திருவள்ளுவர். அன்பனே தபசு என்பதற்கு பலர் பலவிதமாக பொருள் கொண்டிருப்பினும், நான் உனக்கு சொல்வது என்னவென்றால் தபசு என்பதற்கு தனது ஆத்ம சொரூபத்தை விசாரித்து அறியவேண்டும். தன்னுடைய ஆத்மாவை விசாரித்து தேகமே நான் என்ற திடநிச்சயம் வந்ததுபோல் சச்சிதானந்த சொரூபமே நான் என்ற திட நிச்சயம் வரவேண்டும் இதை திருக்குறளில்

**"தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய**
**மன்னுயி ரெல்லாந் தொழும்".** (குறள் 268)

இதன் பொருள்:- ஜட வடிவமான இந்த தேகமே நான் என்ற அகங்காரம் கற்பனை என்று ஒதுக்கி சச்சிதானந்த சொரூபமான ஆத்மாவே நான் என்று அறிந்தவனை ஏனைய மக்கள் எல்லாரும் தொழக்கூடியப் பெருமை ஏற்படும் என்று கூறியிருப்பதால் அறியலாம்.

3. **வினா: சிவ சொரூபமாம் தேசிக மூர்த்தியே! நான் கடவுளை தியானம் பண்ண விரும்புகிறேன். எப்படி தியானம் பண்ணுவது என்பதைப் பற்றி அருளிச் செய்வீராக?**

விடை: அன்பனே தியானம் என்பது ஒரு படத்தில் அல்லது சிற்ப விக்கிரகத்தில் கண்ட ஒரு உருவத்தை மனதில் மீண்டும் மீண்டும் நினைப்பதற்கு தியானம் என்று சொல்லப்படும். உண்மையான கடவுளுக்கு உருவம் இல்லை. உருவம் கற்பனை என்பது பற்றி முன்னமே சொல்லியிருக்கின்றோம். இனி ரூபம் அற்ற அரூபக் கடவுளை தியானம் செய்யலாம் எனின் அரூபம் என்பது எந்தக் குறிப்புக்கும் அகப்படாதது மனம் கடந்தது. வாக்குக்கு அப்பாலானது அதை எப்படி தியானிக்க முடியும். எனவே தியானம் என்ற சொல்லுக்கு தன் ஆத்ம சொரூபம் சச்சிதானந்த சொரூபமாம் என்று ஐயம் திரிபு

அற நிச்சயிப்பது தியானமாம் எனக் கொள்க. இதை கைவல்யக்காரர் கூறுவதைப் பாருங்கள். ''ஒன்றை மற்றொன்றாக பாவிக்கும் தியானம் கற்பிதமாம்'' என்று கூறியிருப்பதால் அரூபத்தை உருவமாகப் பாவிப்பது கற்பனை என்பதாயிற்று. மேலும் திருவாசகத்தில் ''பாவனையாய கருத்தினில் வந்த பராமுதாகாதே' என்று மாணிக்கவாசக சுவாமிகள் கூறியிருப்பதால் தியானம் என்பது தன்னை அறிவது என்பது பொருளாகக் கொள்ள வேண்டும். எனவே பிரம்ம சொரூபமே நாம் என்று நிச்சயிப்பதே தியானமாம்.

4. **வினா: குரவர் சிகாமணியே! நான் யோகாப்பியாசம் செய்து கடவுளை அடைய விரும்புகிறேன்? அதன் உண்மையை அருளிச் செய்யுமாறு வேண்டுகிறேன்.**

விடை: ஆனந்த சொரூபமான சிஷ்யனே கேட்பாயாக! யோகம் என்ற சொல்லுக்கு பல பேர்கள் பலவிதமாக அர்த்தங்களைப் பண்ணித் தடுமாறிப் போய் விட்டார்கள். ''சருகு பல பட்சனம் செய்து அலைந்தோர்கள் கோடி'' என்று மஸ்தான் சாகிபு கூறியிருப்பது போதுமான சான்றாகும். இன்னும் சிலர் மூச்சை அடக்குவது என்றும் சிலர் மனதை அடக்குவது என்றும் அர்த்தம் பண்ணி அகால மரணம் அடைந்தார்கள். இன்னும் சிலர் ஜீவனே பிரம்மத்தில் இரண்டறக் கலப்பது யோகம் என்று நம்பி வாளாப் போயினார்கள். ஜீவன் கற்பிதப் பொருள். பிரம்மம் யதார்த்த பொருள். இரண்டுக்கும் ஏகத்துவம் கூடாது. கூடுமானால் பழுதையில் தோன்றும் பாம்புக்கும் பழுதைக்கும் ஐக்யம் வரவேண்டும். வராததல்லவா? இது பற்றி அன்றோ! பட்டினத்து சுவாமிகள் ''புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்'' என்றார். இதன் பொருள் ஜீவன் பிரம்மத்தில் ஐக்யமானால் பிறிதொருகாலத்தில் பிரியும். பிரிந்த பொருள் மீண்டும் கூடும். இது அனவஸ்தா தோஷமாம் என்பது பட்டினத்து சுவாமிகள் கருத்தாம். இனிப் பிராணாயாமம் மூச்சை அடக்கி பழகலாம் எனின் அதுவும் பயனற்றது என்பதைப் பற்றி சீர்காழி

கண்ணுடைய வள்ளல் எழுதிய ஒழிவியலொடுக்கம் என்ற புத்தகத்தின் 177-வது பக்கத்தில் ''நடந்த குருட்டு ஊமன் நஞ்சருந்தி பாரூர் கிடந்த குழிப்புக்கு அதனினும் கேடு'' என்றார். அதாவது பிறவியில் குருடனும் ஊமையுமான ஒருவன் விஷம் அருந்தி. எடுப்பாறற்ற பாழும் கேணியில் வீழ்ந்த; அவனினும் மூச்சை அடக்கிப் பழகினவன் கேடு கெட்டவன் என்பது வள்ளலார் கருத்தாகும். எனவே அன்பனே! யோகம் என்பதற்கு பொருள் தனது ஆத்மாவை பற்றி விசாரித்து அறிவதுதான் உண்மையான பொருளாகும்.

5. **வினா: சிவசொரூபமாம் தேசிக மூர்த்தியே! சொன்ன வழிகள் அறிந்தேன். இன்னமும் ஒரு விண்ணப்பம் உண்டு. அதாவது கடவுளை தரிசனம் பண்ணவேண்டும் என்று பலர் சொல்லுகிறார்களே! அதன் உண்மையான கருத்தை அறிய விரும்புகிறேன்.**

விடை : சற்குண சீலனே கேட்பாயாக! நீ கடவுள் நாமரூபம் தாங்கி வந்து உனக்கு தரிசனம் தரவேண்டும் என்று நினைப்பது ஐந்து வகை பயித்தியத்தில் ஒன்றாகும். கடவுளைதரிசிப்பதனால் பலன் ஒன்றும் இல்லை. பண்டைக் காலத்தில் பக்தர்களுக்கு தரிசனம் கொடுத்ததாகக் கேள்விப்பட்டு இருக்கிறோம். அதனால் அவர்கள் அடைந்த லாபம் என்னவென்றால் ஒன்றும் இல்லை. உதாரணமாக கண்ணபிரான் அர்ச்சுனனுக்கு தரிசனம் கொடுத்தும் அன்னியில் தோழனாகவும் இருந்தார். என்ன கொடுத்தார்? ஒன்றும் இல்லையே; பகவத்கீதை '700' சுலோகம் சொன்னார். அதில் 13-வது அத்தியாயத்தில் ஆச்சாரிய உபாசனம் என்று சொன்னார். அதாவது நீ ஒரு குருவை அடைந்து கீதையின் பொருளைக் கேட்டு அறிவாய் என்று அருளினார். அதுமட்டுமா? அந்தக் கண்ணபிரானை பல்லாயிரம் மக்கள் மட்டுமன்றி எதிரிகள் கூட தரிசித்தார்கள். என்ன பயன் கண்டது. மேலும் கடவுள் இராமனாக வந்தார். வசிட்டமாமுனிவரைக் குருவாகக் கொண்டு ஞான வாசிட்டம் '6000' சுலோகம் கேட்டார். அந்த இராமனை பல்லாயிரம் மக்கள் தரிசித்தார்கள்.

அதில் ஒருவனை அழைத்து அன்பனே! பந்தம் என்றால் என்ன? வீடு, மோட்சம், ஞானம், அஞ்ஞானம், ஜீவன், பிரம்மம் என்னவென்று கேட்டால் தெரியாது என்பார்கள். ஏன் தரிசனத்தால் மட்டும், அந்தக் கேள்விகளுக்கு பொருள் புரிய வராது என்று விளங்குகிறது அல்லவா? அதுமட்டுமா? பத்து அவதாரம் எடுத்த கடவுள் உருவத்தை லட்சோப லட்சம் மக்கள் பார்த்திருப்பார்கள். யாருக்கு என்ன புரிந்தது. ஒன்றும் புரியவில்லை. இதுபற்றி அன்றோ இராமலிங்க சுவாமிகள் ''கண்டதெல்லாம் அநித்தியமே'' என்றார். தாயுமான சுவாமிகளும் ''முன்னிலைச் சுட்டு ஒழி என்று பலகாலும் நெஞ்சே நான் மொழிந்தேன்'' என்றார். பரமசிவன் பார்வதிக்குச் சொன்ன தேவிகாலோத்ரம் என்ற நூலில் ''தோன்றுவதெல்லாம் அசத்து'' என்றார். சைவத்துக்கு முதல் நூலான சிவஞான போத சூத்திரத்தில் ''உணர், உரு, அசத்து'' என்றார். அதாவது காணப்பட்டதெல்லாம் பொய் என்பதாம். இவ்வாறாக ஆராய்ந்து பார்த்தால் அறிபடுபொருள் கடவுள் ஆகாது. பேரறிவே கடவுளாகும். ஆகையால் கடவுளை தரிசிக்கவேண்டும் என்ற பயித்தியத்தை விட்டொழிப்பாயாக! இதை நான் சொல்லவில்லை கடவுள் தெட்சிணாமூர்த்தியாக வந்து கல்லாலின் கீழ் இருந்து சனகாதி முனிவர்கள் நால்வர்க்கும் உபதேசம் செய்த செய்யுளில் காணலாம் அதை சீர்காழி திருஞானசம்பந்தரின் முதல் சிஷ்யர் சிவஞானவள்ளலார் எழுதிய வள்ளலார் சாஸ்திரம் 171-வது பக்கம் அதிரகசியம் என்ற தலைப்பின் கீழ் ''நித்தன் அன்றுரைத்த'' என்ற பாட்டின் மூன்றாவது அடியில் ''தானும் கடவுளும் வேறெனக் கருதல் நாலாவது பிராந்தியாகும்'' என்றும் கூறியிருப்பதனால் தரிசனம் பண்ணவேண்டும், என்பது பிராந்தி அதாவது பயித்தியம் என்பதாயிற்று. அன்பனே! இனி சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் சர்வமத சகோதர சங்கத்தில் 'ஹே' ஆனந்தத்தின் குழந்தைகளே! என்று கூறியவுடன் கரகோஷம் ஐந்து நிமிடம் நீடித்தது அல்லவா? அந்தக் கருத்தே சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியருளிய வேதாந்த சூடாமணியின் 26-வது

செய்யுளின் நாலாவது அடியில் ''நீ கடவுள் சொரூபம் நிஜம் சச்சிதானந்த நித்திய பூரணமாக நீ நினைத்துக் கொள்ளே'' என்று கூறியிருப்பதை அறியலாம்.

சிவப்பிரகாச சுவாமிகள் சொன்ன ஐந்து இலக்கியங்களும் ஓர் உருவாய் அமைந்துள்ளது உனது ஆத்ம சொரூபம். அதாவது நனவு, கனவு, உறக்கங்களில் நீ இருப்பதால் சத்தாய் இருக்கிறாய். அறிவு சொரூபனாய் இருப்பதால், சித்தாய் இருக்கிறாய். விஷயங்களையெல்லாம் ஆனந்தமாக்கி அனுபவிப்பதால் ஆனந்த சொரூபமாய் இருக்கிறாய்; நிறைந்தவனாதலால் பரிபூரணனாய் இருக்கிறாய். இந்த ஐந்து இலக்கியமும் உனது சொரூபத்திற்கு அமைந்த உண்மையாம். அன்பனே! இந்த உண்மையை நீ அறிவாயாக! இவ்வாறே கைவல்ய நூலாரும் சந்தேகம் தெளிதல் படலத்தில் 102-வது செய்யுளின் மூன்றாவது அடியில் ''நீ அச்சச்சிதானந்தமாய் வேறொன்றும் நினைந்திடாதிருப்பாயேல் மாயை சக்தி போகும், இஃது அன்றி மந்திரம் மறைகளில் காணோமே! என்றார்.

இதன் பொருள் வெளிப்படையாயினும் வேறொன்றும் நினைந்திடாது இருப்பாயேல் என்பதற்கு உலக விவகாரங் களை நினைந்திடாதே என்பது அல்ல, சச்சிதானந்தத்தை தவிர வேறு கடவுள் உண்டென்று நினைந்திடாதே என்பது அதன் பொருளாகும். அன்பனே! வேதத்தின் முடிவான கருத்துக்களை உனக்குச் சொன்னேன். சுத்த பிரமமான உன்னிடத்தில் மாயையும் அதன் காரியமான தேகாதிப் பிரபஞ்சமும், ஜனன மரணமும் முக்காலத்தும் இல்லை. கற்பனையாகத் தோன்றுகின்றது என அறிந்து ஆனந்த சொரூபனாக வாழ்வாயாக! எனக்கூறி என்னை ஆசீர்வதித்தார்.

நானும் பிறப்பில்லாத எந்த மோட்சமும் வேண்டேன். எனக்கு பிறவிதான் வேண்டும். ''நின் திருப்பணி செய்யப் பெறின்'' என்று நமஸ்கரித்தேன். பிறகு நாங்கள் இருவரும் காஷ்மீருக்கு போனோம். அங்கு ஆயிரக்கணக்கான மக்கள் அமிர்தநாத் என்ற இடத்துக்கு யாத்திரை போனார்கள்.

அவர்களுடன் நாங்களும் போனோம். அமிர்தநாத் என்ற இடம் காஷ்மீரத்தில் இருந்து 90 மைல் தூரம் ஐஸ் மலையில் போகவேண்டும். 80 மைல் வரையில் குருபிரான் என்னுடன் இருந்தார். பிறகு மாயமாய் மறைந்துவிட்டார். நானும் தேடிப்பார்த்தேன். எங்கும் காணவில்லை. ஆம் ஆதிசங்கரரும், விவேகாநந்தரும், இராமலிங்க சுவாமிகளும் மறைந்துவிட்டார். முடிசார்ந்த மன்னர்களும் முடிவில் ஒரு பிடி சாம்பலாய் போனதும் கண்டுவிட்டோம். இதுவே மாயாசக்தியின் கட்டளையாகும் என்று நினைத்து, நானும் குருபிரான் கட்டளைப்படி உத்தமர்களுக்கு இந்த உண்மைகளை சொல்ல வேண்டும் என்று அருளிச் செய்தமையால் உங்கள் எல்லோருக்கும் இந்த உண்மைகளைச் சொல்லவேண்டும் என்று உங்கள் ஊருக்கு வந்துவிட்டேன். மற்றபடி உங்களுக்கும், திரு. ஏகாம்பரம் அவர்களுக்கும், திரு. சொக்கலிங்கம் அவர்களுக்கும், திரு. குஞ்சிதபாதம் அவர்களுக்கும், திரு. கணபதி அவர்களுக்கும், திரு. மாயழகன் அவர்களுக்கும் திரு. V.R. ஆறுமுகம் அவர்களுக்கும் எனது மனம் கனிந்த ஆசி உரித்தாகுக!



## கடிதம்: 18 [6]

*22-12-1980*

பேரன்பின் மிக்க முருகேசா கேட்பாயாக!

### ஜனன மரண பயம் வேண்டாம்

இந்து மதத்தின் அடிப்படை நூல்களான வேதோ உபநிஷத்துக்கள் 1180 இருக்கின்றன. இந்த உபநிஷத்துக்கள் ஜனன மரணத்தைப்பற்றி கூறிப்போந்துள்ள அபிப்பிராயத்தை கீழே தருகின்றேன். கேளுங்கள். சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தின் 6-வது அத்தியாயத்தில் உத்தாலகர் என்னும் முனிவரைப் பார்த்து அவருடைய புத்திரனாகிய சுவேதகேது கீழே வருமாறு கேட்கிறான்.

ஹே பகவானே! ஜனன மரணம் எப்படி உண்டாகின்றது?

உத்தாலகர் பதில்: ஹேப்ரிய சொரூபனான புத்திரனே ''ஒருவன் மரிக்கும்போது அவனுடைய சூட்சும சரீரம் அதாவது ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பிராணாதி ஐந்து, மனம், புத்தி இரண்டு ஆக பதினேழு தத்துவமான சூட்சும சரீரம் தூல சரீரத்தை விட்டுவிடுவது மரணம் எனப்படும். அந்த சூட்சும சரீரம் மற்றொரு ஸ்தூல தேகத்தை அடைவது ஜனனம் எனப்படும். இது கர்ம காண்ட நூல்களின் கருத்தாகும். அந்தக் கருத்து சுருதி, யுக்தி, அனுபவத்துக்கு ஒத்துவராது; ஆகையால் அது உண்மையன்று. உதாரணமாக ஐகோர்ட்டு தீர்ப்பை ரத்துசெய்ய, சுப்ரீம் கோர்ட்டுக்கு அதிகாரம் இருப்பது போல், கர்ம காண்ட நூல்களின் தீர்ப்பை ரத்து செய்ய ஞானகாண்ட நூல்களுக்கு அதிகாரம் உண்டு. எனவே சூட்சும சரீரம் ஸ்தூலத்தை விட்டு வெளியில் செல்லாது. இங்கேயே லயமாய் விடும். இதை மேற்கூறிய சுவேத கேதுவுக்கு சொன்ன தத்துவமசி மகாவாக்கியம் 9-வது முறை உபதேசத்தின் ''ஒரு புருஷன் மரிக்கும்போது அவனது வாக்கு மனதிலும், மனது பிராணனிலும், பிராணன்அக்கினியிலும், அக்கினி பிரம்மத்திலும் லயமாகும் என்று சூட்சும சரீரத்திற்கு லயம் கூறியிருக்கின்றதே தவிர, போக்குவரத்து கூறவில்லை! என்பதை யூகித்து உணருக! மேலும் அத்வைதார்த்த ப்ரகாசிகை என்னும் நூலின் முதற்பாகம் 124-வது பக்கத்தில் ஆர்த்த பாகர் என்ற முனிவர் ஜனகராஜனது குருவாகிய யாக்ஞ்ஞிய வல்கியரைப் பார்த்து ஹே முனிபுங்கவரே! ''ஒருவன் மரணமடையும் காலத்து அவனுடைய சூட்சும சரீரம் ஸ்தூல சரீரத்தை விடுத்து வெளியில் கிளம்பி மற்றொரு சரீரத்தை அடைகின்றதா? இல்லையா? என்று கேட்டார். அதற்கு யாக்ஞ்ஞிய வல்கியர் சூட்சும சரீரம் ஸ்தூல சரீரத்தை விடுத்து மற்றொரு சரீரத்தை அடைவதில்லை என்றார்.''

நம் முன்னோர்கள் சூட்சும தேகத்தோடு வெளியில் இருப்பதாக நம்பித்தானே அவர்களுடைய புதல்வர்கள் கருமாதி முதலிய சடங்குகள் செய்கின்றார்கள். இதை துருவித் துருவி ஆராய்ந்து உணர்க.

மேலும் பஞ்சதசி 400-வது பக்கத்தில் ''ஸ்தூல தேகத்தை விடுத்து சூட்சம தேகம் ஓரிடத்தும் காணமுடியாது'' என்றும் பாஷிய கிருதயம் 41-வது பக்கம் ''உலக உற்பத்திக்கு முன்னும் ஜீவன் இல்லை. மகாபிரளயத்திலும் ஜீவன் இல்லை. மத்தியில் அந்தக்கரண கற்பனையினால் கற்பிதன் ஆனான் என்றும் கூறியிருப்பதால் சூட்சம சரீரமும் அதில் பிரதிபிம்பித்துள்ள ஜீவனும் கற்பிதப் பொருள் என்பதாயிற்று ஆகுமானால் ஒரு கற்பிதப் பொருள் யதார்த்தப் பொருளை விட்டு தனியே எப்படி செல்லக்கூடும். உதாரணமாக ஒரு குடத்தில் தோன்றும் ஜல சந்திரன் பிரதிபிம்பமாகையால் மற்றொரு குட ஜலத்தில் பிரவேசிக்கும் என்று கூறுவது பொருந்துமா?

மேலும் இராமலிங்க சுவாமிகளின் சிஷ்யராகிய நிச்சல இராமனுஜ சுவாமிகள் எழுதிய சீதாராம ஆஞ்சனேய சம்வாதம் என்னும் நூலின் 248-வது பக்கத்தில் ''மனது முதலிய அந்தக் கரணத்தோடு கூடிய சூட்சும சரீரம் ஸ்தூல சரீரத்தை விடுத்து தனித்து இராது என்றார்.'' மேலும் பகவத்கீதை கூடார்த்த தீப உரை 460-வது பக்கத்தில் ''உண்மையில் இந்த ஜீவ சேதனம் ஒன்றாமாயினும் உலக திருஷ்டியால் பல ஜீவர்களாக அருளினர் பகவான்'' என்று கூறியிருப்பதால் சூட்சும சரீரமும் அதில் பிரதிபிம்பித்துள்ள ஜீவ சேதனமும் சமஷ்டியே ஒழிய வியஷ்டி பொருள் அல்ல என்பதாயிற்று. ஆகுமானால் சமஷ்டிப் பொருள் அதாவது எங்கும் நிறைந்த பொருளுக்கு போக்குவரத்து எங்ஙனம் பொருந்தும். மேலும் ஆத்ம புராணம் 639-வது பக்கத்தில் சூட்சும சரீர ஸ்திதியானது தூலசரீரம் இன்றி ஆகாது என்று கூறியிருப்பதால் சூட்சும சரீரம் தனித்து நிற்காது என்பதாயிற்று. மேலும் விருத்திப் பிரபாகரம் 469-வது பக்கத்தில் ''பாரதத்தில் வரும் கர்ணனது திருஷ்டாந்தம் போல் கற்பித சம்பந்தத்தால் பிரம்மத்தில் நின்று உண்டாகாமலே இந்த ஜீவத்தன்மை தோன்றுகிறது'' என்று கூறியிருப்பதால் கர்ணனுக்கு எப்படி தான் இழிகுலத்தவன் என்ற பிராந்தி உண்டாயிற்றோ; பிறகு சூரியனுடைய உபதேசத்தால் பிராந்தி நீங்கி தான் உயர்குலத்தவன் என்று

அறிந்தானோ அதுபோல் சூட்சும சரீரமும் ஜீவனும் தனித்து போகும், வரும் என்று கூறுவது பிராந்தி என்பதாயிற்று.

தக்கார்பால் கேட்டு பிராந்தி நீங்குவதே உண்மை ஞானமாகும். மேலும் திருவருட்பா ''என்னுரு விருப்பாதி'' என்ற பாட்டின் மூன்றாவது அடியில் ''வித்தொன்றும் இன்றியே விளைவெலாம் தருகின்ற விஞ்ஞான மழைசெய் முகிலே'' என்று கூறியிருப்பதால் வித்தின்றி விளைபொருள் காணப்படுவது போல் முன் காரணமான கர்மத்தை செய்த சூட்சும சரீரம் தனித்து வெளியில் சென்று ஒரு ஸ்தூலத்தை அடைந்தல்லவா கர்மத்தை செய்ய வேண்டும்? வித்தில்லாதது போல் சூட்சும சரீரம் வெளியில் செல்லாததினால் கர்மமும் இல்லை என்பதாயிற்று. மேலும் பஞ்சதசி வசனம் என்ற புத்தகத்தின் 41-வது பக்கம் ''ஸ்தூல சரீரத்தைத் தவிர அந்தக் கரணமான மனது அதாவது சூட்சும சரீரத்தை புறம்பாக காண முடியாதபடியினால்'' என்று கூறியிருப்பதினால் சூட்சும சரீரம் தனித்து இல்லை என்பதாயிற்று. மேலும் விசாரசாகரம் ஐந்தாம் தரங்கம் 173-வது பக்கம் ''எல்லாவற்றிற்கும் முதலான சிருட்டியில் முந்தின கர்மம் இல்லை'' என்று கூறியிருப்பதால் முன்கர்மம் இல்லை. இல்லாமையால் சூட்சும தேகம் தனித்து சென்று ஸ்தூல தேகத்தை அடையாது என்பதாயிற்று. மேலும் கைவல்யம் பொன்னம்பல சுவாமி உரை 205-வது பக்கம் ''ஸ்தூல தேகங்களைப்போல சூட்சும தேகமும் அனேகமாக வந்து வந்து நாசமாவன அன்மையின்'' என்று கூறியிருப்பதால் சூட்சும தேகம் அநேகமாகவோ; போக்குவரத்தோ இல்லை என்பதாயிற்று. மேலும் கைவல்யம் ''வெங்கடாசல சுவாமி உரையில் 114-ம் பக்கம் இந்த சூட்சும சரீரம் தனக்கு அதிஷ்டானமான கூடஸ்தனிடத்தே லயம் அடையும்'' என்று கூறியிருப்பதால் சூட்சும தேகத்திற்கு லயம் கூறியதேயொழிய போக்குவரத்து கூறவில்லை என்பதைக் காண்க.

மேலும் அன்னிபெசண்ட் அம்மையார் எழுதிய பிரம்மஞான சுருக்கம் என்ற நூலின் 3-வது அத்தியாயத்தில்

புனர்ஜென்மம் உண்டு என்னும் பட்சம் தற்கால சிருட்டிக்கு விரோதமாய் இருக்கிறது என்று கூறியிருப்பதால் தற்காலமுள்ள விஞ்ஞான ஆராய்ச்சிக்கு புனர்ஜென்மம் கூறுவது பொருந்தாது என்பதாயிற்று. இனி ஸ்தூல சரீரத்தைப்போல் ஒவ்வொரு வருக்கும் தனித்தனியாக சூட்சும தேகம் இல்லை. அது சமஷ்டியாக, அதாவது பன்மையாக அமைந்துள்ளது என்பதை பகவத்கீதா கூடார்த்த தீப உரையில் 64-ம் பக்கம் அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்கள் அவற்றின் காரிய ரூப சர்வ அமூர்த்த பதார்த்தங்கள் என்பனவற்றின் சமுதாய ரூபம் இரண்ய கற்பமாம். அது சூட்சும சமஷ்டியாம் என்று கூறியிருப்பதால் சூட்சும சரீரம் சமஷ்டி என்பதாயிற்று. ஆகுமானால் சமஷ்டி பொருளுக்கு போக்குவரத்து எவ்வாறு பொருந்தும், பொருந்தாது என்க.

உதாரணமாக அகண்ட பொருளான ஆகாயத்திற்கு போக்குவரத்து பொருந்துமா, பொருந்தாததல்லவா? மேலும் அத்வைதபோதக தீபிகை என்ற நூலின் 154-வது பக்கத்தில் ''மனம் எங்கும் இருக்கும்'' என்று கூறியிருப்பதால் மனம் என்பது சூட்சும சரீரத்தையே குறிக்கும். எனவே சூட்சும சரீரம் சமஷ்டி என்பதாயிற்று. ஆகுமானால் சமஷ்டி பொருளுக்கு போக்குவரத்து பொருந்தாது என்று முன்னமே கூறினோம். மேலும் மேற்படி நூலின் 144-வது பக்கத்தில் அஞ்ஞான கற்பிதனான ஜீவன் சொப்பன சுழுத்தி மூர்ச்சையாதிகளில் அழிந்துபோகின்றபடியினாலே ஜீவன் மித்யாபூதன் என்றறிக என்று கூறியிருப்பதனால் ஜீவத்துவம் கற்பிதம் என்பதாயிற்று. ஆகுமானால் சூட்சும தேகம் கற்பிதம் என்பதாயிற்று. அப்படி யானால் கற்பிதப் பொருளுக்கு போக்குவரத்து பொருந்துமா? பொருந்துமானால் பழுதையில் தோன்றும் பாம்புக்கும் போக்குவரத்து சித்திக்கவேண்டுமே.

மேலும் அனுபவானந்த தீபிகை வசனம் என்ற நூலின் 137-வது பக்கம் ''நனவில் காணும் சூட்சும தேகம் கனவில் ஸ்தூல தேகத்தில் அடங்குவதும் சுழுத்தியில் காரண தேகத்தில் அடங்குவதும் அனுபவமாய் இருக்க இது தனித்து உயிரோடும் பிராணாதி அந்தக் கரணங்களோடும் சென்று மற்றொரு

சரீரத்தில் புகுந்து சுக துக்கத்தை அடையும் என்று கூறுவது சதுர் மறையின் அடிப்படைக்கு விரோதமாம். ஏன் எனில் அது அநாதியாகையால்'' என்று கூறியிருப்பதால் சூட்சும சரீரத்திற்கு போக்குவரத்து கூறுவது நான்கு வேதங்களின் அடிப்படைக்கு விரோதமாம் என்பதாயிற்று. ஆகுமானால் மேற்படையான கர்ம காண்டத்திற்கு விரோதம் இல்லை என்பதாயிற்று. இங்கே அடிப்படை என்பது ஞான காண்டத்தையும், மேற்படை என்பது கர்ம காண்டத்தையும் குறிக்கும். இதன் பொருள் வெளிப்படையாயினும் அதில் ஒரு இரகசியம் இருக்கின்றது. அது என்னவென்றால் சூட்சும சரீரமும் அதில் பிரதிபிம்பித்துள்ள ஜீவனும் அநாதியாம். அநாதி என்றால் உற்பத்திநாசம் இன்றியும் போக்குவரத்து இன்றியும் எப்பொழுதும் தோன்றிக்கொண்டே இருக்கும். இப்படி தோன்றும் பொருளுக்கு காலவரையறை கூறுவது பொருந்தாது. இனி விசார சாகரம் 5-ஆம் அத்தியாயத்தில் ''பிரம்மம் ஈஸ்வரன் ஜீவன் அவித்தை அதாவது அஞ்ஞானம் மாயை இவைகள் ஒன்றுக்கு ஒன்று உள்ள சம்பந்தம், ஆகிய ஆறும் அநாதியாம். இதில் பிரம்மம் ஒன்றுமே அநாதி நித்யம் பாக்கி ஐந்தும் அநாதி கற்பிதமாம் என்று கூறியிருப்பதால் அநாதி பொருளுக்கு போக்குவரத்து பொருந்தாதென்க. இனி கைவல்யம் 22-வது செய்யுளில் ''அநாதியாம் ஜீவர் எல்லாம்'' என்று கூறியிருப்பதால் ஜீவத்துவம் அநாதி என்பதாயிற்று. இனி கண்ணபிரான் அருளிச்செய்த கீதாசாரத் தாலாட்டு 6-வது செய்யுளில் ''நீயும் நானும் புவிமேல் நிருபர்களும் மெய்யுணர்வால் ஆயுங்கால் பிறந்திருப்பது யாருக்கும் இல்லை என்றவரோ'' என்று கூறியிருப்பதால் அறியலாம். இதன் பொருள் வெளிப்படையாயினும் மெய்யுணர்வால் ஆராயும் இடத்து பிறப்பும் இறப்பும் ஒருவருக்கும் இல்லை. பொய்யுணர்வால் ஆராயும் இடத்து பிறப்பு இறப்பு உண்டு. அதாவது சூட்சும சரீரத்திற்கு போக்கு வரத்து, உண்டு என்பது பொய்யுணர்வாராய்ச்சியில் உளதாம். போக்கு வரத்து இல்லை என்பது மெய்யுணர்வாராய்ச்சியில் உளதாம். தேகாதிப் பிரபஞ்சம் சத்தியம் எனவும் சூட்சும சரீரம் மற்றொரு சரீரத்தை அடையும் என்று நிச்சயிப்பதும் பொய் யுணர்வாம். பிரம்ம சொரூபமாகிய தனக்கு முக்காலத்தும்

பிறப்பு இறப்பு இல்லை என்று நிச்சயிப்பது மெய்யுணர்வாம். இவ்விரண்டில் நாம் மெய்யுணர்வை கொண்டு அல்லவா ஆராயவேண்டும்? இதைக் கைவல்யம் 164-வது செய்யுளில் ''பிறந்தது உண்டானால் அன்றோ பிறகு சாகுவது தான் உண்டாம், பிறந்ததே இல்லை என்னும் பிரம்மம் ஆவதுவும் நானே'' என்று கூறியிருப்பதால் பிறப்பும் இறப்பும் இல்லை என்பதாயிற்று. ஆகுமானால் சூட்சும சரீரத்திற்கு போக்கு வரத்து ஏது? தூல தேகம் பிறந்தது அது சடமாகையால் நாம் ஆகுமா? ஆகாத ஜட உடல் அழிந்து போகும். நாம் அழியாத பொருளல்லவா?

இதைப்பற்றி அனுபவானந்த தீபிகை என்ற நூலின் ''மண், நீர் என்ற செய்யுளின் 2-வது அடியில் உள்நாடில் இறப்பும் பிறப்பும் இல்லை'' என்று கூறியிருப்பதால் மெய் யுணர்வைக் கொண்டு பார்க்கும்போது இல்லை என்பதாயிற்று. இனி தமிழ்மறையாகிய திருக்குறளில் வரையறுத்துக் கூறிவிட்டார். பொய்யாமொழியாரும் தமது திருக்குறளின் மெய்யுணர்வதிகாரத்தில்,

> **''பிறப்பென்னும் பேதைமை நீங்க சிறப்பென்னும்**
> **செம்பொருள் காண்பது அறிவு''**

**இதன் பொருள்:** நாம் பிறந்திருக்கின்றோம் என்று தோன்றுவது பேதைமையினாலாம். அதாவது அஞ்ஞானத் தினாலாம் என்று கூறியிருக்கின்றார் வள்ளுவப் பெருந்தகை. இது பொய்யுணர்வைக் குறிக்கும். இனி மெய்யுணர்வு யாது எனின் அந்த அஞ்ஞானம் நீங்குவதற்கு அதாவது பேதைமை நீங்குவதற்கு சிறப்புப் பொருந்திய செம்பொருளாகிய பேரறிவை தன் யதார்த்த சொரூபமாக தக்கார்பால் விசாரித்து அறிவது மெய்யுணர்வாம். திருவள்ளுவர் அறிவைத் தாண்டி போகவில்லை. அறிவிலேயே நின்றுவிட்டார். உதாரணமாக மேலும் தமது குறளில் ''யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு'' பார்த்தீர்களா? அறிவிலே நின்றுவிட்டார். அறிவுக்கு மேல் போக யாராலும்

முடியாது. இந்திரன் முதலிய தேவர்களாலும் அல்லது தோன்றி மறையும் கடவுளர்களாலும் அல்லது அவர்கள் தம் மனைவியர்களாலும் முடியாது என்பது திண்ணம். இனி ஆத்மாவுக்குப் பிறப்பில்லை ஜீவனுக்குப் பிறப்புண்டு எனின் நன்று நவின்றாய்! அதையும் விசாரிப்போம். ஆத்மா எனினும், பிரம்மம் எனினும், அறிவு எனினும் ஒக்கும். அதாவது ஒரு பொருளையே குறிக்கும். இனி பிரம்மத்தின் கண் ஜீவனா, ஜீவன் கண் பிரம்மமா? என வினாவுவோம்.

இதற்கு விடை பிரம்மத்தின் கண் ஜீவன் எனின் பிரம்மத்தின் கண் ஜீவன் இருப்பது பேதமாகவா அல்லது அபேதமாகவா? இதற்கு விடை அபேதமாக எனின் அபேதத்தில் இரண்டு பொருள் இருக்க முடியாது. முற்றும் பிரம்மமேயாகி ஜீவத்துவம் பழுதையில் பாம்புபோல் கற்பிதமாகும். இனி பிரம்மத்தின் கண் ஜீவன் பேதமாக இருக்கிறது எனின் பேதப்பொருள் இரண்டும், கண்டப் பொருளாதலின் பிரம்மம் பரிபூரணம் என்னும் வேதவாக்கியத்துக்கு விரோதமாம். அன்றியும் எது கண்டப்பொருளோ அது நாமரூபம் உடையதாகி அழியும் பொருளாகும். இந்த தோஷம் வராமல் இருக்க எப்படி கூறவேண்டும் எனின் பிரம்மத்தின் கண் ஜீவத்துவமும், பந்தமும், ஜனன மரண துக்கமும் அனிர்வசநீயமாக தோன்று கின்றது எனக் கொள்ளுவதே சாலச்சிறந்ததாம். அனிர்வசநீயம் என்பது தனக்கென சொரூபம் ஒன்றின்றி உற்பத்தி நாசமும் இன்றி அநாதியாக, அதாவது கற்பித அநாதியாக எப்பொழுதும் தோன்றிக்கொண்டிருக்கிறது எனக் கொள்க. வேதத்தில் சிருட்டியைப் பற்றி கூறியிருப்பது ஒருவகையல்ல - மூன்று விதமாகும். மந்தபுத்தி உடையவர்களைக் குறித்து அவ்வாறு கூறப்பட்டிருக்கிறது. மந்தபுத்தி உடையவனுக்கு கிரம சிருட்டியும், அதாவது முன் காரணத்தோடு கூடிய சிருட்டி சொல்லப்பட்டது. கொஞ்சம் கூர்மையான புத்தி உடையவனுக்கு உகபத் சிருட்டி கூறப்பட்டது. அதாவது சமுத்திரத்தில் அலை, நுரை, குமிழிகள் ஏககாலத்தில் தோன்றுவது போல தேகாதிப் பிரபஞ்சமாகிய எல்லாப் பொருள்களும் ஏககாலத்தில்

தோன்றும். இதற்கு முன் காரணம் தேவையில்லை. இனி கிரகிக்கும் சக்தி உடைய உத்தம அதிகாரிக்கு அஜாத வாதம் கூறப்பட்டது. அதாவது எல்லாம் பிரம்ம சொரூபமே என்று கூறுவது அஜாதவாதமாம். இதில் நான் எடுத்துக் காட்டியுள்ளது இந்தக் கடிதத்தில் உகபத் சிருட்டியை அனுசரித்ததாகும்.

அப்படியானால் மறுபிறப்பு ஒப்புக்கொள்ளாவிடில் புண்ணிய பாவத்திற்கு பயப்படாமல் ஒருவன் மற்றொருவனுக்கு இன்னல் செய்ய முற்படுவானே எனின் அப்படி செய்பவன் உண்மை அறியாதவன் என்பதற்கு ஐயமில்லை. ஏன் என்றால் அனுபவானந்த தீபிகை செய்யுளில் ''தனையலது அயல் அணுவும் உளதெனும் அளவும் தான் மாளாது'' என்று கூறியிருப்பதால் தன்னைவிட வேறு ஓர் அணுவும் கூட இல்லை என்பதாயிற்று. ஆகுமானால் பிறருக்கு தீங்கு செய்தால் அது தனக்குக் தானே தீங்கு செய்ததாகும். இதை சீர்காழி சிவஞானவள்ளலார் எழுதிய வள்ளலார் சாஸ்திரத்தில் ''கற்புடைய மகளிர்'' என்ற செய்யுளின் மூன்றாவது அடியில் ''தற்கொலி மாந்தர் எல்லாம் தாருவே தெய்வம் என்பர்'' இதில் தாரு என்பது மரத்தைக் குறிக்கும். அதாவது வேப்பமரம், ஒதியமரம் முதலிய மரத்தடியில் ஆடு வெட்டி சாமி கும்பிடக் கூடியவர்கள் தற்கொலை செய்தவர்களாவார்கள். ஏன் எனில் எப்பொருளும் எவ்வுயிரும் தன் சொரூபமாக பார்க்குமிடத்தில் தன்னைத் தானே கொலை செய்துகொண்டதற்கு ஒப்பாகும் அல்லவா? ஆகையால் இந்த உண்மை ஞானத்தை உணர்ந் தவர்கள் அஹிம்சை, சத்தியம், கருணை, அன்பு முதலிய பரிசுத்த குணம் உடையவராவார். மேலும் பாரதியார் பாடல் 340-வது பக்கத்தில் ''அத்வைத நிலை கண்டால் மரண முண்டோ?'' என்று கேள்விக்குறியாக கேட்டிருப்பதைப் பாருங்கள். நான் இந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருப்பது முழுதும் அத்வைத நிலைதான் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். மேற்படி நூல் 341-வது பக்கத்தில் ''மேதினியில் மரணமில்லை'' என்று கூறியிருப்பதால் பூமியில் ஒருவர்க்கும் மரணமில்லை என்பதாயிற்று.

மேற்படி நூல் 344-வது பக்கம் "அனைத்துயிருங் கடவுள் சொரூபம் என்று பேசுவது உண்மையானால், பெண்டிர் என்றும், நித்தமும் உமது அருகிலே குழந்தை என்றும் நிற்பனவுந் தெய்வமன்றோ நிகழ்த்துவீரே" என்றும் அடுத்த பாட்டில் "உயிர்கள் எல்லாம் தெய்வமன்றி பிற ஒன்றும் இல்லை" என்று கூறியிருப்பதால் பேரறிவு தெய்வமே ஒழிய வேறு தெய்வம் இல்லை என்பது தேற்றமாம். அதாவது உறுதியாம். எனவே வேதாகம இதிகாச புராணாதிகளின் அடிப்படை தத்துவமான பிரபல சுருதி வாக்கியமான 25 மேற்கோள் நூல்கள் இந்த கடிதத்தில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இது சரியில்லை என்று ஒருவன் சொல்வானாயின் அது அவனுடைய சொந்த அபிப்பிராயமே ஒழிய ஆன்றோர்கள் அபிப்பிராயமும், வேத சம்மதமும் அன்று என தள்ளிவிட வேண்டும். இந்தக் கடிதத்தால் அறியத்தக்கது யாதெனில் பரம்பொருள் ஒன்றே வாஸ்தவமென்றும், அதுவே நமது யதார்த்த சொரூபம் என்றும், மற்றுமுள்ள எல்லாப் பொருளும் நமது யதார்த்த சொரூபத்தின் கண் கற்பித தோற்றமேயாம் என ஐயந்திரிபு அற உணர்ந்து பிறருடைய உபகார நிமித்தமாக பற்றின்றி சகல கர்மமும் செய்துகொண்டு ஜனக இராசனைப் போலும், திருவள்ளுவரைப் போன்றும் ஜீவன் முக்தனாக சுகமாக வாழ்வாயாக!

திரு. S. முருகேசன் அவர்களுக்கு எழுதிய தபால்
இத்துடன் முற்றுப்பெற்றது.



1. பரோக்ஷ ஞானப் பான்மையை விடுத்து
அபரோக்ஷ ஞானம் அடைந்து அனுபவித்திடு.
2. இப்பியில் வெள்ளி இலங்குதல் போல
இப்புவி தன் முன் இருப்பதை காண்பாய்.

- ஸ்ரீ குரு கிணகர் சுவாமிகள்

பிரமமே ஸத்யம்
அதுவே நித்யம்

# கடிதம் 19 (1)

*6-3-1979*

*ஆனந்தாஸ்ரமம்,*
*நாங்கூர்.*

பேரன்பின் மிக்க திரு. M. கணபதி அவர்களுக்கு எனது ஆசி உரித்தாகுக.

நிற்க, நீங்கள் 1-2-79-ல் எழுதிய தபால் கிடைக்கப் பார்த்தேன். உங்கள் கடிதத்தில் நான் முருக பக்தன் என்று குறிப்பிட்டு இருந்தீர்கள், நானும் ஒரு முருகபக்தன்தான். ஆனால் முருகப்பெருமானைப் பற்றிய சில உண்மைகளை எழுதுகிறேன். இராமலிங்க சுவாமிகள் திரு அருட்பாவின் ஜீவ சாட்சி மாலை என்ற பாட்டின் ஈற்றடியில் ''தணிகைமணியே ஜீவ சாட்சியாய் நிறைந்தருளும் சகஜவாழ்வே'' என்று கூறியிருப்பதால் முருகன் எங்கும் நிறைந்த பொருளாய் நமது ஜீவனுக்கு சாட்சியாயும் இருக்கிறது. சகஜம் என்பதனால் எப்பொழுதும் நம்முடன் கணநேரம்கூட இடைவெளி யில்லாமல் இருப்பதாகவும் பொருள் படுகின்றது. இப்படி முருகப்பெருமான் ஜீவ சாட்சியான ஆத்ம சொரூபமாக இருக்கின்றது. இதுபோல் எல்லா தெய்வங்களும் நமது ஆத்ம சொரூபமாக இருக்கின்றது. அந்த ஆத்ம சொரூபம் ஜாக்கிர, சொப்பனங்களில் செயலாற்றி சுழுத்தியில் எந்த செயலும் இல்லாமல் சுக சொரூபமாக இருக்கிறது. அந்த ஆத்ம சொரூபமாகிய முருகன் ஜனனம் மரணம் அற்ற நித்யானந்த சொரூபம். அந்த ஆத்மாவே நாம் என்று தக்கார்பால் விசாரித்து அறிந்தால் ஜனன மரண துக்கத்தில் நின்று கரையேறலாம். நீங்கள் செய்த புண்ணியத்தால் எனது முதல் சிஷ்யனாகிய V.R. ஆறுமுகம் அவர்களுடன் பழகும்படியான வாய்ப்பு உங்களுக்கு ஏற்பட்டதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். அவருக்கும் உங்களுக்கும் எனது ஆசி உரித்தாகுக.



# கடிதம்: 20 (2)

2-7-1980

நிற்க, நான் உங்களுக்கு எழுதும் தபாலில் பல அறிய விஷயமாக எழுதுவது பழக்கம். ஏன் என்றால் உண்மையான தெய்வீகத்தின் நிலை உங்களுக்கு புரிந்துகொண்டு மனிதப் பிறப்பின் பெரும் பயன் பெறுதல் வேண்டும் என்பதே எனது குறிக்கோள். உலகில் தெய்வீகத்தின் பெயரால் காண்பதும் கேட்பதும் எல்லாம் போலிகொள்கைகள் என்பதற்கு ஐயம் இல்லை. வேதோ உபநிஷத்து காலம் முதற்கொண்டு இக்கால பரியந்தம் தோன்றி விளங்கிய அறிஞர்கள் மகாத்மாக்கள் கண்டு நமக்கு எடுத்து உரைத்த உண்மை என்னவென்றால் மனிதனிடத்தில் உள்ள தெய்வீகத்தை அறிந்து உய்யுங்கள் என்பதாகும். உதாரணமாக மகாத்மா காந்திஜீ எழுதிய இந்து தர்மம் என்ற புத்தகத்தின் 38-வது பக்கத்தில் கீழ்வருமாறு எழுதப்பட்டிருப்பதைப் பாருங்கள்.

''கடவுள் காசியிலும் இல்லை, ராமேஸ்வரத்திலும் இல்லை. ஒவ்வொரு மனிதரிடமும் மனோசாட்சி சொரூபமாய் குடி கொண்டிருக்கிறார். உலகில் இயங்கும் உயிர் அனைத்தும் ஈஸ்வரன் கோவிலென்று கூறியிருப்பதால் அறியலாம்'' மேலும் வார்தாவில் உள்ள காந்தி ஆஸ்ரமத்தில் காந்திஜீ உட்பட 25 புரோபஸர்கள் சேர்ந்து பிரார்த்தனை சொல்வார்கள். அதன் வாசகத்தை கீழே பாருங்கள். காந்திஜீ எழுதிய பஜனாவளி என்ற புத்தகத்தில் இருந்து எடுத்தது.

''நான் காலையில் உள்ளத்தில் உணரப்படும் ஆத்ம தத்துவத்தை நினைக்கிறேன். எந்த ஆத்மா சச்சிதானந்தமாய் (உண்மையாயும், ஞானமாயும், இன்பமாயும்) உளதோ, எது பரமஹம்ச யோகியர் இறுதியில் சேருமிடமோ, எது துரியம் எனும் நான்காம் நிலையோ, எது விழிப்பு, சொர்ப்பனம், உறக்கம் என்ற மூன்று நிலைகளையும் எப்பொழுதும் அறியும் சுத்தப் பிரம்மமோ, அதுவே நான். மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்கள் சேர்ந்தமைந்த இவ்வுடல் நானல்ல.

இதன் பொருள் வெளிப்படையாயினும் ''துரியம் என்ற சொல் நான்காவது எனப் பொருள்படும். அதாவது நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்று அவஸ்தையையும் விளக்கிக் கொண்டும் தூல, சூட்சும, காரணம் என்னும் மூன்று சரீரத்தையும் விளக்கிக்கொண்டும் அந்த அவஸ்தைகளில் பற்று அற்று மனோசாட்சி சொரூபமாய் விளங்கும் ஆத்மா எதுவோ, அதுவே துரியம் என்னும் நான்காவது பொருளாகும் எனக்கொள்க'' இதனால் மகாத்மா காந்திஜீ கண்ட உண்மையான பிரம்மஞானமும், நாம் கூறும் பிரம்ம ஞானமும் ஒன்றேயாம் என்பது புலனாகிறது அல்லவா?

இனி கடவுளை எங்கே தேடுவது? எங்கே தேட வேண்டும்? என்பதற்கு திரு அருட்பிரகாச வள்ளலார், இராமலிங்க சுவாமிகள் எழுதிய திருவருட்பா ஆறாம் திருமுறை பக்கம் 83, பாரா 103-ல் கீழ்வருமாறு கடவுள் நிச்சயம் சொல்லப் பட்டிருக்கிறது, அதையும் பாருங்கள்.

''ஆத்ம சொரூபமாக வியாபித்திருக்கும் கடவுள் மனித தேகத்தில் காரியப்படுவது உத்தமமாய் இருக்க, சிலா, விக்கிரக, பூத, தாரு முதலியவைகளில் கடவுளை வெளிப் படுத்தி கொள்வது மந்த நியாயம். அதில் கடவுள் தோன்றி அனுக்கிரகிப்பதாக சொல்வது இந்திரஜாலம்'' இதனால் இராமலிங்க சுவாமிகள் மனிதனது நிஜசொரூபமே கடவுளாம். அதை வெளியில் தேடுவது இந்திரஜாலப் பொருள்களுக்கு சமானமாம் என்பது தெற்றெனப் புலப்படுகின்றது அல்லவா? இதன் பொருள் வெளிப்படையாயினும் இதில் சிலா, விக்கிரகம் என்பது பித்தளை, செம்பு, முதலியவைகளால் செய்யப்பட்ட விக்கிரகத்தையும், பூதம் என்பது கருங்கல்லால் செய்யப்பட்ட விக்கிரகத்தையும் தாரு என்பது மரத்தால் செய்யப்பட்ட விக்கிரகத்தையும் குறிக்கும். இவைகளில் கடவுள் தோன்றி அனுக்கிரகிப்பார் என்பது இந்திரஜாலப் பொருளுக்கு சமானமாகும் என்பது இராமலிங்க சுவாமிகள் கண்டக் கடவுள். மனிதனது நிஜ சொரூபமே கடவுளாம் என்பதும், அதை வெளியில் தேடுவது இந்திரஜாலம் போன்றதாம் என்று புலப்படுகின்றது அல்லவா?

இனி நமது தாயுமான சுவாமிகளின் பாடலில் வரும் கடவுள் நிச்சயத்தையும் பாருங்கள். ஆனந்தக் களிப்பு என்ற தலைப்பில் ''வேண்டாம் விருப்பும் வெறுப்பும். அந்த வில்லங்கத்தாலே, வினையும் ஜனனம், ஆண்டான் உரைத்த படியே இருந்து கொள் அறிவாகிய நெஞ்சே'' இதன் பொருள் வெளிப்படையாயினும் ஆண்டான் உரைத்தபடியே என்பது அவருடைய குருநாதனாகிய மவுனகுரு சுவாமிகள் சொன்னதாம் அறிவாய் இருந்து கொள் மனமே என்றும் இனி நீ யார் என்ற கேள்விக்கு மீண்டும் தாயுமான சுவாமிகள் சொல்கிறார் அதே தலைப்பில் ''பாராதி பூதம் நீயல்ல, உன்னிப்பார் இந்திரிய கரணங்கள் நீயல்ல, ஆறாய் உணர்வு நீ என்றான் ஐயன், அன்பாய் உரைத்த சொல் ஆனந்தம் தோழி'' இதன் பொருள் ''பூமி முதற்கொண்டு ஐந்து பூதமும் நீயல்ல. கண், மூக்கு முதலிய ஐந்து இந்திரியங்களும் மனம் புத்தி முதலிய நாலு கரணங்களும் நீயல்ல. இவைகள் எல்லாவற்றையும் ஆராய்ந்து அறிகின்ற அறிவே நீ என்றான் குருநாதன்'' இப்படி சொன்னத் திருவாக்கு ஆனந்தமாய் இருந்ததென்று கூறினார் தாயுமான சுவாமிகள். மேலும் நிகழ்காலத்தில் நாம் அறிவு சொரூபமாய் இருந்தும் நாம் அறிவு சொரூபன் அல்ல; பின்னே நான் யார் எனில் சரீரமாகிய ஜட சொரூபன் என்று நினைப்பதே அஞ்ஞானமாம். இதை கைவல்யம் எவ்வாறு கூறியிருக் கின்றது என்பதைப் பாருங்கள்.

''பிரமமாம் தனை மறந்த பேதைமையே அஞ்ஞானமாம் பர நிலை காணோம் என்று பகர்வது ஆவரணமூடல்'' என்று கூறியிருப்பதால் பிரம்மமாகியத் தன்னை மறந்ததே அஞ்ஞானமாம். கடவுள் சொரூபத்தை காணோம் என்று நினைப்பது கணமான அறியாமையின் மறைப்பாம். இந்த அறியாமை தோன்றுவதும் விலகுவதும் எப்படி என்பதற்கு கீதையில் கண்ணபிரான் கூறியிருப்பதைப் பாருங்கள்.

ஒரு மங்கையின் கழுத்தில் கிடக்கும் ஆபரணம் காணவில்லை என்ற பிராந்தி ஏற்பட்டு பல இடங்களிலும் தேடினாள். பிறகு ஒருவன் உன் கழுத்தைத் தடவிப்பார் என்றான், அவளும் தடவிப் பார்த்தபின் அகப்பட்டது என்றாள்.

இவ்வாறு பகவத்கீதா சாரத்தில் கூறியிருப்பதை கவனித்துப் பாருங்கள். இதே உவமானம் ஆதிசங்கரருடைய ஆத்ம போதத்திலும் காணலாம். முன்கூறிய பெண்மணியின் கழுத்தில் ஆபரணம் இருந்தும் அதைக் காணவில்லை என்ற விவகாரம் ஏற்பட்டு பின்னால் கிடைத்ததாக அறிந்தது போல் ஒருவன் முக்காலத்திலும் பிரம்ம சொரூபமாக இருந்தும் அதை மறந்து தேடுவது அறியாமை அன்றி யாதாம்? இது எதுபோல் எனில், குடம் மண்ணைத் தேடுவது போலும், ஆபரணங்கள் தங்கத்தைத் தேடுவதுபோலும், ஆடைகள் பஞ்சைத் தேடுவது போலும், ஆயுதங்கள் இரும்பைத் தேடுவது போலுமாம், இது காரிய காரண முறைப்படி தேடுவது பொருந்தாது. ஆயினும் தனக்குள்ளேயே தேடிக்கொள்வது நலம். காரணத்தை அன்றி காரியமான குடம் இல்லாதது போல், காரணமான பிரம்மத்தை அன்றி ஜகஜீவ பர தோற்றங்கள் முக்காலத்திலும் இல்லை. அப்போது காரியமான நமது சரீராதிகளும் ஜீவனும் பிரம்மத்தை அன்றி எப்படி இருக்க முடியும்? மேற்கூறிய உபமானங்களுக்கு முதற்காரணம் தங்கமும், மண்ணும், பஞ்சும், இரும்பும் இவைகளை அன்றி காரியமான, ஆபரணங்களும், குடமும், ஆடையும், ஆயுதங்களும் எப்படி இருக்கமுடியும், இதைச் சிந்தித்துப் பாருங்கள்.

இவ்வாறாக துருவித் துருவி ஆராய்ந்து பார்க்கும்போது இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கையே நமது எதார்த்த சொரூபம் கடவுளாம் என்பது புலனாகிறது. நான் உங்களில் ஒருவரை முன்னிலையாக வைத்து தபால் எழுதுவது பழக்கம். அதை நீங்கள் எல்லோருக்கும் சேர்த்து எழுதியதாக கருதி படித்து பெரும் பயன்பெற வேண்டும். முடியுமானால் இதுவரையும் நான் எழுதிய எல்லா தபால்களிலும் உள்ள க்ஷேமலாபங்களைக் குறிக்கும் வாசகங்களை தள்ளிவிட்டு ஆராய்ச்சி விஷயமாக உள்ள பாராக்களை எல்லாம் பெயர்த்து எழுதி ஒரு சிறு புத்தகமாக அச்சுப் போடலாம். ஏன் என்றால் நான் குறிப்பிட்டுள்ள மேற்கோள் செய்யுள்கள், உவமானங்கள் இவை சாமான்யமான ஒருவரால் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. ஆகையால் உங்கள் எல்லோருக்கும் எனது ஆசியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

# கடிதம் : 21 [3]

2- 2 - 1981

நிற்க, நீங்கள் 17-12-80-ல் எழுதிய கடிதம் கிடைக்கப் பார்த்தேன். உங்கள் கடிதத்தில் ஒரு கேள்வி கேட்கப்பட்டிருக் கிறதைப் பார்த்தேன். அந்தக் கேள்வி என்னவென்றால் ''நமசிவாயா'' என்பதின் பொருள் என்ன? என்பதாகும். அதன் உண்மைப் பொருளை கீழே காண்பிக்கின்றேன். ''நமசிவாயா'' என்பதின் உண்மைப் பொருளை சீர்காழியில் தோன்றிய திருஞானசம்பந்த சுவாமிகளின் முதல் மாணவராகிய சிவஞான வள்ளலார் எழுதிய வள்ளலார் சாஸ்திரம் 23-வது பக்கம் 4-வது செய்யுளின் கருத்துப்படி எழுதுகிறேன். ஏன் என்றால் செய்யுள் எழுதினால் பக்கம் அதிகமாகப் போய் விடும். அதனால் கருத்து மட்டும் எழுதுகிறேன்.

முதல்; ந; என்பது மாயா சக்தியைக் குறிக்கும். ம, என்பது மறைப்பைக் குறிக்கும். அதாவது நாம் கடவுள் சொரூபமாய் இருந்தும் அதை தெரியவொட்டாமல் நான் மெய்ப்பொருள் சொரூபத்தை அறியேன் என்ற மறைப்பை அதாவது ஆவரண சக்தியை குறிக்கும். சி, என்பது சிவனைக் குறிக்கும். சிவம் என்றால் மங்களம் என்பது பொருளேயொழிய பெயர், உருவத்தைக் குறிக்காது. இடைக்காலத்தில் சொருகலாக வந்தது பெயர் உருவம் ஆகும். அந்த பெயர் உருவம் இவைகளை கண்டும் கேட்டும் மக்கள் மயங்கிவிட்டார்கள். அதுமட்டும் அல்ல, பண்டிதர்களும் பெரும் புலவர்களும் மயங்கி விட்டார்கள். இனி 'வா' என்பது ஆத்மாவின் அருளைக் குறிக்கும். 'யா' என்பது ஆத்மாவைக் குறிக்கும். இதுவே வள்ளலார் கருத்தாகும்.

இனி ஓங்காரத்தின் பொருளைப் பார்ப்போம். ஓம் என்ற எழுத்தில் அ, உ, ம் என்ற மூன்று எழுத்தும் அரை மாத்திரை அல்லது அ மாத்திரை என்று சொல்லுகின்ற நாலாவதானப் பொருளும்; இதில் மாத்திரை என்பது வரிவடிவமானமையால் எழுதக்கூடிய எழுத்தாகும். அரை மாத்திரை என்பது ஒலி வடிவமாகும். இதில் மதவாதிகளின் அல்லது மந்திரவாதிகளின் கருத்தை முதலில் காண்பிக்கிறேன். அ, என்பது சிருட்டி கர்த்தாவாகிய பிரம்ம தேவனை குறிக்கும். உ, என்பது

விஷ்ணுவைக் குறிக்கும். ம், என்பது ருத்திரனைக் குறிக்கும். மேலும் அ, என்பது பூமியையும், உ, என்பது ஜலத்தையும், ம், என்பது அக்கினியையும் குறிக்கும். மேலும் அ, என்பது சூரியனையும், உ, என்பது சந்திரனையும், ம், என்பது நட்சத்திரங்களையும் குறிக்கும். இன்னும் அ, என்பது இடது மூக்கில் ஓடுகின்ற சுவாசமாகிய இடகலையையும், உ, என்பது வலது மூக்கில் ஓடுகின்ற சுவாசமாகிய பிங்கலையையும், ம், என்பது புருவமத்தியஸ்தானமாகிய சுழிமுனையையும் குறிக்கும். இவ்வாறாக மதவாதிகளும், மந்திரவாதிகளும், வைதீகர்களும், தங்கள் தங்கள் பழக்கப்படி மந்திரங்கள் சொல்லுவதற்கு முன் உயிர் உள்ள எழுத்து ஓங்காரமாகையால் அதை முதல் சொல்லி பின் மந்திரமோ, அல்லது அர்ச்சனையோ செய்வார்கள் என்பது உலகப் பிரசித்தம். மேலும் ஓம் என்ற ஒரு எழுத்து நமது புருவமத்தியத்தில் இருப்பதாகவும், அதற்குள் கடவுள் இருப்பதாகவும் கருதி தியானம் பண்ண வேண்டும் என்றும் பலர் சொல்கிறார்கள். அதை நம்பி மக்கள் இன்னும் பல கஷ்ட நஷ்டங்களை அடைகிறார்கள். மேற்கூறியவை அனைத்தும் இடைக்காலத்தில் ஏற்படுத்தப் பட்ட கற்பனா கொள்கையேயொழிய உண்மை அல்ல.

ஓங்காரத்தின் உண்மையான பொருளை கீழே காண்பிக் கிறேன். வேதோ உபநிஷத்துக்களில் மாண்டூக்ய உபநிஷத்து என்று ஒன்று இருக்கிறது. அதற்கு பல பேர்கள் உரைநடை நூல்கள் எழுதியிருக்கிறார்கள். அதில் ஆதிசங்கராச்சாரிய சுவாமிகளின் குரு கோவிந்த பாதர், அவருடைய குரு கவுடபாதர். இந்த கவுடபாதாச்சாரிய சுவாமிகள் எழுதிய மாண்டூக்ய உபநிஷத்தின் உரைக்கு கௌட பாதகாரிகை என்று பெயர். அதில் ஓங்காரத்தின் உண்மையானப் பொருளை கீழே எடுத்துக்காட்டுகின்றேன். ஓம் என்பது (3½ மூன்று + அரை) மாத்திரை உடையது. இதில் வரிவடிவமாகவும், ஒலிவடிவ மாகவும் சொல்லப்படுகிறது. இதில் வரிவடிவம் மையால் எழுதப்படுவது ஒலிவடிவம் என்பது வாயால் உச்சரிக்கும் ஓசையைக் குறிக்கும். இதில் அ, உ, ம் என்று மூன்றும் சேர்ந்தது ஓம் எனப்படும். இவற்றில் அ, என்பது தூல சரீரத்தையும், உ, என்பது சூட்சும சரீரத்தையும், ம், என்பது

காரண சரீரத்தையும் குறிக்கும். அரை மாத்திரை என்பது நாலாவதான ஆத்மாவைக் குறிக்கும். எனவே மூன்று சரீரத்தையும் நனவாதி மூன்று அவஸ்தையையும், விளக்கிக் கொண்டிருக்கும் ஆத்ம சொரூபமே நாலாவது பொருளாகிய அரைமாத்திரை அல்லது அமாத்திரை என்று சொல்லப்படும். மாத்திரை என்பது வரிவடிவமான எழுத்தைக் குறிக்கும். அமாத்திரை என்றால் ஒலி வடிவத்தைக் குறிக்கும். ஆகையால் ஒலி வடிவத்தால் அறிவிக்கக்கூடிய பிரம்ம சொரூபம் அல்லது கடவுள்சொரூபம் நமது யதார்த்த சொரூபமாகும். இதுவே ஓங்காரத்தின் உண்மைப் பொருளாகும் என்று கௌடபாத காரிகையில் கூறியிருப்பதே போதுமான சான்றாகும். ஓங்காரத்திற்கு பிரணவம் என்று ஒரு பெயர் உண்டு. பிரணவம் என்றால் பிராணனை இயக்கிவைக்கும் பொருள் என்பதாகும். இனி இந்த மாண்டூக்ய உபநிஷத்துக்கு நா.சு. இராஜாராமையர் அவர்கள் தமிழ்ப்படுத்திய மொழிபெயர்ப்பின் கடைசி பாராவில் ''இந்த ஓங்காரத்தின் நான்காவது மாத்திரையாகிய ஆத்மா மாத்திரை அதாவது எழுத்தில்லாதவன் அளவுக்கு எட்டாதவன், விவரிக்கப்பட தகாதவன், பிரபஞ்சம் ஒழிவிடம், மங்களகரன் ஒன்று பட்டவன் இப்பேர்ப்பட்ட ஓங்கார சொரூபமாகிய ஆத்மாவே தன் நிஜ சொரூபமாக எவன் அறிகின்றானோ, அவன் ஆத்மாவினிடத்திலேயே ஆத்மாவாக நித்யானந்தமாய் வாழ்வான் என்று கூறியிருப்பதால் ''நமசிவாயா'' என்பதின் பொருளும் ஓம் என்பதன் பொருளும் தமது யதார்த்த சொரூபமான ஆத்மாவையே குறிக்கும். இந்த உண்மைகளை அறிய வழியின்றி தக்கார்பால் கேட்காமல் குருவை அடையாமல் பலவிதமாகப் பேசியும் செயலில் காட்டியும் வருகிறார்கள் என்பது உலகம் அறிந்த ஒன்றாகும்.

**முடிவுரை:** ஓங்காரத்தில் மூன்றெழுத்தும் எழுத்தில்லாத நான்காவதான ஒரு நித்தியப் பொருளும் இருக்கின்றது. அதில் அ, ஸ்தூல தேகத்தையும், உ, சூட்சும தேகத்தையும், ம், காரண தேகத்தையும் குறிக்கும். நான்காவது அரை மாத்திரை அல்லது அ, மாத்திரை என்பது ஆத்மாவைக் குறிக்கும், சிவம் என்றால் மங்களத்தைக் குறிக்கும். விஷ்ணுவென்றால் சுயம்பிரகாசப் பொருளைக் குறிக்கும். பிரம்மதேவன் என்றால் நித்ய பொருளைக்

குறிக்கும். முருகன் அதாவது முருகு என்றால் அழகைக் குறிக்கும், பிள்ளையார் என்றால் ஆத்ம ஞானிகளைக் குறிக்கும். பிள்ளையார் என்பது ஞானிகளைக் குறிக்கும் என்பதற்கு மேற்கோள் நாங்கூர் ஸ்தல புராணமாகிய பராசவன புராணத்தின் 20-வது பக்கத்தில் காணலாம். எல்லா தெய்வங்களுக்கும் 'ன்' கொடுத்து உயர்திணை ஆண்பால் பொருளாக்கி ஒரு மனிதனைப்போல் அதாவது முருகன், சிவன் என்று பெயர் உருவத்தைக் கொடுத்து வணங்கி மகிழ்வது மக்களின் பண்பாட்டில் ஒன்று போலும்.

அங்ஙனமாயின் பண்பாடு இருந்தால் பண்பு இருக்க வேண்டும் குணத்தைச் சொன்னால் குணி இருக்க வேண்டும். தர்மத்தைச் சொன்னால், தர்மியைச் சொல்ல வேண்டும். தேகத்தைச் சொன்னால், தேகியைச் சொல்ல வேண்டுமே. பயநிலையைச் சொன்னால், எழுவாயைச் சொல்ல வேண்டுமே. இவ்வாறான சிந்தனை ஒருவரிடத்திலும் காணோம். எனவே இதில் நீங்கள் எல்லோரும் மயக்கத்தை அடையாமல் வசிட்ட மாமுனிவர் இராமனுக்குச் சொன்ன இடத்தில் ''பகவானாகும் இவ் ஆத்மா'' என்று கூறியிருப்பதால், ஆத்மாவே சகல மந்திரங்களுக்கும் உண்மைப் பொருளாகும். அதற்கு வேறாக நித்யப்பொருள் ஒன்றுமே இல்லை என்று ஐயம் திரிபு அற உணர்ந்து, ஜீவன் முக்தனாக தங்கள் வாழ்க்கையை நடத்துங்கள்.

*மற்றபடி எல்லோருக்கும் எனது ஆசி உரித்தாகுக!*

ஸ்ரீ

## கடிதம் 22 (4)

*4-3-1981*

*பேரன்பின் மிக்க திரு. M. கணபதி அவர்களே கேட்பாயாக!*

ஒரு பச்சிலையில் தோன்றும் புழு, குளவியை தியானித்து குளவி வடிவம் ஆதல் கூடும் என்று பலபேர் கூறுகிறார்கள். அது பொருந்துமா எனச் சிந்தித்துப் பாருங்கள். புழு குளவியின் உருவத்தை தியானம் செய்து குளவியின் வடிவாய் விடுவது போல், மனிதனும் பிரமத்தை தியானித்து பிரமமாகலாம் என்பது பல நூல்களிலும் காணப்படுகின்றது. அதைப்பற்றி

சிறிது ஆராய்ந்து பார்ப்போம். தியானிப்பவனும் தியானிக்கப் படும் பொருளும் ஒன்றாதல் கூடாது. இதை கைவல்யம் வடிவேல் செட்டியார் அவர்கள் உரையில் ''தன்னைப் பற்றுதல் என்னும் கிரியைக்கு கர்த்தாவும், கர்மமும் தானே யாதல் ஆத்மாஸ்ரேய தோஷமாம்'' என்று கூறியிருப்பதால் தியானிப்பவனாகிய ஜீவனும் தியானிக்கப்படுபொருளாகிய பிரமமும் ஒன்றாதல் எவ்வாறு பொருந்தும்? இதில் கர்த்தா என்பது ஜீவனையும், கர்மம் என்பது பிரமத்தையும் குறிக்கும். இனி புழுவைப் பற்றிப் பார்ப்போம். ஒரு குளவியானது பசுமையான களிமண் எடுத்துவந்து நமது வீட்டின் சுவர்களில் கூடு கட்டுவதை நாம் பார்த்திருக்கிறோம் அல்லவா? அந்தக் கூட்டுக்குள் பச்சிலைப் புழுவை கொண்டுவந்து உள்ளே அடுக்கிவைத்தபின் அதன் வாசலின் மேல் பாகத்தில் தான் உட்கார்ந்துகொண்டு தன் பின் பாகத்தை கூட்டின் உள்ளே உள்ள மேல்பாகத்தை பொருந்த செய்துகொண்டு சிறிதுநேரம் அசையாமல் இருக்கும். பின் வெளியே சென்று விடும். அப்பொழுது நாம் கூண்டுக்குள்ளே உற்றுப் பார்ப்போமே யானால் ஒரு நூல் தொங்கும், அந்த நூலில் கடைசி பாகத்தில் ஒரு சீரகம் அளவிற்கு ஒரு முட்டை ஊசலாடிக்கொண்டிருக்கும். அந்த முட்டைக்கு நாளடைவில் புழுவின் உடல் முட்டை கரு உருவாவதற்கு உணவாயிற்றேயொழிய புழு குளவியாகவில்லை. எனவே குளவி தன் இனத்தை விருத்தி பண்ணிக்கொண்டதே தவிர புழு குளவியாகவில்லை. ஒன்று மற்றொன்றாதல் இயற்கை சக்தியின் தோற்றத்தில் இல்லை. இனி புழு குளவியை தியானித்தது என்பதும் பொருந்தாது. ஏனெனில் புழு எத்தனை அறிவுடையது. அருந்தமிழுக்கு இலக்கணம் கூறவந்த நன்னூலில் ஐயறிவு உயிர்களை கூறுமிடத்தில் தாவரங்கள் பரிச உணர்ச்சி உள்ள ஓர் அறிவு உயிர் என்றும், நத்தை, புழு முதலியன ரச உணர்ச்சியோடு உடல் உணர்ச்சி யாகிய ஸ்பரிச உணர்வும் சேர்ந்து இரண்டறிவு உயிர் எனவும் கூறுகின்றதேயொழிய புழுவே காதறிவாகிய மூவறிவும் கண் அறிவாகிய நாலறிவும் உள்ள உயிர் எனவும் கூறவில்லையே.

அப்படி இருக்கும்போது புழு குளவியைக் கண்டு தியானம் பண்ணினதாகவும், காதால் குளவி ஊதும் ஓசையை கேட்ட

தாகவும் கூறுவது பொருந்துமா? இனி புழு குளவியைக் கண்டதாகவும் தியானித்ததாகவும் வைத்துக்கொள்ளுவோம். இந்த உவமானப்படி உவமேயத்தில் ஜீவன் பிரமத்தைக் கண்டு தியானம் பண்ணி பிரமமாகுமா? ஆகுமானால் கயிற்றில் தோன்றிய பாம்பும் கயிறை தியானம் பண்ணி கயிறாக வேண்டுமே. பாரதத்தில் வரும் கர்ண திருஷ்டாந்தம் போல் ஜீவத்துவம் கற்பிதமாகும்போது, கற்பிதப்பொருள் தனக்கு யதார்த்தப் பொருளை தியானம் பண்ண முடியுமா? பிரமத்தை ஒரு முறை கண்ணால் கண்டால்தானே தியானம் பண்ணலாம். பிரம்மம் அருவப் பொருளாயிற்றே. அருவப்பொருளே மனதிற்கு மட்டுப் படுமா? மட்டுப்படாதல்லவா? எனவே பிரமத்தை தியானிப்பது என்பது வெற்றுரையாம். உதாரணமாக கர்ணன் தான் க்ஷத்திரிய குலத்தவன் என்பது தியானித்து தெரிந்து கொண்டானா? சூரியனது உபதேசத்தால் தெரிந்து கொண்டானா? ஒரு தசமன் தான் பத்தாமவன் என்பது தியானித்து தெரிந்து கொண்டானா? தத்துவமஸி மகா வாக்கியத்தால் தெரிந்து கொண்டானா? ஒரு கடத்தில் தோன்றும் ஆகாயம் மகாகாசத்தை தியானித்து மகாகாசம் ஆயிற்றதா? இரண்டாகாயமும் ஒரே ஆகாயம் என்று அறிவதுபோல பிரம்மம் ஒன்றுதான் என்று அறியும் இடத்தில் தியானம் ஏது? ஒரு பிராமணன் தன்னை தியானித்து பிராமணன் என்று அறியவேண்டுமா? அல்லது இயற்கையில் தான் பிராமணன் என்று அறியவேண்டுமா? வேண்டுவதில்லை. எனவேஇயற்கைப் பொருளாகிய பிரம்ம சொரூபமே நமது நிஜ சொரூபம் என்று ஐயம் திரிபு அற உணர்வதே சாலச்சிறந்த உண்மையாகும். இனி புழு குளவியின் திருஷ்டாந்தத்தை நூல்களில் கூறிப் போந்ததற்கு உண்மையான கருத்து யாதோ எனின் ஒரு சிஷ்யன் அநாத்மாவாகிய உடம்பை தான் என நம்பியிருப்பதை நோக்கி நேதிவாக்கியத்தால் அவனது அநான்ம புத்தியை ஒழித்து நினைவறிய ஒரு பிரம்ம சொரூபம் நீயேயாம் என்று உள்ளவாறு உணர்த்துதல் குரவன் உபதேசமாகும் என்ற தேவ வாக்கியப்படி வாசகர்களும் ஆத்மாவாகிய பிரம்மமே தன் நிஜ சொரூபமாம் என அறிந்து கர்மயோகிகளாய் ஜீவன் முக்தர்களாக வாழ்வீர்களாக!

திரு. M. கணபதி அவர்களுக்கு எழுதிய தபால் இத்துடன் முற்றுப்பெற்றது.

பிர்மமே சத்யம்
அதுவே நித்யம்

# கடிதம் 23 (1)

28-7-1969
**ஆனந்தாஸ்ரமம்,**
நாங்கூர்.

அன்புள்ள Dr. முத்து அவர்களுக்கு விரும்புவது நலம்.

நிற்க, நீங்கள் அன்புடன் வரைந்த கடிதம் காணப்பெற்றேன். நான் உங்களைவிட்டுப் பிரியாமல் பிரிந்தபின் குடவாசல், வேதாரண்யம் முதலிய இடங்களில் நடைபெற்ற மூன்று திருமணங்களில் கலந்துகொண்டு, நிகழும் ஆடிமாத ஆரம்பத்தில்தான் நாங்கூர் வந்து சேர்ந்தேன். இன்னும் அழைப்புக்கள் பாக்கி இருக்கின்றன. உடல் நலமில்லாமையினால் அந்த அழைப்புக்களை ஏற்றுக்கொள்ளவில்லை. நான் பெருமைமிக்க தமிழகத்தில் சுற்றிப்பார்த்த அளவில் மக்களின் மனப்போக்கு எவ்வாறு இருக்கின்றது என்பதை அறிந்து கொண்டேன். அதாவது நூற்றுக்கு ஒன்றுகூட இல்லை. ஆயிரத்திற்கு தொளாயிரத்து தொண்ணூற்று ஒன்பது பேர்களும், எருக்கன் செடி முதற்கொண்டு ஆலமரம் வரையிலும், பல்லி முதற்கொண்டு பருந்து என்ற பறவை வரையிலும், எலி முதற்கொண்டு நல்ல பாம்பு வரையிலும், பசு முதற்கொண்டு யானை வரையிலும் தோன்றியவைகளை எல்லாம் கடவுளாகக் கருதி வழிபடுகின்றார்கள். பூஜைகளும் செய்கிறார்கள். அவர்களை நோக்கி மனிதனின் கதி என்ன? பிறப்பில் மனிதன் உயர்ந்தவனா? என்று கேட்டால் பதில் சொல்ல இடமின்றி தவிக்கிறார்கள். இந்த பரிதாப நிலைக்குக் காரணம் தெரிகிறதல்லவா? அதாவது வேதகாலத்திற்குப் பின்னும், தொல்காப்பிய காலத்திற்குப் பின்னும் இன்றுவரையிலும் எத்தர்களும், பித்தர்களும் தங்கள் தங்கள் சுயநலம் பூர்த்தி செய்வதற்கு மக்கள் மனதைக் குழப்பி பொருளல்லாதவற்றைப் பொருளாகக் காட்டி பல பொய்க்கொள்கைகள் பரப்பி வந்ததே இதற்குக் காரணமாகும் என்பதற்கு ஐயமில்லை. இது திரு. சுப்பிரமணிய பாரதியார் பாடலால் நன்கு புலனாகும். அந்தப் பாடலாவது:

"சுத்த அறிவே சிவமென்றுகூறுஞ்
சுருதிகள் கேளீரோ? - பல
பித்த மதங்களிலே தடுமாறிப்
பெருமை யழிவீரோ"

இதன் பொருள்:- அறிவே கடவுள் என்பதும், அதை அறியாது பலமதங்களைச் சிருஷ்டித்து தடுமாறிப்போனவர்கள் பித்தர்கள் என்பதும் அதை நம்பி நடப்பவர்கள் ஆத்ம ஞானமாகிய பெருமையை இழந்து விடுவார்கள் என்று அறிவித்தவாறாயிற்று. மேற்கூறிய பித்தர்களின் செய்கைக்கு இந்த பாரதியார் பாடலே போதிய சான்றாகும்.



## கடிதம்: 24 [2]

*16-4-1973*

நிற்க, நீங்கள் அன்புடன் எழுதிய தபால் கிடைக்கப் பார்த்தேன். நீங்கள் ஊருக்குப் புறப்பட்ட அன்று பஸ்ஸில் இடம் கிடைக்காமல் காவேரிப்பட்டினம் போய் திரும்பி, மறுநாள் காலையில் அரக்கோணம் சேர்ந்ததாக எழுதியிருந்தீர்கள். பிரயாணக்கஷ்டம்அதிகமாய்இருந்தபோதிலும்சிலப்பதிகாரத்தில் வரும் கண்ணகியும், பட்டினத்து சுவாமிகளும், இயற்பகை நாயனாரும் தோன்றிய இடம் அது. அங்கு சென்றவர்கள் பேரின்பம் பெறுவார்கள் என்பது வரலாறு. பேரின்பம் சிற்றின்பம் என்று இரண்டாகக் கூறுபவர்கள் அறிவிலிகள். ஒரு தீப்பொறியும், ஒரு தீவட்டியும் தீ என்ற அம்சத்தால் ஒன்றுதான். ஒரு குவளைத் தண்ணீரும், ஒரு குடம் தண்ணீரும் தண்ணீர் என்ற அம்சத்தால் ஒன்றுதான். இதில் சிறிது பெரிது என்ற பேதமே ஒழிய நெருப்பு, ஜலம் என்னும் பொருட்பேதம் இல்லை. அதுபோல் சிற்றின்பம் பேரின்பம் ஆகிய இரண்டும் சொல் பேதமே ஒழிய இன்பம் என்ற பொருளில் சிறிது பெரிது என்ற பேதமில்லை. அறிவாகிய ஆத்மாவுக்கு ஆனந்தமே இயற்கையான சொரூப குணம். சொரூப குணம் குணியை விட்டு நீங்காது. நீங்கினால் முதலே இல்லை. எங்ஙனம் வேப்பிலைக்கு கசப்பு சொரூப குணம். கசப்பு நீங்கினால்

முதல் ஆன வேப்பிலையே இல்லாமல் போகும். அதுபோல் அறிவுக்கு ஆனந்தமே சொரூப குணம். ஆனந்தம் நீங்கினால் முதல் ஆன அறிவில்லாமல் போகும் அல்லவா? அறிவின் சொரூபம் ஆனந்தம் ஆனால் துக்கம் ஏன் தோன்றுகிறது எனின் தானல்லாத தேகத்தை தானாகக் கருதுகின்றபடியினாலும் தனக்கு அன்னியமான உடமைகளை தனதாக அபிமானிப்பதாலும், துக்கம் தோன்றுகிறதே ஒழிய ஆத்மாவுக்குத் துக்கம் செயற்கை எனக்கொள்ள வேண்டும். இதை திருக்குறளில் காணலாம்.

**"நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகும் மாந்தற்கு**
**இனத்தியல்ப தாகும் அறிவு"**

என்று கூறியிருப்பதால் அறியலாம். இந்த அறிவுக்கு மண், பெண், பொன் முதலிய விஷயத்தின் வாயிலாகத் தோன்றும் ஆனந்தம் அறிவாகிய தன் சொரூபானந்தமேயாம் என்று தன்னை அறிந்த ஞானிகள் அறிகிறார்கள், அஞ்ஞானிகள் அறியவில்லை. இதை அற்புதானந்த யோகி என்பவர் எழுதிய மணவாழ்க்கை என்ற புத்தகத்திற்கு சென்னை வை. சு. சாஸ்திரி அவர்கள் (M.A.,L.T.) அளித்த முகவுரையில் "ஆத்மாவை அறியாமல் இன்பத்தை மிருகத்தன்மையாகப் பெறுவது சிற்றின்பமாம். ஆத்மாவை தன் சொரூபமாக அறிந்து இன்பத்தை மானிடத்தன்மையாகப் பெறுவது பேரின்பமாம். சிற்றின்பம்தான் காமம். பேரின்பம்தான் காதல். இல்லற இன்பத்தை ஒழுங்காக நடத்துவதனால் கிடைக்கும் ஆனந்தம் வீடு எனப்படும். இது வடமொழியில் உள்ள வாத்ஸாயின சூத்திரத்தின் கருத்தாகும் என்று கூறியிருப்பதை அறியாது இன்பத்தில் பேதம் கூறுபவர்கள் அறிவிலிகள் என்பதாயிற்று. இதில் காதல் என்பதற்குப் பொருள் யாதோ எனின்? திருக்குறள் "தன்னைத்தான் காதலனாயின் எனைத்தொன்றுந் துன்னற்க தீவினைப் பால்" என்று கூறியிருப்பதால் அறியலாம். மேலும் ஜட வஸ்துக்களுக்கு ஆனந்தம் இல்லை. தன் சொரூபானந்தமே விஷயானந்தமாம் என்று கொள்ளவேண்டும்.

மேலும் கைவல்யத்தில் "மகிழ் காம நுகர் போது சுகமாகும் அனுபூதி வாழ்வென்பது ஆனந்தமாமே" என்பதாலும் உணர்க. மேலும் தைத்திரீய உபநிஷத்தில் "லௌகீகானந்தம்

முழுதும் பிரம்மானந்தத்தின் அமிசமாம்'' என்றும் கூறியிருப்பதால் தன் சொரூபானந்தமே விஷயானந்தமாய்த் தோன்றுகின்றதே ஒழிய, விஷயத்தில் ஆனந்தமில்லை என்று ஆராய்ந்து அறிந்து சிற்றின்பமும் பேரின்பமும் தன் சொரூபானந்தமேயாம் எனக்கண்டு, ஜனகராஜனைப்போல் பற்றின்றி ஜீவன் முக்தனாய் தன் வாழ்க்கையை நடத்துவது உத்தமம்.

அன்பர் திரு. ஜானகிராமன் அவர்களுக்காக இவ்வாறு எழுதினேன். நிற்க நீங்கள் தற்போது 9-4-73-ல் எழுதிய கடிதமும் காணப்பெற்றேன். அதில் பிர்மத்தில் பிரகிருதி ஏன் தோன்றியது என்ற கேள்விக்குப் பதில் பிறகு எழுதுவோம். வரும் ஆவணி மாதத்தில் நான் அங்கு வரலாம் என்று நினைக்கிறேன். மற்றப்படி என் உடல் நிலை முன்போல் நலமில்லாமல்தான் இருக்கிறது. நீங்கள் கொடுத்த மருந்து இரண்டும் 3 நாள் சாப்பிட்டேன். கையில் இருந்த வலி இடுப்புக்கு வந்து குனிய நிமிர முடியாமல் இருந்தது. அதற்கு வேறு மருந்து சாப்பிட்டேன். மீண்டும் கைக்கு வந்துவிட்டது. இந்தியாவின் சீர்திருத்தம் வயோதிகர்களின் பாரிசவாயுவைப் போன்றது என்று விவேகானந்தர் கூறியது எனக்கே பொருந்தும்.



## கடிதம்: 25 [3]

*21-5-1973*

நீங்கள் 9-4-73-ல் எழுதிய தபாலில் சுயம்பிரகாசமாயுள்ள பிர்மத்தில் பிரகிருதி ஏன் தோன்றவேண்டும் என்ற கேள்வி கேட்டிருந்தீர்கள், அதை நான் மறந்துவிடவில்லை. இவ்வாறான கேள்விகளுக்கு பதில் எழுதுவதென்றால் அது ஒரு பெரிய புத்தகமாக விரியும்போல் தோன்றுகிறது. நேரில் பேசிக்கொள்வது தான் நல்லது. ஆயினும் ஒரு சிறிதளவு வரைகிறேன். பிரகிருதியை பற்றி விசாரிப்பது எங்ஙனம் எனின், பிரகிருதி அஞ்ஞானம், அவித்தை, மாயை, சக்தி, தமசு என்பன ஒரு பொருளைக் குறிக்கும் சொற்கள். இந்த மாயை பிர்மத்தில் எவ்வாறு இருக்கிறது என விசாரிப்போம். இனி பிர்மத்தின்கண் மாயையா? மாயையின் கண் பிர்மமா? என வினவின் இதற்கு

விடை பிர்மத்தின் கண் மாயை எனின் அப்போது பிர்மத்தின்கண் மாயை இருப்பது பேதமாகவா? அபேதமாகவா? இதற்கு விடை பேதமாக இருக்கிறது எனின் அப்போது மாயை ஒரு பொருளும் பிர்மம் ஒரு பொருளும் ஆக இரண்டுப் பொருளாக; அத்வைதம் சித்திக்கமாட்டாது. இனி அபேதமாக இருக்கிறது எனின் அப்போது முற்றும் பிர்மமே ஒழிய மாயை என்பது இல்லை. இனி மாயையின் கண் பிர்மம் இருக்கிறது எனின் அதுவும் முன்போல் விசாரித்து மாயையின் கண் பிர்மம் இருப்பது பேதமாகவா? அபேதமாகவா? இதற்கு விடை பேதமாக எனின் இரண்டும் கண்டப்பொருள் என்னும் தோஷம் வரும். இனி அபேதமாக இருக்கிறது எனின் அபேதத்தில் இரண்டு பொருள் இன்மையின் முற்றும் பிர்மமாகி மாயை என்பது இல்லாமல் போய்விடும். இவ்வாறு மாயையைப்பற்றி ஆராய்ந்து பார்த்தால் மாயை என்பதற்கு பொருள் இல்லை, வெறும் சொல்லும் தோற்றமுமேயாம். இனி மாயை என்பது எதை குறிக்கும் எனின் பஞ்சபூதமும் அதன் காரியமான தேகாதி பிரபஞ்சத்தையும் குறிக்கும். இந்த மாயை பிர்மத்தைவிட தனிப் பொருள் அல்ல.

இக்காரணம் பற்றி அன்றோ ''கூறும் நாவேமுதலாக கூறும்கரணம்யாவும்நீயே'' என்றும் தேவாரத்தில் ''ஊண்ஆனாய் உடல் ஆனாய் உயிர் ஆனாய்'' என்றும் கூறியிருப்பதை நோக்குவாருக்கு மாயை என்பது ஒன்றில்லை, முற்றும் பிர்மமேயாம் என விளங்கும். அங்ஙனமாயின் மாம்சாதிகள் எங்ஙனம் பிர்மமாகும் எனின் காரிய காரணப்படி ஆராய்ந்து பார்த்தால் ஒரு அணுப்பொருள் கூட இருக்க இடமில்லை என்பது விளங்கும். இனி காரியம் காரணத்தில் ஒடுக்கிப் பார்க்கவேண்டும். அது எங்ஙனமெனின் திருக்குறள் மெய்வுணர்வு அதிகாரம் பரிமேலழகர் உரையில் ''நிலம் முதல் உயிர் ஈராகிய தத்துவங்களின் தொகுதி என உணர்ந்து அவற்றை நிலமுதலாக தத்தம் காரணங்களுக்குள் ஒடுக்கிக் கொண்டு சென்றால் காரண காரியங்கள் இரண்டும் இன்றி முடிவாய் நிற்பது எதுவோ, அதனை உணர்தல் மெய் உணர்வாம்'' என்று கூறியிருப்பதால் எல்லாம் பிர்மம் என்று ஆன்றோர்கள்

கூறியிருப்பதை காரிய காரண முறைப்படி பொருள் கொள்ள; அறியாதார் தடுமாறி திகைப்பது இயற்கையாம். இப்படி கானல் நீர்போல் பொருளற்ற மாயைப்பற்றி ஆராய்ந்து பார்த்த அறிவாளிகள் உலகம் முடிவில் மாயை அனிர்வசனீயம் என்றும் அவாச்சிய வடிவம் என்றும் கூறியிருக்கிறார்கள் அல்லவா? இதில் அனிர்வசனீயம் என்றால் தனக்கென சொரூபம் ஒன்றின்றி வெறும் தோற்றமாத்திரமாக உள்ளதற்கு அனிர்வசனீயம் or அவாச்சிய வடிவம் எனப்பெயராம். இத்தகையது பழுதையில் பாம்பு போன்றதாம். இவ்வாறான பொருளற்ற மாயை ஏன் தோன்ற வேண்டுமெனின் கட்டையில் கள்வனும், பழுதையில் பாம்பும், கானலில் நீரும், கிளிஞ்சிலில் வெள்ளியும் ஏன் தோன்ற வேண்டும் என்று கேட்க நமக்கு சுதந்திரம் இல்லை. சமுத்திரஜலம் ஏன் உப்பாய் இருக்கிறது, பால் ஏன் வெண்மையாக இருக்கிறது, காக்கை ஏன் கருப்பாக இருக்கிறது என்று கேட்க நமக்கு சுதந்திரம் இல்லை. ஆனால் மாயை என்ற சொல்லும் தோற்றமும் வெறும் கற்பனை என்று அறிந்தால் போதும் இது பற்றி அன்றோ? கைவல்யமும் ''விதன மாயை ஏன் வந்த தென்றால் புத்தி விசாரம் அற்றதனாலே'' என்று கூறியிருப்பதால் விசாரித்துப் பார்த்தால் பிரகிருதிக்கு பிரம்மத்தைவிட தனிப்பொருள் இல்லை.

மேலும் கைவல்யத்தில் ''நீயே சச்சிதானந்தமாய் வேறொன்றும் நினைந்திடாதிருப்பாயேல் மாயசக்திபோம் ஈதன்றி மந்திரம் மறைகளில்காணோமே'' என்று கூறியிருப்பதால் முக்காலத்தும் இல்லாத மாயை விசாரித்து இல்லை என்று தீர்மானித்து நமது எதார்த்த சொரூபமான பிரமம் நான் என அறிந்து சகஜ நிஷ்டையில் இருந்துகொண்டு தனக்கு இன்றி யமையாத கடமைகளை செய்வது அறிவுடைமையாம். இதுபற்றி அன்றோ குமாரதேவ சுவாமிகள் இயற்றி அருளிய அத்வைத உண்மையில் ''மாயை யெனுமிவ்வுரைக் கருத்த மதிக்கின் யாதொன்றிலாததுவே மாயை'' என்று கூறியிருப்பதால் மாயை என்பதற்கு பொருள் இல்லை என ஆயிற்று. இனி மாயை என்பது வெறும் சொல்லும் தோற்றமுமேயாம் என்பதற்கு அத்வைத உண்மை 25-வது செய்யுளை படியுங்கள்:

''தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்வேதாந்த
விசாரணையில்
ஊன்றிநோக்கி யனுதினமும் யூகமதனிற் பரிசயித்தால்
தோன்றி விளங்கு மறிவொன்றே சொன்மாத்திரமாய்
விடுமுலகம்
ஊன்றி நோக்கா தவர்கட்கே யுளதுபோலத் தோன்றியிடும்''

இச்செய்யுளில் ஊன்றி நோக்காதவர்கட்கே மாயை உளதுபோல் தோன்றும் என்பதும் சொன்மாத்திரமாய் விடுமுலகம் என்றும் கூறியிருப்பதை கவனிக்கத்தக்கது. இதனால் கற்பித தோற்றம் அநாதியாக தோன்றிக்கொண்டிருக்கும். அங்ஙனம் தோன்றுவதால் நமது எதார்த்த சொரூபத்திற்கு எவ்வித ஆணியும் இல்லை என்றறியத் தக்கது.



## கடிதம்: 26 (4)

20-6-1973

நிற்க, பஞ்சகோசங்களிலும் சூழ்ந்துகொண்டிருக்கும் புத்தி விருத்திக்கு சாட்சியாகவும், அகண்ட நிறைவாகவும் விளங்கும் பரம்பொருளே தன் வாஸ்தவ சொரூபமாக அறிந்த புத்திவிருத்தி மீண்டும் பஞ்சகோசங்களில் சுற்றிக்கொண்டிருக்கிறது. இப்படி அறிந்தவர்களுடைய புத்திக்கு இருமுக நாட்டம் என்று சொல்லுவார்கள். உடம்பு இருக்கும்வரை இந்த இருமுக நாட்டம் இருந்துதான் தீரும். இது இயற்கையின் நியதியாகும். இந்த புத்தி தன்னை ஆராய்ந்து பஞ்சகோசங்களில் சுழல்வது அதாவது அபிமானிப்பது கற்பிதம் என்றும் தனது சொரூபம் பரிபூரண ஆனந்தம் என்றும் அறிந்தபின் தன்னலமற்று பொது நலமாக செயலாற்ற வேண்டும். இவ்வாறு செயலாற்றுபவனே 'கர்மயோகி' என்று சுவாமி விவேகானந்தர் கூறியிருக்கிறார். 'கர்மயோகி'யானவனுக்கு உலகம் முழுதும் பரம்பொருளின் வடிவமாக அதாவது தன் வடிவமாக அறிந்து செயலாற்றுவான். இதை புத்தர் பெருமான் கடைசியாக தன் சிஷ்யர்களுக்கு அளித்த செய்தியில் ''உரு எடுத்தவர்கள் எல்லாம் உரு அழியும்

உருவத்தில் கட்டுப்பட வேண்டாம் தன் வாஸ்தவ சொரூபமான பிர்மத்தில் கண்ணும் கருத்துமாய் இருங்கள்'' என்று கூறியிருப்பதால் நாம் நமது சொரூப லெட்சியத்தில் கருத்தை வைத்துக்கொண்டு செயலாற்றுவோம். விவேகானந்தர் கர்மயோகம் என்னும் புத்தகத்தில் 192-வது பக்கத்தில் ''எல்லாம் தன்மயமாக பார்க்குமிடத்தில் எந்த மதக் கொள்கையும் கைப்பற்ற வேண்டியதில்லை. கடவுள், ஆத்மா or தத்துவ ஆராய்ச்சி முதலியவை செய்யவேண்டியதும் இல்லை. பூரண தன்னலம் மறுப்பே (தன்னலமற்ற நிலை) அடைவதே கர்மயோகியின் கொள்கையாம்.'' மேலும் கர்மயோகியின் அனுபவத்தைப் பற்றி புதுச்சேரியில் தங்கியிருந்து காலம் சென்ற அரவிந்தர் வங்காளத்தில் இருக்கும் தன் மனைவிக்கு ஒரு கடிதம் எழுதினார். அது வருமாறு:

அன்பே! என் நிலமை இப்பொழுது முற்றிலும் மாறிவிட்டது. என் புத்தி விருத்திக்கு சாட்சியாய் விளங்கும் சச்சிதானந்த சொரூபமே அந்தகரணங்களையும், பிராணனையும், பஞ்சகோசத்தையும் இயங்கச் செய்கின்றது. இவை அனைத்தும் இயந்திரம் போன்றது. அவன் இயந்திரத்தை செலுத்துகிறவன் இந்த புத்தியோடு கூடிய நான் அவனது கைக்கருவி; அவன் என்னை எப்படி நடத்துகின்றானோ அப்படி நான் நடக்கின்றேன். சச்சிதானந்தத்துடன் ஒன்றுபட்டு அவன்பால் சுதந்திரமாய் இருந்து ஜீவன் முக்தனாக வினைபுரிவதே மேலான இலட்சியம் என்று கீதை கூறுகின்றது. நமது உண்மையான ஜீவன் கடவுளே ஆகும் என்பதையும் அது மற்றும் ஜீவர்களுடன் ஒன்றுபட்டது என்பதையும் அறிந்து நமது வாழ்க்கை முழுவதையும் கடவுள் நிலையாக மாற்றிவிட வேண்டும். இந்த உண்மைகளை எல்லாம் நான் உனக்கு சொல்லி உன்னையும் ஒரு ஜீவன் முக்தையாக அதாவது ஆத்ம ஞானியாக காணவேண்டும். அப்பொழுதுதான் நீ எனக்கு பூரணமான ஒத்துழைப்பை தரமுடியும். ஆகையால் நீ உடனே இங்கு வந்து என்னுடன் வாழ்க்கை நடத்த வேண்டும், இப்படிக்கு உன் கணவன்.

இதற்கு அந்த அம்மையார் எழுதிய பதில் கடிதத்தையும் படித்துப் பாருங்கள். எனது ஆருயிர் துணைவா! நீங்கள்

வெளிநாடு சென்று I.C.S. படித்து தேறிய பின் இந்தியாவுக்கு வந்து பொதுநலத்தில் ஈடுபட்டீர்கள். நீங்கள் சூது, வாது அறியாத உத்தமன் ஆனால் உங்களை சில ஆத்மீகவாதிகள் ஆத்மா என்றும் பிர்மம் என்றும் ஜீவன் முக்தி என்றும் பேசி அவர்கள் வலையில் உங்களை வீழ்த்திவிட்டார்கள். உங்களுக்கு புத்தி சுவாதீனம் இல்லாத பயித்தியக்காரனாய் விட்டீர்கள், இக்காரணத்தால் நான் உங்களுடன் வந்து வாழ்க்கை நடத்த முடியாது. இப்படிக்கு உங்கள் மனைவி.

இந்த அம்மையார் ஆரிய சமாஜத்தில் படித்தவர். இவர் கடைசி வரையும் புதுச்சேரிக்கு வராமல் வங்காளத்திலேயே காலமானார்.

அரவிந்தர் கூறிய கீதையின் சாராம்சத்தை அதாவது கர்ம யோகத்தையும் வேதாந்த கருத்துக்களையும் அவர் மனைவி அறியாதுஅவரை பைத்தியம்என்றுகூறியதுபோல்அறியாமையில் சுழலும் மக்களுக்கு நாம் வேதாந்தத்தை சொன்னால் நம்மையும் பைத்தியக்காரர் கணக்கில் சேர்த்துவிடுவார்கள். அதனால் நாம் பின்வாங்க வேண்டியதில்லை. நாமும்அவர்களைபைத்தியக்காரர் ஜாப்தாவில் சேர்த்துவிடுவோம். ஆயினும் அஞ்ஞானிகள் அடுத்து கெடுப்பார்கள் என்பதற்கு சான்றாக அத்வைத சித்தாந்தத்தை போதித்து வந்துகொண்டிருந்த ஆதிசங்கர குருவுக்கு இரண்டு சமண நண்பர்கள் சிஷ்யர்களாக பாசாங்கு வேஷம் போட்டு விஷம் கொடுத்து கொன்றார்கள் என்பது நான் கண்ட உண்மை புத்தகத்தின் 34-வது பக்கத்தில் கூறியிருப்பதே போதுமான சான்றாகும். இதனால் நாம் ஜாக்கிரதையாக இருப்போம். எதற்காக இதையெல்லாம் எழுதினேன் என்றால் இந்தியாவில் பல சங்கங்களும், சமாஜங்களும் தோன்றி கடவுளைப்பற்றி பல அபிப்பிராயங்கள் வெளியிட்டுள்ளது. அதில் முக்கியமானது ஆரிய சமாஜம், பிர்மசமாஜம், பிர்மஞான சங்கம் முதலியவை களாகும். இந்த சங்கங்களும் மற்றுமுள்ள மடங்களும் வேதாந்தம் பேசுவதுபோல் வெளிக்கு காட்டி உள்ளே ஆண்டான் அடிமையும், மதப்பற்றும் சுயநலமும்தான் அவர்கள் குறிக்கோள் என்பதற்கு ஐயமில்லை. இதை அறியவேண்டின் 'நான் கண்ட உண்மை' என்னும் புத்தகத்தில் 'சங்கரரும் சத்யார்த்த பிரகாசமும்' என்ற தலைப்பில் படித்துப் பாருங்கள். இதில்

ஆதிசங்கருடைய கொள்கையை தயானந்த சரஸ்வதியால் மறுக்கப்பட்டிருக்கிறது. எந்த சார்பு புத்தியும் இல்லாது உண்மை வேதாந்தம் பேசுவது நமது பிர்ம வித்யாபீடம் ஒன்றுதான் என்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். அத்வைத ஸ்தாபனகர்த்தாவான ஆதிசங்கரர் கொள்கையை மறுத்தால் வேதத்தையும் பிரம்ம சூத்திரத்திற்கு சங்கரர் இயற்றி அருளிய பாஷ்யமான உரையையும் அல்லவா மறுப்பதாயிற்று. இப்படி ஒருவருக் கொருவர் மறுத்துக்கொண்டே போனால் உண்மை உணராது மக்கள் பல இன்னல்களுக்கு ஆளாவார்கள். இந்தியாவில் வேதாந்தம் பரவாமல் போனதற்கு இதுவே காரணம். இவர்களெல்லாம் உண்மையை மறைத்து பேதபுத்தியை வளர்ப்பதற்கு காரணம் சாதி, மத, பேத அபிமானமேயாகும். சாதி முதலிய இந்த அபிமானங்கள் எல்லாம் ஸ்தூல சரீரத்தை பொறுத்ததே ஒழிய ஆத்மாவைப் பொறுத்தது அல்ல. ஆத்மாவுக்கு வேறான எல்லா பொருள்களும் ஜடமேயாகும். ஆத்மாவுக்கு வேராக ஒரு கடவுள் இருந்தால் அந்த கடவுளும் ஜடமேயாகும். மேல்கூறிய மதவாதிகளுக்கு ஜட, சித்து, விசாரம் கிடையாது. ஆன்மா பரிபூரணம் என்று கூறும் வேத முடிவுக்கு மாறாக ஒரு பொருள் or கடவுள் or ஜீவன் இருக்குமே யானால் ஒன்று இருந்தவிடத்தில் மற்றொன்று இராது. ஆகையால் இரண்டும் or ஒவ்வொன்றும் கண்டப்பொருளாகும். ஆகுமானால் அத்வைதம் சித்திக்காது. ஏனெனில் கண்டப் பொருள் எதுவோ அது நாமரூபம் உடையதாகும். நாமரூபம் உடையது எதுவோ அது அழியும் பொருளாகும். ஆகையால் சித்து சொரூபமான தன்னைத்தவிர ஒன்றும் இல்லை. இருக்கு மானால்அதுவும்ஜடமேயாகும்.ஜடப்பொருள்களுக்கு விளக்கம் இன்பம், இருக்கமுடியாது. அன்னியில் ஜடப்பொருள்களில் இச்சை, ஞானம், கிரியை, முயற்சி முதலிய குணங்கள் இருப்பதாக இது கால பரியந்தம் எந்த விஞ்ஞானியாவது கண்டுப்பிடித்து சொன்னார்களா? சொல்லவில்லை. இதுபற்றி அன்றோ ''நான் கண்ட உண்மை'' என்னும் புத்தகத்தின் 98-வது பக்கத்தில் ''ஞானம், இச்சை, முயற்சி, கிரியை முதலியவைகள் பஞ்சபூதத்தில் அபேதமாயிருக்கிறதா? பேதமாயிருக்கிறதா? என்று கேட்டிருக்கிறார் அந்த நூலாசிரியர்.

# கடிதம்: 27 (5)

3-9-1973

நிற்க, பிரகிருதியின் வெளிப்பாடான பஞ்சபூதமும் அதன் காரிய தோற்றமான சரீரங்களும் அதை விளக்கிக் கொண்டிருக்கும் ஜீவதன்மையும் அந்த ஜீவனால் அறியப் படுகின்ற நனவு, கனவு, உறக்கம், துரியம், துரியாதீதம், வரன், வரியான், வரிட்டன் என்ற பேதங்களும் இந்திரிய லயம், மனோலயம், பிராணலயம், சமாதி முதலியவைகளும் வெறுங் கற்பனை மாத்திரமே ஒழிய உண்மையல்ல என்பதும் விருத்தியில் நான் பிர்மம் என்ற நிச்சயமே உண்மை ஞானமாம் என்பதுவும் 30 ஆண்டுகளுக்கு மேலாக பிர்ம வித்யாபீடத்தில் கூறி வந்துள்ளேன். எனது இந்த அபிப்ராயமும், திரு. சௌந்தரராஜ பிர்மத்தின் அபிப்ராயமும் ஒன்று என்பதற்கு சான்று 'நான் கண்ட உண்மை'யில் காணலாம். 'நான் கண்ட உண்மையின்' 203 - வது பக்கத்தில் ரிஷிகேசம் சிவானந்தருடைய அபிப்ராயத்தை மறுக்கும் சந்தர்ப்பத்தில் ''இரண்டு பொருள் அதாவது ஜீவன், பிர்மம் ஆகிய இரண்டு வஸ்துவில் ஒன்று பொய்யாகவேண்டும். விவேகமும் புத்திவிருத்தியில்தான் நிகழவேண்டும். அந்த புத்தி விருத்தியே இரண்டு வஸ்துக்களை சிருஷ்டித்ததே அன்றி அந்த புத்தி விருத்தியிலும் இரண்டு வஸ்துக்கள் இல்லை. அவ்வாறு விருத்தி விவேகஸ்தியில் இரண்டை ஆராய்ந்து ஒன்றை பொய் என்றும் ஒன்றை மெய் என்றும் பகரும்; அந்த புத்தி விருத்தியும் தன்னை விருத்தி அல்ல நாம் சத்து சித்து ஆனந்தமாகிய பிர்மன் என்ற உணர்வில் அதற்கு அந்நியமாக ஆனந்தம் இருப்பதற்கு இடமில்லை'' என்று கூறி இருப்பதால் மனோலயம், விருத்திலயம், முதலிய மயக்க சொற்கள் கற்பனை என தள்ளி; விருத்தியில் தன்னை பிர்மமாக காணும் ஞானமே உண்மையாம். இதற்கு வேரான ஞானமெல்லாம் அஞ்ஞானமேயாகும். ஆனால் விருத்தி அற்ற சுழுத்தியில் ஆனந்தம் இருக்கின்றதே என்று சிலர் கேட்கலாம். அங்கு விருத்தி உண்டு இல்லையெனில் நனவில் வந்தபின் சுழுத்தி சுகானுபவத்தை சொல்லுவது யார்? ஆகையால் விருத்தி உள்ளவிடத்தில்தான் பிர்மானுபவம் சொல்ல வேண்டும். இதை ஒரு கைவல்ய செய்யுளால் அறியலாம்.

"சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதிருந்தால்
எத்தனை யெண்ணினாலு மேதுசெய்தாலு மென்ன
நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கனாவேபோல
அத்தனையும் பொய்தானே யாநந்த வடிவநானே"

(173)

இச்செய்யுளில் சித்து சொரூபனாகிய நான் எங்கும் நிறைந்தவன்என்பது பொருள். இங்ஙனம்அறிவு சொரூபனாகிய நான் எங்கும் நிறைந்தவன் என்ற நிச்சயம் விருத்தி அற்ற நிலையிலா? or, விருத்தியுற்ற நிலையிலா? என்பதை சிந்தித்துப் பார்க்கட்டும்.

மற்றபடி அங்குள்ள பிர்ம வித்தியார்த்திகளாகிய அன்பர்கள் எல்லோருக்கும் எனது ஆசியை தெரிவிக்கவும்.



## கடிதம்: 28 [6]

8-4-1974

இது நிற்க, முன் கடிதத்தில் 11 ஆனந்தத்தைப்பற்றி எழுதி இருந்தீர்கள். அது சிந்தனைக்கு ஏதாவது வேலை கொடுக்க வேண்டும் என்று எண்ணுவதுபோல் தோன்றுகிறது. அது எனக்கும் உங்களுக்கும் நல்லதுதான். ஆனந்தத்தைப் பற்றிய விஷயம் எல்லாம் கடிதம் மூலம் எழுதுவது சரியான விளக்க மாகாது, நேரில் பேசிக்கொள்வது நல்லது. ஆயினும் சுருக்கமாக எழுதுகிறேன். ஆனந்தத்திற்கு எல்லை கிடையாது. ஆயினும் அதைப்பற்றி சிந்திப்பவர்க்கு ஒரு எல்லைக்கு உட்படுத்தி கூறுவது நூல்களின் சம்பிரதாயமாகும். பதினோரு ஆனந்தத்தில் பஞ்சதசியில் கூறியுள்ள ஆறு (6) ஆனந்தத்தின் பெயர் வருமாறு:

1. பிர்மானந்தம்
2. யோகானந்தம்
3. ஆத்மானந்தம்
4. அத்வைதானந்தம்
5. வித்யானந்தம்
6. விஷயானந்தம்

இதன் பொருள்:- பிர்மானந்தமாவது, நாம் அனுபவிக்கும் எல்லா ஆனந்தங்களிலும் மேலான ஆனந்தமாம் பிர்மானந்தம். அது சுழுத்தி அவஸ்தையில் அனுபவமாகின்றது. இதற்கு பிர்மானந்தம் என்று பொருள்.

இனி யோகானந்தமாவது, மேல் கூறிய பிர்மானந்தமே தன் வாஸ்தவ சொரூபமாகுமென ஐயந்திரிபுஅற தெரிந்து தெளிந்து கொண்டு சகல தொழில்களும் பற்றற்று செய்வது யோகானந்த மாகும். இவ்வாறு தன்னைத் தெரிந்து, தெளிந்துகொண்டு தொழில் நடத்துபவனே கர்ம யோகியாகும். இதை கர்மத்தில் அகர்மம், அகர்மத்தில் கர்மம் என்று கீதையில் கூறியிருப்பதை காண்க.

இனி ஆத்மானந்தமாவது, மேல் கூறிய பிர்மானந்தமே ஆத்ம சொரூபமாய் அதாவது அறிவு சொரூபமாய் விளங்கிக் கொண்டிருக்கிறது என அறிதல் வேண்டும். ஆனால் அறிவில் துக்கம் காணப்படுகிறது எனின் அறிவுக்கு ஆனந்தமே சொரூப குணம். துக்கம் கற்பித குணமாகும். சொரூப குணமாவது எப்பொழுதும் தன் சொரூபத்தை விட்டு நீங்காததாகும். கற்பித குணம் என்பது ஒரு காலத்தில் தோன்றி மற்றொரு காலத்தில் தோன்றாமல் போவது என அறிதல் வேண்டும் அறிவுக்கு ஆனந்தமே சொரூப குணம். அதாவது இயற்கை குணம் என்பது வாசுதேவ மனனத்தின் துக்காரோப நிரூபகத்தில் ஆத்மாவுக்கு துக்கம் ஆகந்துகம் அதாவது செயற்கையாக தோன்றுகின்றதே யொழிய இயற்கை அல்ல என்று தீர்ப்பு கூறியிருப்பதை காண்க.

இனி அத்வைதானந்தமாவது: பிர்மானந்தமே அறிவு சொரூபமாக விளங்கிக்கொண்டிருந்தபோதிலும் ஜகஜீவபர கற்பனை ஆகிய துவைதம் தோன்றிக் கொண்டிருக்கிறதே எனின் சமுத்திரத்தில் தோன்றும் அலை, நுரை, குமிழி, முதலிய யாவும் ஒரே சமுத்திர ஜலமாகும் என்று அறிவதுபோல் ஜக ஜீவபரம் யாவும் நம் சொரூபானந்தத்தின் ஏகதேச குமிழிகளே யாகும். மீண்டும் துவைதம் தோன்றுகிறதே எனின் ஐவகை பிராந்தி உள்ளவிடத்தில் தான் துவைதம் தோன்றும். பிராந்தி நீங்கி தெளிந்தவிடத்தில் துவைத பிராந்தி தோன்றாது. எனவே நமது சொரூபம் பரிபூரண ஆனந்தமாம் என அறிவது அத்வைதானந்தமாம்.

இனி வித்யானந்தமாவது: தத்துவமஸி மகாவக்கிய விசாரத்தால் மேற்கூறிய பிரமானந்தமே அதாவது அறிவானந்தமே நமது வாஸ்தவ சொரூபம் என தெளிவது வித்யானந்தமாம். தத்துவமஸி என்பது தத்பதம், துவம்பதம், அசிபதம் என மூன்றாய் விரியும். இதில் துவம்பத விசாரத்தால் தன் சரீரத்தில் விளங்கும் அறிவும் தத்பத விசாரத்தால் நிறைபொருளான பிர்மமும் அசிபத விசாரத்தால் ஒன்று என அறிதல் வேண்டும். இதை ரிபுகீதை 2-வது அத்தியாயம் 25-வது செய்யுளில் ''தற்பத லெட்சியமான பொருளும் நீயே, தொம்பத லெட்சியமான பொருளும் நீயே, அற்பமில அசிபதம் மாற் பொருளும் நீயே;'' என்று கூறியிருப்பதால் அறியலாம்.

இனி விஷயானந்தமாவது: சுழுத்தி அவஸ்தையில் விளங்கும் ஆனந்தம் நீங்கலாக சிற்றிடை மடவார்போக முதற்கொண்டு எல்லாசுகங்களும் விஷயானந்தமாம். ஆத்மாவின் சொரூபானந்தமே விஷயங்களின் வாயிலாக அனுபவிக்கப் படுகின்றதேயொழிய விஷயத்தில் ஆனந்தம் இல்லை. விஷயத்தில் ஆனந்தம் உளதாக கருதுவது பிராந்தியேயாம் இதை கைவல்யம் சந்தேகம் தெளிதல் படலம் 111-வது செய்யுளில் ''மகிழ் காம நுகற்போது சுகமாகும் அனுபூதி வாழ்வென்பது ஆனந்தமே'' என்று கூறியிருப்பதை காண்க. இதன் பொருள் ஒருவன் இச்சித்த பதார்த்தம் கிடைக்கும்போது ஆனந்தம் உண்டாகிறது. இந்த ஆனந்தம் ஆத்மாவினுடைய ஆனந்தமாம். பதார்த்தத்தினுடைய ஆனந்தம் அன்று. இந்த செய்யுளின் உரையில் ஆத்மா ஆனந்த சொரூபமாம். அதனால்தான் விஷய சம்பந்தத்தால் ஆனந்தம் உண்டாகின்றதேயொழிய விஷயத்தில் ஆனந்தம் இல்லை என்று கூறியிருப்பதை உய்த்துணர்க.

இதுவரை பஞ்சதசியில் கூறிய ஆறு ஆனந்தத்தைப்பற்றி கூறினோம். இந்த ஆறு ஆனந்தத்தின் விரிவைப்பற்றி தஞ்சாவூர் குப்புசுவாமி ராஜு பதிப்பு பஞ்சதசியில் 375-வது பக்கங்களில் விளக்கி கூறப்பட்டுள்ளது.

இனி பாக்கி ஐந்து ஆனந்தங்களின் விளக்கத்தை கூறுவோம். இவை கைவல்யத்தில் காணப்படுவது ஆகும். ஐந்து ஆனந்தங் களின் பெயர்களாவன:

1. வாசனானந்தம்
2. முக்கியானந்தம்
3. நிசானந்தம்
4. உதாசீனானந்தம்
5. மௌனானந்தம்

இதில் வாசனானந்தமாவது: பரபுருடனிடம் மனம்சேர் மங்கை நிகழ்தொழில்கள் செய்யினும் பரபுருஷ சுகவாசனை விட்டு அகலாள். அதுபோல் தெளிந்த ஞானி நிகழ்தொழில்கள் செய்யினும் தன் சொரூப சுகத்தை விட்டு அகலான். இதுவே வாசனானந்தமாம்.

இனி முக்கியானந்தமாவது: குடத்துக்குள் இருக்கும் ஜலமே வெளிப்புறத்தில் காணும் ஈரமாகும். அதுபோல் பொறிபுலன்களால் அனுபவிக்கும் ஆனந்தங்கள் யாவும் ஆத்மாவின் சொரூபானந்தம் ஆதலால் அது முக்கியானந்தமாம்.

இனி நிசானந்தமாவது: விஷயானந்தங்கள் அனைத்தும் மாறிமாறி வரினும் சொரூபானந்தம் மாறாதிருப்பதால் அது உண்மையான நிசானந்தமாம்.

இனி உதாசீனானந்தமாவது: ஒருவன் ஒன்றும் செய்யாமல் சும்மா இருக்கின்றபோதும் காணப்படுகின்ற சுகம் சொரூபசுகம் ஆதலால் அது உதாசீன சுகமாயிற்று.

இனி மௌனானந்தமாவது: ஆத்மாவானது கருவி கரணாதிகளோடு கூடிய காலத்தும், கூடாத காலத்தும் தன் சொரூபம் ஆனந்தமாய் இருப்பதால் அது மௌனானந்தமாயிற்று.

முன்கூறிய ஆறு ஆனந்தங்களும் இப்பொழுது கூறிய ஐந்து ஆனந்தங்களும் ஆக பதினோரு ஆனந்தங்களும் பிரமானந்தத்தில் அடங்கும். இது புராணாதிகளில் வரும் பதினோரு ஆனந்தங்களின் பெயர்களாவன:

1. மனுடானந்தம்
2. மனுட கந்தர்வானந்தம்
3. தேவகந்தர்வானந்தம்
4. அக்னிஷ்வாத்தா முதலிய தேவர்கள்

5. ஆஜானதேவன்

6. கர்மதேவன்

7. பதினோரு ருத்திரர்கள்

8. இந்திரன்

9. பிரகஸ்பதி

10. பிரஜாபதி

11. இரணீயகர்ப்பன் முதலியவர்கள்

இதில் முதல் மனுடானந்தமாவது: ஏக சக்கராபதியும் திடகாத்திரமும் யௌவன வயதும் நோய் இல்லாதவனும் ஆன அரசனுக்கு உள்ள ஆனந்தம் மனுடானந்தமாம்.

மற்றுமுள்ள தேவர்களுக்கு உள்ள ஆனந்தங்கள் ஒருவருக்கு ஒருவருடைய ஆனந்தம் 100; 100 பங்கு அதிகமாக கொள்ள வேண்டும். ஆனந்தங்களின் உயர்வு தாழ்வு தோன்ற வேண்டி தேவர்களின் ஆனந்தத்தை கற்பனையாக புராணாதிகள் கூறுகின்றன. அவைகள் யுக்தி, அனுபவத்திற்கு ஒத்துவராதது. பஞ்சதசியில் கூறியுள்ள ஆனந்தங்கள் 11-ம் யுக்தி அனுபவத்திற்கு ஒத்துவரும் என்பதை அறிக. ஆக மொத்தம் உள்ள 22 ஆனந்தங்களும் பிரமானந்த சமுத்திரத்தின் திவலைகளாகும். பிரளய வெள்ள கடல் பிரமானந்தமாம்; எனவே இருபத்து இரண்டு ஆனந்தங்களும் தன் சொரூபானந்தத்தின் வேரல்ல என கண்டு பிரமானந்த சமுத்திரத்தில் மூழ்கி கர்மயோகியான ஜீவன் முக்தனாக வாழ்வாயாக!

இவ்வாறான கருத்துக்களை மனதில் கொண்டு தான் 'இல்லறம் நடத்துவது எப்படி?' என்ற நூலுக்கு எழுதிய முகவுரையில் பதினோரு ஆனந்தங்களும் தன் சொரூபானந்தம் ஆக கண்டவர் ஸ்ரீ குருகிணகர் சுவாமிகள் என்று எழுதினேன்.



## கடிதம்: 29 [7]

*5-12-1974*

எனது உளங்கனிந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். உங்கள் தம்பியின் நிலமையையும், உங்கள் அன்பிற்குரிய

மனைவியின் நிலமையையும் தெரிந்துகொண்டேன். பீஷ்மர், துரோணர் முதலிய ஆச்சாரியர்களின் உடல் போவதைப் பற்றி அர்ச்சுனன் மிகவும் துயரப்பட்டபோது ஜீவனாகிய அர்ச்சுனனுக்கு, ஜீவஸாக்ஷி ஆன கண்ணபிரான் கூறியதாவது. ஸ்ரீலஸ்ரீ வீரசுப்பையா சுவாமி அவர்கள் மொழிபெயர்த்துள்ள பகவத்கீதை கூடார்த்த தீபம் 119-வது பக்கம் ''ஹே அர்ச்சுனா மண்குடம் போல் காரியத்திற்கு அதனது உபாதான காரணத்தின் கண்ணே லயம், காண வருகின்றது. இந்த பீஷ்மர், துரோணாதி காரியரூப, சரீராதிகள் தமது காரண ரூபத்தால் எப்போதும் இருக்கின்றது.'' என்று கூறியிருப்பதால் ஜனன மரணாதி, துக்கம், ஆத்மாவாகிய நம்மிடத்தில் முக்காலத்தும் இல்லை. சரீராதிகளும் தத்தம் காரணத்தில் லயமாகின்றதே ஒழிய அழிவதில்லை என்பதாயிற்று. இவ்வாறாக மேற்கோள் காட்டியிருப்பதால் உங்கள் தம்பியை குறித்து நீங்கள் துயரம் உறுவதாக நான் கருதியிருக்குமோ? என்று நீங்கள் நினைக்கக் கூடாது. ஏனெனில் அபரோக்ஷ ஞானியாகிய உங்களுக்கு துக்கத்தை நேதி, நேதி செய்து பார்க்கும் விவேகபுத்தி உண்டு என்பது எனக்குத் தெரியும். உங்கள் சபைக்கு வரும் பரோட்ச ஞானிகளுக்காகவே கீதையின் மேற்கோள் காட்டினேன். இனி பௌர்ணமி தோறும் கூட்டம் நடத்துவதாகவும் அந்த கூட்டத்தில் ஸ்ரீலஸ்ரீ வித்யானந்தகிரி சுவாமிகளும் கலந்துகொள்வதாகவும் எழுதியிருந்தீர்கள். அதை அறிந்து மகிழ்ச்சி அடைந்தேன். ஸ்ரீ சுவாமிகளுக்கு எனது வணக்கம் தெரிவிக்கவும். உங்கள் சபையில் சித்து, ஜட ஆராய்ச்சியை பற்றியே பேசவேண்டும். ஏனென்றால் சித்து என்பது அறிவுக்குரிய பெயராகும். அந்த அறிவுக்கு வேறாக ஒரு கடவுளேனும் இருக்குமானால் அதுவும் ஜடமாகத்தான் இருக்கவேண்டும் என்பது நியதியாகும். அறிவின்றிய இடத்தில் ஆனந்தம் இல்லை. ஜடப் பொருள்களில் ஆனந்தம் எவ்வாறு இருக்கமுடியும். இச்சை, ஞானம், கர்த்தா, போக்தா முதலிய அனுபவங்கள் அறிவாகிய ஆத்மாவில் அன்றோ இருக்கின்றது. இதை ஆத்ம புராணம் 45-வது பக்கத்தில் ''எல்லா ஜட வஸ்துக்களும் சேதனமாய ஆன்மாவின் சுக சாதனமாம். ஜட வஸ்து, ஜடத்தின் சுக சாதனம் அன்றாம். ஆகையினால் போகத்தின் ஆஸ்ரய வடிவ போக்தா ஆத்மாவாம்.

போகரூப கிரியையின் கர்த்தாவும் ஆத்மாவாம்'' என்று கூறியிருப்பதால் அறியலாம். மேலும் ஞானவாசிட்டம் நிர்வாண பிரகரணம் 63-வது பாட்டின் வீர சுப்பையா சுவாமிகள் உரையில் ''நான் அறிவுரு என்னும் ஒப்பற்ற ஏக நிச்சயமே சர்வசங்க பரித்தியாகமாம் ராகவனே இவ்வாறு உள்ளே பாவித்துக்கொண்டு நீ செய்யவேண்டிய தொழில்களை செய்தீ'' என்று கூறியிருப்பதை காண்க.

மேலும் நான் கண்ட உண்மை 203 - வது பக்கம் ''நாம் சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய பிர்மம் என்று உணர்ந்தபின் அதற்கு அந்நியமாக ஆனந்தம் இருப்பதற்கு இடம் இல்லை. அந்நிலை அடைந்தபின் அதற்கு ஜாக்ரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம், சவிகர்பம், நிர்விகர்பம் போன்ற அவஸ்தை ஆரோபம் எப்படி ஏற்படக்கூடும்'' என்று கேள்விக் குறியாக கேட்டிருப்பதால் நிருவிகர்ப சமாதிவரையிலுள்ள அவஸ்தைகள் ஆரோபமாம் அதாவது கற்பனையாம். முடிவான நிர்விகர்ப சமாதி என்பதும் வேதாந்தத்திற்கு உடன்பாடில்லை. அது சைவ சித்தாந்தத்திலேயிருந்து வேதாந்திகள் கடனாக வாங்கியதாம். அதை திருப்பிக்கொடுத்துவிட வேண்டும். இனி வேதாந்தத்திற்கு உடன்பாடு யாதோ எனின் அது சகஜ சமாதியேயாம். இதை உறுதிப்படுத்துவதற்கு வாசிட்டம் ''காயத்தின் வேராக தன்னைக் கண்டோன்'' என்கிற செய்யுளின் வீரசுப்பையா சுவாமிகளின் உரையில் ''அபரோட்ச பிர்ம ஞானியானவன் மாயாவஸ்துக்களின் மயக்கத்தால் மாறுபாடாக மாட்டான். எதுபோல் எனின் மணந்த பரபுருடன்மேல் மனம்சேர் மங்கை நேயத்தால் கிரக கிர்த்தியங்கள் செய்யுமாபோல் நிகழ்தொழில் செய்யினும் சொச்சொரூப அனு சந்தானந்தத்தை விட்டு அகலான் ஞானி'' என்று கூறியிருப்பதால் சகஜ சமாதியே வேதாந்த சித்தாந்தமாம். இதை அறியாதார் நிர்விகர்ப சாமாதியை அடைய முயற்சிப்பதை பார்க்கும்போது அவர்களுக்கு தத்துவமஸி மகா வாக்கியத்திற்கு வரும் காலத்தில் பொருள் கொள்பவர்களாக தோன்றுகின்றது. நிகழ்காலத்தில் தன் சொரூபத்தை குறிக்கோளாக அறியாதவர்கள் ஆவதோடு ஐவகை பிராந்தியையும் விட்டு அகலாத அவர்களும் ஆவார்கள் என்பதற்கு ஐயம் இல்லை. அன்றியும் நிர்விகர்ப்ப சமாதியில்

பிர்மானந்தத்தை அனுபவிக்க விரும்பும் விஞ்ஞானமயனுடைய நிகழ்கால வாஸ்தவ சொரூபமே ஆனந்தமயன் என விளக்கிக் கூறும் பாகத்தியாக லட்சணையையும் சொரூப லட்சணையையும் அறியாதவர்களுமாகின்றனர். சகஜ சமாதியை உடையவன் அனுபவத்தைப் பற்றி விசாரசாகரம் 200-வது பக்கம் "நடந்தும்; நடக்காதவன், யவ்வன ஸ்திரியை அனுபவித்தும் நித்ய சந்நியாசி சிஷ்யனே இந்த ஆச்சரியத்தை நீ அறிவாயாக" என்று கூறியிருப்பதால் அறியலாம். இனி சமாதியில் இருந்து பிர்மத்தை அனுபவிக்க வேண்டாமோ? எனின் "நான் கண்ட உண்மை" 316-வது பக்கம் "ஆத்மா தானே அனுபவம் என்னும் நித்திய ஞான வடிவாய் இருத்தலால் அதற்கு அனுபவிக்கப் படும் தன்மை இல்லை" என்று கூறியிருப்பதால் அசங்கனாக இருந்துகொண்டு செயலாற்றுங்கள். மேல் கூறியுள்ள விஷயங்களைப்பற்றி உங்கள் சங்கத்தில் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்.

மற்றபடி எல்லா அன்பர்களுக்கும் எனது ஆசி உரித்தாகுக.



## கடிதம் : 30 (8)

*31-3-1975*

உங்கள் கடிதத்தில் ஐந்து கோசங்களில் ஆனந்தமய கோசத்திற்கு, கோசம் அதாவது உறை உண்டா? என்ற கேள்வி ஒன்று எழுதி இருந்தீர்கள். ஆனந்தமயன் என்பது வரைக்கும் தான் வேதாந்தம் ஒப்புக்கொண்டிருக்கிறதே ஒழிய உறை ஒப்புக்கொள்வதில்லை. தத்துவங்களில் வகை, தொகைகளுக்காக வேதாந்த நூல்களில் உறை ஒப்புக்கொண்டிருக்கிறதே ஒழிய அதுவே சித்தாந்தம் அல்ல. எவ்வாறெனின் மகாகாசம்போல் எங்கும் நிறைந்து இருக்கின்ற அறிவு பஞ்ச கோசங்களையும் விளக்குகின்றபோது நான் எனது என்ற உணர்ச்சி உண்டாகின்றது. விளக்கம் அடையாதபோது அவை ஜடமாகவே காணப்படும். இது எல்லோருடைய அனுபவமாம். தோல், இரத்தம், மாமிசம், நரம்பு, எலும்பு, மூளை ஆக இந்த ஆறும் தூல சரீரமான அன்னமய கோசமாம். பிராணவாயுவும், வாக்கு முதலிய

கர்மேந்திரியங்களும் சேர்ந்தது பிராணமய கோசமாம். மனதும் கண் முதலிய ஞானேந்திரியங்களும் சேர்ந்தது மனோமய கோசமாம். புத்தியும் ஞானேந்திரியமும் சேர்ந்தது விஞ்ஞானமய கோசமாம். காரண சரீரமான அஞ்ஞானமே ஆனந்தமய கோசமாம். இவ்வாறு தத்துவ நூல்களில் கூறி இருக்கின்றது.

இதில் நாலு கோசத்திற்கும் உறுப்புக்கள் கூறி இருப்பது போல் ஐந்தாவது கோசத்திற்கு உறுப்புக்கள் கூறவில்லை. உறுப்புக்களில்லாத போது எவ்வாறு உறையைப்போல் மறைக்கக்கூடும், கூடாதென்க. இனி தலையணையை உறை மறைத்தாற்போல் அஞ்ஞானம் மறைக்கும் எனின் அஞ்ஞானம் என்பது அறியாமையை குறிக்கும். ஞானம் என்பது அறிவை குறிக்கும். இதில் அறியாமை என்பது இருள் போன்றது. அறிவு என்பது ஒளியைப் போன்றது. இதில் இருள், ஒளியை மறைக்குமா? மறைக்காதல்லவா! சுழுத்தி அவஸ்தையில் அறியாமை அறிவை மறைப்பதாக கூறுகின்றார்களே எனின் அவ்வாறு கூறுவதன் உள்கருத்து வேறுவிதமாக கொள்ள வேண்டும். அதாவது, அறிதல், அறியாமை ஆகிய இரண்டும் அந்தக்கரணத்தின் புடப்பெயர்ச்சியாகும். இவை இரண்டும் நனவில்தான் இருக்குமேயொழிய சுழுத்தியில் எவ்வாறு இருக்கமுடியும், முடியுமானால் அதை பிர்மானந்தம் என்று எவ்வாறு கூறமுடியும்'' தூங்கும் சுகமது பிர்மசுகமெனல் சுருதிப் பொருள்'' என்று கைவல்யத்தில் கூறியிருப்பதால் பிர்மானந்தத்தில் அஞ்ஞானம் எவ்வாறு இருக்கக்கூடும். எனவே நனவில்தான் அஞ்ஞானத்தை ஒப்பவேண்டுமே யொழிய சுழுத்தியில் ஒப்பவேண்டியதில்லை. ஒப்பினால் அந்த அஞ்ஞானம் போக்கிக்கொள்வதற்கு சுழுத்தியில் அல்லவா பாடம் கேட்கவேண்டும். இனி உறக்கத்தில் ஒன்றும் தெரியவில்லை என்று கூறுவது அஞ்ஞானம் அல்லவா எனின் அவ்வாறு கூறுவது அஞ்ஞானத்தைக் குறிக்காது.

தூங்கி விழித்தவர்கள் இரண்டு அனுபவத்தைக் கூறுவார்கள். ஒன்று சுகமாக இருந்தேன் என்பது மற்றொன்று ஒன்றும் தெரியவில்லை என்பதாகும். இதில் ஒன்றும் தெரியவில்லை என்பது அஞ்ஞானத்தைக் குறிக்ாதோ! எனின் அதுவும்

அஞ்ஞானத்தைக் குறிக்காது. எங்ஙனம் எனின் வேதாந்த சூடாமணியின் 98-வது செய்யுளில் உரையில் ''சுழுத்தியில் நான் சுகமாய் இருந்தேன் என்பதற்குக் காரணம் தனக்கு அன்னியமான அதாவது சுகத்திற்கு இடையூறான விஷயங்கள் ஒன்றும் இல்லையென்பது பொருள். இனி ஒன்றும் தெரியவில்லை என்பதற்கு காரணம் சம்சார துக்கமாகிய பிரதிபந்தங்கள் ஒன்றும் இல்லை'' என்பது பொருள். இவ்வாறு பொருள் கொள்வதினால் சுழுத்தியில் அஞ்ஞானம் இல்லை. நனவில்தான் அஞ்ஞானம் உண்டு என்பதும் தெளிவாயிற்று. இனி சுழுத்தியில் உள்ள அஞ்ஞானமே மற்று இரண்டு சரீரங்களுக்கும் காரணமாகையால் காரண சரீரம் என்று தத்துவ நூல்களில் கூறியிருக்கிறது எனின் அந்த தத்துவநூல்களின் கருத்து அவ்வாறன்று. பின்னே எவ்வாறெனின் பிர்மத்தின் அபின்னாசக்தியே பரமாணு வடிவமாய் மற்றைய இரண்டு சரீரங்களுக்கும் காரணமாய் இருப்பதால் அதை காரண சரீரம் என்று கூறுகின்றது. அந்த பரமாணுக்களின் முடிவு காணமுடியாமல் இருப்பதால் அதே அஞ்ஞானம் அதாவது அறியமுடியாதன என்று வேதம் கூறுகின்றது. அந்த வாக்கியமே அஞ்ஞானம் என்று மறுவி வந்திருக்கக்கூடும். எனவே அந்த வாக்கியம் அறியாமையை குறிக்காது. அறியாமை எனினும் அஞ்ஞானம் எனினும் ஒரு பொருளையே குறிக்கும். பரமாணுக்களின் முடிவு ஏன் புலப்படவில்லை எனின் பழுதையில் தோன்றும் பாம்பைப்பற்றி ஆராயமுற்பட்டால் முடிவில் பழுதைதான் புலப்படுமே ஒழிய பாம்பு புலப்படாது. இதுபோல் பரமாணு வடிவமான காரண சரீரத்தைப்பற்றி ஆராய்ந்து பார்க்க முற்பட்டால் பிர்ம சொரூபமே புலப்படுமே ஒழிய பரமாணுக்களின் முடிவு புலப்படாது. எனவே அகண்ட சச்சிதானந்த பிர்மமே அபின்னா சக்திவாயிலாக காரண சரீரமாகவும் பின்னா சக்தி வாயிலாக தூல சூட்சும சரீரமாகவும் விளங்குவதால் மூன்று சரீரமும் பிர்ம சொரூபத்திற்கு அன்னியமாக இல்லை. பிர்ம சொரூபமாகவும் இல்லை என்பது அத்வைத சித்தாந்தமாம்.

இனி அறியாமையான அஞ்ஞானமே காரண சரீரமாம் என்று கூறுபவர்களைப் பார்த்து கீழ்வருமாறு கேட்கவேண்டும். குடத்திற்கு மண் உபாதான காரணமாம். அதுபோல் அஞ்ஞானமே

மற்று இரண்டு சரீரத்திற்கு உபாதான காரணமா? உபாதான காரணமாயின் காரணம் நீங்கினால் காரியம் இல்லை. எங்ஙனம் காரணமான மண்ணை நீக்கினால் காரியமான குடம் இல்லையோ அங்ஙனமே ஞானிகளுடைய சரீரத்திற்கு உபாதான காரணமான அஞ்ஞானம் நீங்கினால் அதன் காரியமான மற்று இரண்டு சரீரங்களும் இருக்கமுடியாதல்லவா? அஞ்ஞானம் நீங்கிய ஞானிகள் பலர் இருந்திருக்கிறார்கள்; இப்பொழுதும் இருக்கிறார்கள். நாம் எல்லோரும் அஞ்ஞானம் நீங்கிய ஞானிகளாகவே இருக்கிறோம். எனவே அஞ்ஞானமே உபாதான காரணம் என்பது பொருந்தாது பின் யாது காரணமோ? எனின் பரமாணுக்களேயாம் இதை அறிய வேண்டின் தஞ்சாவூர் குப்புசாமி ராஜூ அவர்கள் எழுதிய தத்துவமஸி மகாவாக்கியத்தில் காணலாம். அதாவது சாந்தோக்கிய உபநிடதத்தில் உத்தாலக முனிவர் தமது புத்திரனாகிய சுவேதகேதுவிற்கு தத்துவமஸி மகாவாக்கியத்தை ஒன்பது முறை உபதேசித்தார். அதன் ஐந்தாவது உபதேசத்தில் "சுவேத கேதுவை நோக்கி உத்தாலகர் ஆலமரத்தின் பழத்தை கொண்டு வா என்றார். சுவேதகேது கொண்டு வந்தேன் என்றார். உத்தாலகர் அந்த பழத்தை பிளந்து பார் என்றார். சுவேதகேது பழத்தை இரண்டாகப் பிளந்தான். உத்தாலகர் அதற்குள் என்ன காண்கின்றாய்? சுவேதகேது விதையைக் காண்கின்றேன். உத்தாலகர் அதில் ஒரு விதையை பிளந்து பார் என்றார். சுவேதகேது விதையை இரண்டாகப் பிளந்தான். உத்தாலகர் அதில் என்ன காண்கின்றாய்? சுவேதகேது ஒன்றும் காணவில்லை. உத்தாலகர் அப்படி ஒன்றும் தெரியாத அதில் நின்றுதான் இவ்வளவு பெரிய ஆலமரம் நிலைபெற்று இருக் கிறது என்றார். இதுபோல் அதி சூட்சுமமான ஜகத்காரணம் சத்துரூபமான பிரமமேதான் அது சத்தியமாம், அதுவே ஆத்மாவாம்" என்று கூறியிருப்பதால் காரண சரீரத்திற்கு உறையாக மறைக்கவில்லை என்பதும், அது பொருளற்ற தோற்ற மாத்திரமாக உடையது என்பதும் தேற்றமாம். பரமாணுக்களின் அவ்வியக்த நிலை அதாவது வெளிப்படாத நிலையே காரண சரீரமென்றும் வியக்த நிலையே, அதாவது பலவின் கூட்டமாய் வெளிப்படும் நிலையே தூல சூட்சும சரீரம் என்றும் கொள்ளவேண்டும். இவ்வாறான தோற்றம் பொருள் அற்ற கற்பனையேயாம் என்பதற்கு கைவல்யத்தில் ஒரு செய்யுளால் காணலாம்.

"காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென்றோதில்,
ஆரணம் பொய்சொல்லாதே யதன்பொருளகத்திலுய்த்துப்,
பூரண மாகுமென்மேற் புவனங்கதோற்ற மென்று,
தாரணை வந்ததாகிற் றரித்திடுமவித்தை யெங்கே"

*(171)*

இதன் பொருள்: பரிபூரண சொரூபமான தன்னிடத்தில் தேகாதி பிரபஞ்சம் பொருள் அற்ற வெறும் தோற்றமேயாம் என்ற நிச்சயம் வந்துவிட்டால் காரண சரீரம் இல்லையாம் என்பதாம்.

மற்றவை வெளிப்படை.

மற்றபடி எல்லா அன்பர்களுக்கும் எனது வணக்கமும் ஆசியும் உரித்தாகுக.

## இந்தக் கடிதத்தின் சாராம்சம்

1. பஞ்ச கோசங்களில் ஒன்றான ஆனந்தமய கோசம் அதாவது தலையணையை உறை மறைத்தாற்போல் மறைக்கவில்லை.
2. இருள் ஒளியை மறைக்காதது போல் ஆனந்தமயனான அறிவை அறியாமை என்னும் அஞ்ஞானம் மறைக்காது.
3. அறிதல், அறியாமை ஆகிய இரண்டும் அந்தக்கரணத்தின் புடப் பெயர்ச்சி ஆதலால் அவை இரண்டும் நனவில்தான் இருக்க வேண்டுமேயொழிய, சுழுத்தி அவஸ்தையில் இருக்கும் எனல் பொருந்தாது.
4. சுழுத்தியில் தோன்றும் சுகம் பிரமானந்தம் என்று கூறிவிட்டு அதில் அஞ்ஞானம் இருக்கிறது என்று கூறுவது பொருந்தாது. இதற்கு மேற்கோள் கைவல்யம் "தூங்கும் சுகமது பிரமசுகம் எனல் சுருதிப் பொருள்" இதன் பொருள் தூக்கத்தில் காணும் சுகமானது பிரமானந்தமாம் என்பது வேதத்தின் அபிப்பிராயமாம்.
5. சுழுத்தியில் சுகமாய் இருந்தேன் என்றும் ஒன்றும் தெரிய வில்லை என்றும் இரண்டு அபிப்பிராயம் எல்லோருக்கும் இருப்பதால் ஒன்றும் தெரியவில்லை என்பது அஞ்ஞானத்தை குறிக்காதோ? எனின் குறிக்காது. மேற்கோள் "வேதாந்த

சூடாமணியின் 98-வது செய்யுளில்'' ஏதும் அறியாமை நந்து சுகத்துறங்கினேன்எனற்கேது விடை ஞானம் இல்லாமையும் குடும்ப நிவர்த்தியுமாம் முறையே'' இதில் ஒன்றும் தெரிய வில்லை என்பதும் ஆனந்தமயனான தனக்கு அன்னியமாக விஷயங்கள் ஒன்றும் இல்லை என்பது பொருள்.

6. பரமாணுக்களை ஒன்று, இரண்டு, மூன்றாக பிளந்தால் பரமாணுக்களின் முடிவு பரிபூரண சொரூபமான பிரமமேயாம் என்பதற்கு புருஷார்த்தபோதினி என்ற நூலில் விளக்கம் காணலாம். இந்த முடிவேதான் அறியாமையை காரண சரீரம் என்று கூறியதேயொழிய வெறும் அறியாமையை காரண சரீரம் என்று கூறவில்லை.

7. இந்த பரமாணுக்கள் வடிவமான காரண சரீரம் பழுதையில் பாம்புபோல் பிரமத்திற்கு வேராகவும் இல்லை. பிரமமாகவு மில்லை என்பதற்கு பிரமாணம் ஞானவாசிட்டம் ஞானவின் மகன் கதை 39வது செய்யுள் ''நிர்விகற்ப ஆன்மாவில் ஜெகத்தோற்ற ஒடுக்கம் இவை நேராய் இல்லை'' என்று கூறி இருப்பதால் அறியலாம். ஆத்மாவின் அபின்னா சக்தியே பரமாணுக்களாகி காரண சரீரமாகவும் அதுவே பின்னாசக்தி வடிவமாகிதூல பஞ்சபூதமாகி அதன்காரணமாக தூல சூட்சும சரீரமாகவும் பழுதையில் பாம்புபோல் தோன்றி மறைகின்றது என்பது அத்வைத சித்தாந்தமாம்.

8. ஆலமரத்தின் விதையை பிளந்து பார்த்தபோது அதில் ஆலமரம் காணமுடியாது போனது போலும் ஆலமரம் தோன்றுவதற்கு காரணம் அதில் இருப்பதாக அனுமானித்து அறிவதுபோலும் பரமாணுக்களை பிளந்து பார்க்கும்போது தேகாதிபிரபஞ்சம் அதில் காணமுடியாது போனாலும் தோன்றுதற்கு அதில் காரணம் இருப்பதாக அனுமானித்து அறியவேண்டும். அந்தகாரணம் பிரத்தியட்சத்தில் (கண்கூடாக) அறியமுடியாததினால் அதை அறியாமை or அஞ்ஞானம் என்று புருஷார்த்த போதினி என்ற நூலில் கூறியிருக்கின்றது.

உங்களுடைய கேள்வி மிக ஆழமாய் இருப்பதால் அதற்கு பதில் எழுத ஆரம்பித்தபோது கடிதம் விரிந்துகொண்டே போய்விட்டது.

இக்கடிதத்தை ஒருமுறைக்கு இருமுறை படித்துப் பார்த்துவிட்டு உங்களுடைய அபிப்பிராயத்தை எழுதுவீர்கள் என நம்புகிறேன்.



## கடிதம் : 31 [9]

30-5-1975

எதைப்பற்றி எழுதுவது என்று யோசித்தபொழுது வசிஷ்ட மாமுனிவர் ராமனுக்குச் சொன்ன ஒரு கதை என் நினைவிற்கு வந்தது. அதாவது காதி வேதியன் என்பவன் "ஒருவன் குளிப்பதற்காக ஒரு குளத்தில் மூழ்கினான். அவன் சுவாசத்தை அடக்கி ஜலத்தில் நீண்ட நேரம் முழுகிக்கிடக்க பழகினவன் ஆதலால் ஜலத்தை விட்டு வெளியே தலையை எடுக்க ஒருமணி நேரம் ஆயிற்று. இந்த ஒருமணி நேரத்திற்குள் அவன் என்ன கண்டான் என்பதை கீழே பாருங்கள். ஜலத்தில் முழுகிக்கிடக்கும் காதி வேதியன் தன் வீட்டில் தான் வியாதியினால் பீடிக்கப்பட்டு மரணம் அடைந்ததாகவும் தாய், தந்தை, மனைவி, மக்கள் முதலியவர்கள் பக்கத்தில் சூழ்ந்து கொண்டு அலறிப்புடைத்து அழுது புலம்புவதாகவும் கண்டான். மேலும் தன் சரீரத்தை உறவினர்கள் நெருப்பு மூட்டி எரித்து சாம்பலாக்கிவிட்டதையும் கண்டான். மேலும், இந்தக் காதி வேதியன் பக்கத்து ஊரில் நாய் இறைச்சித் தின்பவர் குலத்தில் பிறந்ததாகவும் தக்க பருவ காலத்தில் அந்த குலப் பெண் ஒருத்தியை திருமணம் செய்து கொண்டதாகவும் பல பிள்ளை களைப் பெற்றதாகவும் தனக்கு முதுமைப்பருவம் வந்ததாகவும் அதுபோல் தன் குழந்தைகளுக்கும் வயோதிகப்பருவம் வந்துவிட்டதாகவும் கண்டான். மேலும் தன் மனைவி, மக்கள் மரணம் அடைந்துவிட்டதாகவும் கண்டான். மிக வருத்தத்துடன் தேசாந்திரம் நோக்கிப் புறப்பட்டுவிட்டான். பல ஊர்கள் சுற்றித்திரிந்தான். இப்படி சுற்றிவரும்போது ஒரு ஊரில் முக்கிய வீதியின் ஓரத்தில் நின்றான். அந்த ஊரை ஆண்டுவந்த அரசன் மரணமடைந்ததனால் மற்றொருவனை அரசனாக்க வேண்டுமென்று எண்ணி அந்த ஊர் மக்கள் ஒரு யானையின்

கையில் மலர்மாலை ஒன்று கொடுத்து மேளதாளத்துடன் ஊர்கோலம் ஒன்று வருவதைப் பார்த்தான். அந்த யானை யாருடைய கழுத்தில் மாலையைப் போடுகின்றதோ அவனே அரசனாக வேண்டும் என்பது விதியாகும். அந்த யானையானது இவன் கழுத்தில் மாலையைப் போட்டது. உடனே எல்லோரும் சேர்ந்து இவனைப் பல்லக்கில் ஏற்றிச்சென்று அரண்மனையில் முடிசூட்டு விழாவும் நடத்தினார்கள். இவன் பல ஆண்டுகள் அரசாண்டான். அந்த அரசு பரம்பரையில் உள்ளவர்கள் ஆகிய ஆண், பெண் எல்லோரும் இவன் நாய் இறைச்சித் தின்னும் குலத்தைச் சேர்ந்தவன் என்றும் அவனோடு உறவு வைத்துக் கொண்ட பாவம் தீராது என்றும் எண்ணி எல்லோரும் நெருப்பில் வீழ்ந்து மாண்டு போனார்கள். இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த அரசனும் நம்மால் இவர்கள் எல்லாம் மாண்டார்களே என்னும் துக்கத்தினால் நெருப்பில் வீழ்ந்தான். உடனே ஜலத்தில் முழுகிக்கிடந்த காதி வேதியன் துடிதுடித்து ஜலத்தைவிட்டு தலையை ஜலத்தின்மேல் தூக்கினான். ஒருமணி நேரத்திற்குள் இவ்வளவு காரியங்களும் நடை பெற்றிருப்பதைக் கண்ட காதி வேதியன் ஆச்சரியப்பட்டான். மேலும் இந்தக் காதி வேதியன் தனக்கு ஏற்பட்ட மரணமும் இழிகுலப்பிறப்பும், அந்த இழிகுலப் பெண் ஒருத்தியை மணந்ததும், அதன் விளைவாக ஏற்பட்ட குழந்தைகளும் அதனால் ஏற்பட்ட இன்ப துன்பங்களும் அவர்கள் பிரிவால் ஏற்பட்ட துன்பங்களும் அரசனாக இருந்து அனுபவித்த சுகமும், அவ்வரசகுலப் பெண்களால் ஏற்பட்ட மதனலீலை முதலிய நவரச இன்பங்களும் அவர்கள் அக்கினிப் பிரவேசத்தால் ஏற்பட்ட துன்பங்களும் ஆகிய இவை அனைத்தும் தானாகிய அறிவின்கண் கற்பனை எனக் கண்டான் காதி வேதியன். காதி வேதியன்கண்டது நனவில்கனவு போன்ற ஒரு அவஸ்தையாகும். கனவில்தோன்றிய ஜனன மரண சுகதுக்காதிகள் முதலியவைகளை அறிந்த அறிவில் அந்த சுகதுக்காதிகள் எங்ஙனம் இல்லையோ அங்ஙனமே இந்த நனவில் நாம் அனுபவிக்கும் ஜனன மரண சுகதுக்காதிகள் அதை அறிந்த அறிவில் இல்லை என்பது பசுமரத்தாணிபோல் உறுதியாம். ஆனால் அறிவை அன்றியும் இல்லை என்பதும் நிச்சயமல்லவா? அறிவு இங்ஙனமாயதோ?

இல்லவே இல்லை ஆகையால் அறிவின் முக்கால இருப்புக்கு அன்வயம் என்று பெயர். சுகதுக்காதிகளின் இன்மைக்கு வெதிரேகம் என்று பெயர். இந்த அன்வய வெதிரேக யுக்தியை விசார சந்திரோதயத்தில் காணலாம். சுக துக்காதிகள் அறிவில் கற்பித குணமே ஒழிய சொரூபகுணம் அன்று. சொரூபகுணமாயின் குணியை விட்டு நீங்காது. நீங்கின் முதல் இல்லாமல் போகும். எங்ஙனம் வேப்பிலைக்கு கசப்பு சொரூபகுணம். கசப்பு நீங்கினால் வேப்பிலை இல்லை. அதுபோல் எனக்கொள்க.

கனவில் அனுபவித்த சுக துக்கம் நனவில் கற்பிதமாகி ஒழிந்து போவதோடு அதையறிந்த அறிவும் போய்விடுமானால் நனவில் சுகதுக்கத்தை அறியும் அறிவான முதல் இல்லாமல் போய்விடுமே. சிந்தித்துப் பாருங்கள். எனவே தானாகிய அறிவுக்கு எப்பொழுதும் அன்வயமான இருப்பு இருக்கிறது. குணம் - குணி; பண்பு - பண்பி என்பது ஒரு பொருளையே குறிக்கும். காதி வேதியனுக்குண்டான இன்ப துன்ப அனுபவம் நனவில் முற்றும் பொய்யானது போல் இந்த நனவில் தோன்றும் இன்ப துன்ப அனுபவங்கள் யாவும் அறிவை நோக்கில் பொய்யாய்ப் போகும் என்பதில் ஐயம் இல்லை. மற்றபடி எல்லா அன்பர்கட்கும் எனது ஆசி உரித்தாகுக.

ஓம்

## கடிதம்: 32 [10]

*30-6-1975*

நிற்க, பௌர்ணமி தோறும் நடைபெறும் உங்கள் மன்றத்தில் வரும் குழுவினர்கள் அனைவரும் ஆத்மாவைப் பற்றியே பேசவேண்டும். சித்து சொரூபத்தைப் பற்றியும் ஜட சொரூபத்தைப் பற்றியும் பேசச் சொல்ல வேண்டும். மற்று பேச்சுக்களுக்கு இடம் கொடுக்கக்கூடாது. நீங்கள் எடுத்துக் கூறும் 'சித்து' 'ஜட' ஆராய்ச்சி நண்பர் முத்தாசாரி அவர்களுக்கு நன்கு பயன்பட்டிருக்கும் என்று நினைக்கிறேன். அதனால்தான் அவர் உங்களுடன் ஒத்துழைக்கிறார் என்பதற்கு ஐயம் இல்லை.

உங்களுடைய நிஜ சொரூபமான ஆத்மா ஐவகை இலக்கியங்களும் சொரூபமாகப் பெற்றுள்ளது. ஐவகை

இலக்கணமும் உண்டு. இலக்கியம் என்றாலும் லக்ஷ்யம் என்றாலும் ஒரு பொருளையே குறிக்கும் இலக்கணம் என்றாலும் லக்ஷ்ணம் என்றாலும் ஒரு பொருளையே குறிக்கும். இதில் சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணம் ஆகிய ஐந்தும் ஆத்மாவின் இலக்கியமாகும். அதாவது லக்ஷ்யம் ஆகும். அசத்து, ஜடம், துக்கம், அநித்யம், கண்டம் என்பன ஐந்தும் இலக்கணமாகும். அதாவது லக்ஷ்ணம் ஆகும். இதில் ஆத்மாவின் சத்து என்னும் இலக்கியத்தால் அசத்து என்னும் இலக்கணம் விளங்குகின்றது அதாவது முக்காலத்தும் இல்லாததான நாமரூப பொருள்கள் பழுதையில் பாம்புபோல தோன்றுவதால் அதை அசத்து எனப்படும். இனி ஆத்மாவின் சித்து என்னும் இலக்கியத்தால் ஜடம் என்னும் இலக்கணம் விளங்குகின்றது. இதில் தேகாதி பிரபஞ்சம் ஜடம் எனப்படும். இனி ஆத்மாவின் ஆனந்தம் என்னும் இலக்கியத்தால் துக்கம் என்னும் இலக்கணம் விளங்குகின்றது. ஆத்மாவின் நித்தியம் என்னும் இலக்கியத்தால் அநித்தியம் என்னும் இலக்கணம் விளங்குகின்றது. இதில் மாறுபாடு எய்தும் தன்மையுடையது அநித்தியம் என்றும், மாறுபாடு அடையாத தன்மை உடையது நித்தியம் என்றும் கொள்க.

இனி ஆத்மாவின் பூரணம் என்னும் இலக்கியத்தால் கண்டம் என்னும் இலக்கணம் விளங்குகின்றது. இதில் நாம் காணும் ஒவ்வொரு பொருள்களும் தனித்தனிப் பொருள்களாக அதாவது பன்மை, ஒருமைகளில் ஒருமைப் பொருளாக கருதுவது கண்டம் எனப்படும். இதுவே வேதாந்தத்தின் ஐவகை இலக்கிய இலக்கணம் ஆகும். மற்றும் உள்ள இலக்கிய இலக்கணம் எல்லாம் தத்தம் பாஷைக்கு உரியதாகும். இந்த பாஷைக்கு உரிய இலக்கிய இலக்கணம் கற்றுணர்வது உண்மை ஞானம் ஆகாது. ஆத்மாவின் சத்துத்தன்மை முதலிய ஐவகை இலக்கிய இலக்கணத்தை அறிவதே உண்மை ஞானம் ஆகும். இதை அறிய வேண்டின் கோ. வடிவேல் செட்டியார் அவர்கள் எழுதிய சசிவர்ண போத உரை நூலில் 50-வது பக்கத்தில் "இயற்றமிழின் இயல்பை அறிவது, இசைத்தமிழின் இயல்பை அறிவது, நாடகத்தமிழின் இயல்பை அறிவது ஆகிய முத்தமிழையும் அறியும் அறிவு அயலை அறியும் அறிவாம்.

அது ஆத்மாவை அறியும் அறிவாகாது. ஆத்மாவை அறியும் அறிவே உண்மையாம். மேலும் 64 கலைகளை அறியும் அறிவும் உண்மை ஞானம் ஆகாது. மேலும் கன்ம காண்ட மயமான வேதம் முதலிய சாஸ்திரங்களை கற்றுணர்வதும் உண்மை ஞானம் ஆகாது. மேலும் ஆத்மாவாகிய தனக்கு வேறான அநாத்ம பொருள்களை அறியும் அறிவும் உண்மை ஞானம் ஆகாது'' என்றும் கூறியிருப்பதால், ஆத்மாவின் ஐவகை இலக்கிய இலக்கணத்தை அறிவதே உண்மை ஞானம் ஆகும் என்பதற்கு ஐயம் இல்லை. இனி அந்த ஆத்மா, நனவு, கனவு, உறக்கம் ஆகிய மூன்று காலத்தும் மாறுதல் அடையாமல் இருப்பதால் சத்து எனப்படும். ஜட வஸ்துக்களை எல்லாம் விளக்கிக் கொண்டிருப்பதால் சித்து எனப்படும். (இதில் வனிதாதி என்பது பெண்களைக் குறிக்கும்). வனிதாதி விஷயங்களை எல்லாம் ஆனந்தமாக்குவதால் ஆனந்தம் எனப்படும். மூன்று காலத்தும் அழிவுபாடு எய்தாமையால் நித்தியம் எனப்படும். ஆத்மாவுக்கு வேராக காரிய காரண முறைப்படி ஒரு பொருளும் இன்மையால் பூரணம் எனப்படும். இவ்வாறான பரிபூரண சொரூபமான ஆத்மாவே உங்கள் நிஜ சொரூபமாகும். இனி ஆத்மா ஆனந்தரூபம் அல்லவெனில் விஷய சம்பந்தத்தால் யாதொரு ஆனந்தானுபவம் உண்டாகின்றதோ அது சொரூபானந்தமேயாம். ஏனெனில் விஷயத்தில் ஆனந்தம் இல்லை இனி இந்த ஆத்மாவே விஷயானந்தங்களின் கர்த்தாவும் போக்தாவும் ஆகும். இதை ஆத்ம புராணம் 45-வது பக்கத்தில் ''எல்லா ஜடவஸ்துக்களும் சேதனமாய ஆன்மாவின் சுகசாதனமாம். ஜடவஸ்து ஜடத்தின் சுகசாதனம் அன்றாம். ஆகையால் போகத்தின் முயற்சி வடிவ போக்தா ஆத்மாவாம். போகரூப தொழிலின் கர்த்தாவும் ஆத்மாவாம்'' என்று கூறி இருப்பதால் அறியலாம்.

இந்த ஆத்மாவின் சத்து, சித்து முதலிய இலக்கியம் அக்கினிக்கு சூடும், ஒளியும் சொரூபகுணமாக விளங்குவது போல், ஆத்மாவுக்கு சொரூப குணமாம். இத்தகைய ஐந்து இலக்கியமும் சொரூபகுணமாக பெற்றுள்ள உங்களுக்கும் ஐவகை இலக்கியங்களுக்கும் உள்ள தொடர்பு எவ்வாறாம் என்று விளக்கிக் கூறும்படி ஒவ்வொரு நண்பர்களுக்கும்

சொல்லவேண்டும். அப்படி அவர்கள் அதை துருவித் துருவி ஆராய்ந்து பழகுமேயானால் சத்து முதலிய ஐந்து இலக்கிய சொரூபமாக இன்புற்று வாழ்வார்கள்.



## கடிதம் : 33 [11]

*27-8-1975*

பேரன்பு மிக்க டாக்டர் T. முத்து அவர்களுக்கு விரும்புவது நலம். நலமறிய அவா. நான் வேதாரண்யத்தில் நடைபெற்ற ஒரு திருமணத்திற்கு போயிருந்தேன். மீண்டும் ஆவணி மாதம் 18-ஆம் தேதி வேலூரில் R. ஆவணி அவர்களின் இல்லத்தில் நடைபெற இருக்கும் திருமணத்தில் கலந்துகொள்ளப் போகிறேன். உங்கள் கடிதத்தில் 8 வித விவாகத்தைப்பற்றி குறிப்பிட்டிருந்தீர்கள்.

**8 வகை விவாகத்தின் பெயர்கள்:-**

1. பிரம்மம்
2. தெய்வதம்
3. ஆருஷம்
4. பிரஜாபத்தியம்
5. ஆதுரம்
6. காந்தர்வம்
7. ராக்ஷஷம்
8. பைசாஸம்

இதில் பிரம்மமாவது:- மதுரையில் சோமசுந்தர கடவுளுக்கும் மீனாட்சி அம்மையாருக்கும் அகஸ்தியமாமுனிவர் தலைமையில் மாலை மாற்றிக்கொண்டது. இது கன்னியாதான முறையாகும்.

தெய்வதமாவது:- கௌதமபுத்திரனாகிய ரிஷ்யஸிருங்கருக்கும் அரசகுமாரியான சாந்தைக்கும் கௌதம முனிவர் தலைமையில் மாலை மாற்றிக்கொண்டது.

ஆருஷமாவது:- பண்டமாற்று முறைபோல் பெண்ணைக் கொடுத்து அதற்கு ஈடாக மற்றொரு பொருளை பெற்றுக் கொள்ளுதல்.

பிரஜாபத்தியமாவது:- சீதைக்கும் ராமனுக்கும் யாஞ்ஞுவல்கியர் தலைமையில் பாணிக்கிரகணம் அதாவது பெண்ணின் கையைப்பிடித்து மணமகன் கையில் கொடுப்பது.

ஆதுரமாவது:- மச்சகந்திக்கும் சந்தனு மகாராஜாவுக்கும் கலைக்கோட்டு மகரிஷியின் தலைமையில் மாலை மாற்றிக் கொண்டது.

காந்தர்வமாவது:- துஷ்யந்த மகாராஜாவுக்கும் சகுந்தலைக்கும் கௌதம முனிவருடைய ஆசிரமத்தில் மோதிரம் மாற்றிக்கொண்டது. இந்த மோதிரத்தில் அவருடைய பெயர் பொறிக்கப்பட்டிருக்கும்.

ராக்ஷஷமாவது:- கண்ணபிரானுக்கும் ருக்மணிக்கும் சாந்தீப முனிவர் தலைமையில் மாலை மாற்றிக்கொண்டது.

பைசாஸமாவது:- அர்ச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் கண்ணபிரான் தலைமையில் மாலை மாற்றிக்கொண்டது. சுபத்திரையை அர்ச்சுனன் பலாத்காரமாக தூக்கிக்கொண்டு போன கதை பாரதத்தில் காணலாம். இவை எட்டு முறைகளிலும் சடங்குகள் ஒன்றும் நடைபெற்றதாக காணப்படவில்லை. சடங்குகள் நடைபெற்றதாக ஆதாரப்பூர்வமாக யாராவது சொன்னால் அதில் நமக்கு ஆட்சேபணை இல்லை.

9-வது பதிவுத் திருமணம்.

10-வது பிரம்மவித்யா திருமணம்:- இது நான் முன் சொன்ன பிரம்மம் என்ற பெயரால் நடைபெறுகிறது. இதில்தான் பேரின்பத்தின் விளக்கம் சொற்பொழிவின் வாயிலாக விளக்கிக் கூறப்படுகிறது. இந்த பிரம்ம வித்யா திருமணமே எல்லாத் திருமணங்களிலும் சாலச் சிறந்ததாகும்.

மற்றபடி எல்லா அன்பர்களுக்கும் எனது ஆசியும் வணக்கமும் உரித்தாகுக.



# கடிதம் : 34 [12]

*15-12-1976*

நிற்க, முன் கடிதத்தில் அறிவு நித்தியப் பொருள் என்பதை உறுதிப்படுத்தி எழுதியிருந்தேன். அதைப்பற்றி இப்பொழுதும் சிறிதளவு எழுதுகின்றேன். அறிவு நித்தியப் பொருள் என்பதற்கு வேதாந்தத்தில் நான்கு பிரமாணங்கள் ஒப்புக்கொண்டுள்ளது. பிரமாணம் என்பது அளவு. அதாவது சீர்தூக்கிக் காட்டும் முறையைக் குறிக்கும். மேல்கூறிய பிரமாணங்களின் பெயர் களாவன:- (1) பிரத்தியட்சம் (2) அனுமானம் (3) உபமானம் (4) சப்தம் என்பனவாகும். இந்த நான்கில் ஒன்றைமட்டும் இங்கே காண்பிக்கின்றேன். மற்றவைகளைப் பற்றி இப்போது எழுதவில்லை. அதாவது அனுமானப் பிரமாணத்தைப்பற்றி மட்டும் கூறுகின்றேன் கேளுங்கள். அனுமானப் பிரமாணம் என்பது மூன்று அங்கம் உடையது. அதாவது (1) பிரதிக்ஞை, (2) ஏது, (3) திருஷ்டாந்தம் இந்த மூன்றும் ஒத்துவரவேண்டும், எங்கே ஒத்து வருகின்றது பாருங்கள். ஜடப்பொருள் அநித்தியம் என்பது பிரதிக்ஞை. ஆண்டுளோர்க்கு திரிசியமாய் இருத்தலால் ஏது. யாது யாது திரிசியமோ அது அது கடம் போல் அநித்தியம் என்பது திருஷ்டாந்தம். இப்பொழுது ஜடப்பொருள்கள் அநித்தியம் என்பதற்கு மூன்று அங்கமும், ஒத்து இருப்பதைக் காண்க. இதனால் ஜடப்பொருள் அநித்தியம் என்பதும் அறிவு நித்தியம் என்பதும் பசுமரத்தாணிபோல் உறுதியாயிற்று என்க. இதில் அறிபடு பொருள் என்பது திரிசியம் என்பதைக் குறிக்கும் மேலும் அறிபடுபொருள் அநித்தியமாம் என்பது சகல சாஸ்திர சம்மதமாம். இனி ஜடப்பொருளில் இருந்து அறிவு உற்பத்தியாகி ஜடப்பொருள் அழிவதுபோல் அறிவும் அழிந்துபோகும் என்று சிலர் சொல்லுகிறார்களே எனின் அவர்களிடம் கீழ்வருமாறு கேளுங்கள், அறிவும் ஜடமும் தற்கிழமைப் பொருளா? அல்லது பிறிதின் கிழமைப் பொருளா? அதாவது அபேதப் பொருளா? அல்லது பேதப்பொருளா? இதற்கு விடை அபேதப் பொருள் எனின் அபேதத்தில் இரண்டு பொருள் இன்மையால் முற்றும் அறிவாகவேப் போகும். போகுமானால் ஜடப்பொருள் என்ற பேச்சுக்கே இடமில்லை. இனி அறிவும் ஜடமும் பேதப்

பொருளெனின் பேதப்பொருள் இரண்டு என்னும் தொகைக்கு உட்பட்டு அறிவு ஒரு பொருளும் ஜடம் ஒரு பொருளும் ஆக இரண்டு பொருளாய்ப் போகும். போகுமானால் அறிவின்றி ஜடப்பொருள்கள் விஷய சுகத்தை அறிந்து அனுபவிப்பது எங்ஙனம் கூடும்? கூடாது. ஆகையால் அறிவு சகல ஜடப்பொருள் களையும் தன்மயமாக்கி சுகத்தை அனுபவிக்கிறது எனக் கொள்க.

இனி ஜடப் பொருளில் இருந்தும் அறிவு உற்பத்தியாகு மாகில் அறிவுக்கு ஜடப்பொருள் காரணமாகும். ஆகுமானால் காரியத்தின் அம்சம் காரணத்திலும் இருக்கவேண்டும் என்னும் நியாயத்தால் ஜடப் பொருள்களை அணுவணுவாக சோதனை செய்து பார்த்தால் அதில் அறிவைக் காணமுடியுமா? முடியா தல்லவா, இதனால் அனுமானப் பிரமாணத்தின் மூன்று அங்கமும், அநித்தியப் பொருள்களுக்கு ஒத்து வருவதைக் காண்க. எனவே அறிவு உற்பத்தி நாசம் இன்றிய நித்தியப் பொருளாம். அதுவே உங்கள் நிஜ சொரூபமாம். சில அன்பர்களுக்கு அனுமானப் பிரமாணத்தில் கூறிய விஷயம் விளங்காமல் போகலாம். அங்ஙனமாயின் ஸ்ரீலஸ்ரீ வித்தியானந்தகிரி சுவாமி அவர்கள் அங்கு வரும்போது அவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். மேலும் ஜடப்பொருளில் இச்சை, ஞானம், முயற்சி ஆகியவைகளைக் காணமுடியுமா என்று நான் கண்ட உண்மையில் விஞ்ஞானிகளைக் கேட்டிருக்கிறார் ஸ்ரீ சௌந்தரராஜப் பிரமம். இதையும் இங்கே கவனிக்கத்தக்கது.

நிற்க, திருவாரூர், S. நாராயணசாமி செட்டியார் அவர்கள் அங்கு வந்தார்களா? என்பது பற்றி உடனே எழுத வேண்டு கிறேன். இரண்டு மாத காலமாக அவரைக் காணவில்லை என்ற செய்தி வந்திருக்கிறது.

அறிவு நித்தியப் பொருள் என்பதற்கு மேற்கோளாக சிவரகசியத்தில் உள்ள ரிபுகீதையின் முதல் அத்தியாயத்தில் 37-வது செய்யுளை இங்கே பாருங்கள்.

**"அறிவுருவா யமைவுற்ற வான்மா தானே**
**யழியாம லிருப்பதனாற் சத்து மாகும்**
**அறிவுருவா யமைவுற்ற வான்மா தானே**
**யனைத்தையுமே விளக்குவதாற் சித்து மாகும்**

அறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
யகிலர்க்கும் பிரியமதாற் சுகமு மாகும்
அறிவுருவா யமைவுற்ற வான்மா தானே
யந்தமிலா திருப்பதனா லானந்தமாமே."

இதன் பொருள் வெளிப்படை.



## கடிதம் : 35 [13]

28-9-1977

பேரன்பின் மிக்க டாக்டர்T. முத்து அவர்கட்கு விரும்புவது நலம். நலம் அறிய அவா. நிற்க, அபேத நிலையில் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது உடல்நிலை நலமாக இருக்கிறது. இதுபோல் உங்கள் உடல் நலத்தையும் கருதுகிறேன். மேலும் நலமாகயிருக்க சொரூபத்தை வாழ்த்துகிறேன். திரு. செல்வன் (Babu) பாபுவுக்கு திருமணம் நடைபெறப் போவதாக அறிந்து மகிழ்ச்சி அடைந்தேன். அத்துடன் ஆண்டு விழாவும் நடத்துவது நல்லதுதான். ஆனால் வேதாந்தத்தின் கருத்தறியாது 100-க்கு 99 பேரும் ஏமாந்து போனார்கள். ராஜயோகம் என்று சொன்னவுடன் அதன் உட்பொருள் தெரியாமல் 100-க்கு 100-ம் ஏமாந்து போனார்கள். இதோ ராஜயோகம் எட்டுக்கும் உட்கருத்தைப் பாருங்கள். ராஜயோகம் என்பது எட்டு அங்கம் உடையது. அதாவது 1. இயமம், 2. நியமம், 3. ஆசனம், 4. பிராணாயாமம், 5. பிரத்தியாகாரம், 6. தாரணை, 7. தியானம், 8. சமாதி இந்த எட்டையும் சேர்த்து ராஜயோகம் எனப்படும். இதன் ஒவ்வொன்றுக்கும் உட்பொருளை கீழே காண்பிக்கிறேன்.

1. இயமமாவது: சர்வம் பிரமம் என்னும் ஞானமாம்.
2. நியமமாவது: காரிய காரணப்படி அசேதனப் பொருள்களும் சேதனமாகக் காணுதலாம்.
3. ஆசனமாவது: பிரம்ம சொரூபமாகிய இடமாம்.

4. பிராணாயாமமாவது: ரேசக பூரக கும்பகம் எனும் பேதத்தால் மூன்று பிரிவாய் இருக்கும். அதில் ரேசகமாவது அனாத்மா வாகிய ஜட தத்துவங்களை நியதி செய்தல். பூரகமாவது சேடித்த பிர்மம் தன் சொரூபமாக அறிதல். கும்பகமாவது எப்பொழுதும் தான் பிரம்ம சொரூபமாக நிலைத்தல்.

5. பிரத்தியாகாரமாவது: சகல விஷயானந்தங்களும் தன் சொரூபானந்தமே எனக்காணுதல்.

6. தாரணையாவது: மனம் சென்ற இடமெல்லாம் பிரம்மத்தைக் காணுதல்.

7. தியானமாவது: தன் யதார்த்த சொரூபம் பிரம்மமாய் இருப்பதைச் சிந்தித்துப் பார்த்தல்.

8. சமாதியாவது: சகஜ நிஷ்டை அல்லது சொஸ்சொரூப ஸ்திதி ஆகிய இவை எட்டும் சேர்ந்தது ராஜயோகம் எனப்படும்.

சுவாமி விவேகானந்தர் எழுதிய ராஜயோகம் என்ற நூலின் கருத்தும் இதுவேயாகும். இந்த எட்டுக்கும் வெளிஉரை சாதாரண மக்களுக்காக எழுதப்பட்டுள்ளது. அதனால் அந்த விளக்கம் இங்கே எழுதப்படவில்லை. மேலும் இந்த விளக்கம் விசார சாகரத்தில் காணலாம். யோகம் அல்லது யோகிகள் என்ற சொல்லைக் கேட்டதும் பிராணவாயுவோடு போராடி மூச்சை அடக்க முற்பட்டனர் பலர். இவர்கள் தம் நிழலோடு போராடுபவர்களுக்கு ஒப்பாவர். யோகிகள் என்பது விசார ஞானிகளுக்கு உரிய பெயராகும். இதை பகவத் கீதையின் ஐந்தாவது அத்தியாயத்தின் 5, 6 ஸ்லோகங்களில் காணலாம். ''உண்டு உடுத்து உலகத்தவர் போல் பற்றற்று இருப்பர் கண்டீர் உண்மை ஞானிகள்'' என்ற ஆன்றோர் வாக்கியமும் இதை உறுதிப்படுத்தும். இந்த ராஜயோகத்தின் உண்மைக் கருத்துக்களை உங்கள் சங்கத்து நண்பர்களுக்கு அறிவிக்க வேண்டும் என்ற நோக்கத்தால் இவ்வாறு எழுதினேன். மற்றபடி எல்லா நண்பர்கட்கும் எனது ஆசி உரித்தாகுக.



# கடிதம் : 36 [14]

*5-7-1978*

சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தில் சிருட்டிக்கு முன் சத்ரூப பிரமமே இருந்தது என்று கூறுவதற்கு உபக்கிரமம் என்று பெயர். அந்தப் பிரமத்தில் இருந்து பழுதையில் பாம்பு போல் கற்பனையாக தோன்றிய ஜகஜீவபரம் என்னும் தோற்றத்தை அந்தப் பிரமத்தில் விசார முகத்தால் ஒடுக்கி காண்பது உபசம்காரம் என்றும் சொல்லப்பட்டு இருப்பதை வேதாந்த விற்பன்னர்கள் யாவரும் அறிந்ததில் ஒன்றாகும்.

சிருட்டிக்கு முன் சத்தாகவே இருந்த பிரமம் சிருட்டிக்குப் பின் அசத்தாய்விட்டதா? இல்லையே! மண் குடமாதற்கு முன்னும் பின்னும் இடைநின்ற காலத்தும் மண்ணாகத்தானே இருக்கிறது. அதுபோல் சிருட்டிக்கு முன்னும் பின்னும் இடை நின்ற காலத்தும் சத்துரூபமாகிய பிரம சொரூபம் யாவர்க்கும் வாஸ்தவ சொரூபமாகி இருப்பதை அறியாமல் அதை தேடி அலைவது யாது காரணமோ அறியேன். அதிலும் தனக் குள்ளேயே தேடுவது ஓரளவு பொருந்தும். அதை விட்டுவிட்டு வெளிமுகத்தில் தேடுவதற்கு காரணம் யாதாயிருக்கலாம் என்று பல பேர்கள் பலவிதமாக கூறியும் எழுதியும் வந்தார்கள். இந்த ஐயப்பாட்டிற்கு தக்க சமாதானம் வேதத்திற்குப் பொருத்தமாக விசாரசாகரக்காரர் தம் விசாரசாகரத்தின் நாலாந்தரங்கத்தில் கூறிவிட்டார். அது யாதோ எனின் அதுதான் பிராந்தி. அதாவது பைத்தியம் என்பது ஆகும். இந்த பிராந்தி நீக்கமே வேதாந்தத்தின் முடிவாகும் என்று சுவாமி விவேகானந்தர் கூறியிருக்கிறார். இனி சிருட்டிக்கு முன் சத்ரூபமாக இருந்தது என்று கூறும்போது சிருட்டி ஒரு காலத்தில் தோன்றி பிறிதொரு காலத்தில் அழியும் என்று பொருளாகும். அங்ஙனமாயின் சிருட்டிக்கப்பட்ட பொருள் அனாதி என்று சொல்லும் வேதத்திற்கு விரோதமாகும். உற்பத்தி நாசம் இல்லாதது எதுவோ அது அனாதி எனப்படும். ஆகையால் சிருட்டி என்பதற்கு பிரமமாகிய காரணத்தைவிட தனிப்பொருள் இல்லை. எங்ஙனம் குடம் என்னும் சொல்லுக்கு மண்ணைத்தவிர வேறு பொருள் அன்றோ அங்ஙனமே சிருட்டிப் பொருள் பிரம்மத்தைத் தவிர

வேறில்லை. இதை அஜாதவாதம் என்று விசாரசாகரக்காரர் கூறுவர். மேலும் சிருட்டிப் பொருள் காரியமா? அல்லது காரணமா? காரியம் என்றே கூறவேண்டும். அங்ஙனமாயின் காரியம் பொய்யென்பது வேதசம்மதமாம். காரணத்தின்கண் காரியம்; சொல்லும் தோற்றமுமே ஒழிய அதற்கு காரணத்தை விட தனிப்பொருள் அன்று என்பது சிதையாத சித்தாந்தமாம். எங்ஙனம் குடம் என்னும் சொல்லுக்கு தோற்றமும் சொல்லுமே ஒழிய குடமென்பதற்கு பொருள் மண்ணைத்தவிர அன்று என்பது தேற்றமாம். இவ்வாறு ஆராய்ந்து பார்க்கும்போது சிருட்டிக்கு முன் சத்தாக இருந்த பிரம்மம் சிருட்டிக்குப் பின்னும் இடைநின்ற காலத்தும் சத்தாகவே இருப்பதால் அதற்கு ஒரு மாறுதலும் இன்றி எப்பொழுதும் ஒரு தன்மைத்தாய் இருப்பதால் அந்தப் பிரம்ம சொரூபமே நம் வாஸ்தவ சொரூபமாக நாம் உணரும்போது பிராந்தி நீங்கிவிடுகின்றது. இந்த பிராந்தி நீக்கமே பேரின்பம் அல்லது ஜீவன் முக்தி நிலையாம். இந்த பிராந்தி நீக்கத்துக்கு தன்னை விசாரித்து அறிவதைத் தவிர வேறு வழியில்லை. எந்த மருத்துவமனையிலும் இதற்கு மருந்து இல்லை. ஆனால் திரு. டாக்டர் T.முத்து அவர்களின் மருத்துவமனையில் பிராந்தி நீக்கத்திற்கு மருந்து இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். பணிவன்புடன் அவரை வணங்கி ஒரு அவுன்ஸ் வாங்கி சாப்பிடுவீர்கள் ஆனால் ஜனன மரண துக்கமும், ஆண்டான் அடிமைப் பித்தும், பந்த மோட்ச பிராந்தியும் ஒழிந்து போகும். போகுமானால் மிச்சமிருப்பது பிரம்மமாகிய சொரூபானந்தமேயாம். நாம் அதுவாக ஜீவன் முக்தர்களாக வாழலாம்.

காரியம் பொய் என்பதற்கு சென்னை மாநகரம் சை. ரெத்தின சற்குரு அவர்களால் எழுதிய தத்துவவாதம் என்னும் நூலில் காணலாம். சிருட்டி அநாதி என்பதற்கு கைவல்யம் தத்துவ விளக்கப்படலம்20-வது செய்யுளில் "அனாதியாம்ஜீவரெல்லாம்" என்று கூறியிருப்பதே போதுமான சான்று. மேலும் சிருட்டிப் பொருள்அனாதி என்பதற்கு விசாரசாகரம் இரண்டாம்தரங்கத்தில் பிரம்மம் ஈஸ்வரன் ஜீவன் அவித்தை, அவித்தைக்கும் சைதன்யத்திற்கும் உள்ள சம்பந்தம் அனாதி வஸ்துக்களின் பேதம் ஆகிய ஆறும் அனாதியாம் என்று கூறியிருப்பதை உணர்க.

இனி சிருட்டிக்கு ஜீவர்களின் அந்தக்கரண வாசனைகள் காரணம் எனின் மரம் முன் இருந்ததா? அல்லது விதை முன் இருந்ததா என்ற பீஜாங்குர நியாயம்போல் எல்லாப் பிறப்புக்கும் முன்வாசனை இருந்ததா? அல்லது அந்த வாசனைகளை ஏற்றுக்கொண்ட மனம் முதலிய கருவிகள் இருந்ததா? என்பது பொருந்தவில்லை. ஆகையால் வேத உபநிஷத்துக்கள் எல்லாம் இவ்வாறு கூறியிருக்க அதைப் புறக்கணித்து சிருட்டியைக் கற்பனை என்று உணராமல், அதை ஆதாரமாகக் கொண்ட வரலாறுகளும் அந்த வரலாறுகளை அடிப்படையாகக்கொண்டு ஆற்றிய செயல்களும் ஆகிய இவை அனைத்தும் ஆகாயத்தில் தளவாடம் இன்றிக் கட்டிய கோட்டைக்கு ஒப்பாகும். மேலும் சிருட்டிப் பொருள் அனாதி என்பதற்கு அனுபவானந்த தீபிகை வசனம் 137-ம் பக்கத்தில், ''நனவில் காணும் சூட்சும தேகம் கனவில் தூல தேகத்தில் அடங்குவதும் சுழுத்தியில் காரண தேகத்தில் ஒடுங்குவதும் அனுபவமாயிருக்க இந்த சூட்சும தேகம் தனித்து உயிரோடும் பிராணாதி அந்தக் கரணங்களோடும் சென்று சுகதுக்கத்தை அடையும் என்று கூறுவது சதுர்மறையின் அடிப்படைக்கு விரோதமாம் ஏனெனில் அதாவது சூட்சும சரீரம் அனாதியாகையால், மேலும் அத்வைத உண்மை 25-வது செய்யுளில்,

''தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்வேதாந்த
விசாரணையில்
ஊன்றி நோக்கியனுதினமும் யூகமதனிற் பரிசயித்தால்
தோன்றி விளங்கு மறிவொன்றே சொன்மாத்திரமாய்
விடுமுலகம்
ஊன்றி நோக்காதவர்கட்கே யுளதுபோலத் தோன்றியிடும்''



## கடிதம் 37 [15]

*17-10-1978*

நிற்க, பிரம ஞானிகளுக்கு தேகாதி பிரபஞ்சம் சோபாதீகமே ஒழிய நிருபாதீகம் அன்று. சோபாதீகம் என்றால்

பொய்யென்று நிச்சயித்தபின்பும் தோன்றிக் கொண்டிருத்தல். நிருபாதீகம் என்றால் முற்றும் தோன்றாமையைக் குறிக்கும். எனவே ஞானிகளுக்கு தேகாதி பிரபஞ்சம்மித்தையாக தோன்றிக் கொண்டே இருக்கும். குருசந்நிதானத்தில் செய்யும் வேதாந்த விசாரணையினால் தேகாதிப் பிரபஞ்சம் பொய்யென்று ஐயம் திரிபு அற தெரிந்த பின்பும் அந்த தேகாதி பிரபஞ்சம் தோன்றிக் கொண்டும் அனுபவத்திற்கு வந்துகொண்டும் இருக்கும். ஆனால் ஞானிகளுக்கு அதில் சத்திய புத்தியில்லை, மாறாக மித்தியா புத்தியுடன் பழகுகின்றான்; அனுபவிக்கின்றான். இனி இவ்வாறாக சோபாதீகத்திற்கு உபமானம் யாதோவெனின் ஒரு கிணற்றில் பார்க்கும்போது தான் தலைகீழாக நிற்பதாக தன்னை கண்டாலும் அந்தத் தோற்றம் பொய்யென்றும் தான் நேராகத்தான் நிற்கிறோம் என்றும் அறிந்த பின்னும் தான் தலைகீழாக நிற்பதாகத் தோன்றினும் அதில் சத்திய புத்தி ஞானிக்கு உண்டாவதில்லை. மாறாக மித்தியா புத்தியுடன் சகலமும் அறிகிறான் அனுபவிக்கின்றான். இந்த நிலை அஞ்ஞானிகளால் அறிய முடிகிறதில்லை. இனி கிணற்றில் தன்னை தலைகீழாக தோன்றும் தோற்றம் வெறும் தோற்றமே யொழிய புலன்களுக்கு அனுபவத்திற்கு வருவதில்லை. தேகாதி பிரபஞ்சமும் அதனால் ஏற்படுகின்ற சுக துக்கங்களும் நமது புலன்களுக்கு அனுபவமாய் இருப்பதால் அதை எப்படி பொய் என்று சொல்லலாம் எனின்? சொல்லலாம். எப்படி யெனில்? ஒரு அரசன் தான் இழிகுலத்தில் பிறந்ததாகவும், பருவ காலத்தில் இழிகுல மங்கை ஒருத்தியை மணந்து கொண்ட தாகவும், தனக்கு அனேக குழந்தைகள் பிறந்ததாகவும், பிறகு மனைவியும் குழந்தைகளும் வறுமையால் வருந்தி இறந்து போனதாகவும், அந்த துக்கம் தாங்காமல் தான் அக்கினி பிரவேசம் செய்ததாகவும் கனவு கண்டான். அவ்வாறு கண்ட சுகதுக்க அனுபவம் நனவில் அவன் சத்தியமாக கருதுவானா? கருதமாட்டான். ஏன் எனில் கனவில் கண்ட மனைவியுடன் இன்பத்தை நுகர்ந்த அனுபவம்; அனுபவம்தானே? பின் அந்த மனைவியும் குழந்தைகளும் இறந்துபோனதினால் ஏற்பட்ட

துக்கமும் அனுபவம்தானே? அந்த அனுபவம் இல்லையெனில் அவர்கள் இறந்தபோது அழுதது ஏன்? விழித்தவுடன் கண்ணில் தண்ணீர் அதாவது கண்ணீர் காணப்படுகின்றதோ அப்பொழுது அழுதது உண்மைதான் என்பதில் ஐயமில்லை.

மேலும் ஒருவன் தனக்குப் பிரியமான காதலியுடன் கனவில் உடல் உறவு கொண்டதாக கண்டு அதனால் வீரியம் அதாவது இந்திரியம் வெளிப்பட்டதாக உணர்கிறான். விழித்துப் பார்த்தபோது வேஷ்டியில் வீரியம் காணப்படுகிறது. இப்பொழுது அவன் அனுபவித்த சிற்றின்பம் பொய்யா? அல்லது மெய்யா? பொய்யானால் வீரியம் காணக்கூடாது. மெய்யானால் அந்த காதலி ஒப்புக்கொள்ளமாட்டாள். இந்நிலையில் முடிவு யாதோ வெனின் இத்தகைய அனுபவத்தோடுகூடிய நிகழ்ச்சிகள் யாவும் அநிர்வசனீயம் என்று வேதம் கூறுகின்றது. அநிர்வசனீயம் என்றால் அனுபவத்தோடு கூடிய தோற்றங்கள் பொய் என்பதாம். தேகாதிப் பிரபஞ்சமும் அதனால் வரும் சுகதுக்கங்களும் அனுபவத்தோடு கூடியதாய் இருந்தபோதிலும் அவைகள் பொய்யென்று ஞானிகள் அறிகிறார்கள். தன் ஆத்மாவாகிய பிரமம் ஒன்றே உண்மை என்றும், அதுவே தன் சொரூப சுகத்தை தேகாதிப் பிரபஞ்சத்தின் வாயிலாக அனுபவிக்கின்றது என்றும் அந்த ஞானிகள் அறிகின்றார்கள். இந்த நிச்சயத்தால் ஞானியானவன் தனக்குரிய மனைவி மக்கள் முதலிய அத்தனைபேர்களும் இப்பொழுது இறந்துபோனாலும் தனக் குரிய பொருள்கள் அனைத்தும் நாசமானாலும் தனதுடம்பில் உள்ள மூன்றரைக்கோடி ரோமங்களில் ஒரு ரோமம் போனதற்கு சமானமானதாகக்கூட கருதமாட்டான் என்பது உறுதியாம்.

இக்காரணம் பற்றி அன்றோ பகவத்கீதையின் 18-வது அத்தியாயத்தின் 17-வது சுலோகத்தில் ''தன்னை பிரம்ம சொரூபமாக அறிந்த ஞானியானவன் இந்த உலகத்தையெல்லாம் கொன்றாலும் கொன்றவனாக மாட்டான், பந்தப்படவும் மாட்டான்'' என்று கூறியிருப்பதை அறிக. இதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் கூறியிருக்கும் உபமானத்தைப் பாருங்கள். ''கண்ணாடியில் ஒருவனுடைய பிம்பம் தோன்றி

ஆடுகின்றது. அந்த தோற்றத்திற்கும் ஆட்டத்திற்கும் கர்த்தா கண்ணாடியன்று. அந்த பிரதிபிம்பம் கண்ணாடியில் பதிந்து விடுவதும் இல்லை. அதுபோல் ஒரு ஞானியின் விவகாரத்தில் அவன் கர்த்தாவாகிறது இல்லை. ஆகாமையினால் பந்தமும் அவனைப் பற்றுகிறதில்லை'' மேலும் வித்தியாரண்ய சுவாமிகள் எழுதிய பஞ்சதசி இரண்டாம் புத்தகம் வித்தியானந்தம் 1, 2, 4, 7 பக்கத்தில் ''இந்த ஞானிக்கு பாபம்

தாய் வதையினாலும் இல்லை, திருட்டினாலும் இல்லை, கர்ப்பம் அழித்தல் அல்லது சிசுவதையினாலும் இல்லை, மற்று செயல்களினாலும் இல்லை என்று கூறியிருப்பதை பார்க்கும்போது ஞானியின் நிச்சயத்திற்கு ஈடுயிணை ஏது?

எனவே ஞானியானவன் தனது ஆத்ம சொரூபசுகமே அனைத்துமாம் என அறிந்து மயக்கம் நீங்கி வாழ்கிறான். அது போல் நீங்களும் அதாவது உங்கள் மாணவர்களும் வாழ்வீர்களாக. தேகாதிப் பிரபஞ்சம் தோன்றிக்கொண்டிருக்கும்போதே பிரம்ம சொரூபமாக நிலைத்தல் ஜீவன் முக்தியாம். இதை பஞ்சதசி, கீதை முதலிய வாக்கியத்தில் காணும் இரகசியம் யாதோவெனின் ஒரு ஞானியானவன் எல்லாமாய் விளங்கு வதால் அவன் கொலை முதலிய தீமைகள் செய்யமாட்டான். செய்தால் தனக்கே தான் தீமைசெய்ததாகுமென்பது இதன் பொருளாக கொள்க, எனவே ஞானிகளின் உள்ளத்தில் இருப்பது பிரம்மாநந்தமே ஒழிய வேறொன்றும் இல்லை. உதாரணமாக எதிரிகள் இல்லாத ஏக சக்ராதிபதியாகிய அரசனது உள்ளத்திலும் குழந்தைகளின் உள்ளத்திலும் மகிழ்ச்சி மட்டும் இருப்பது போல் எனக்கொள்க.

பந்த மோட்சங்களைப்பற்றி அவர்கள் சிந்திப்பதில்லை. பந்த மோட்சம் உண்டு என்று பலர் சொன்னால் நகைப்பார்கள். எதுபோல் எனின் ஒரு கொசு ஆகாயத்தை விழுங்கிப் பின் கக்கிவிட்டது என்று சொன்னால் யார்தான் சிரிக்கமாட்டார்கள். பந்தம் என்பது பிராந்தியின் விளைவேயாகும். எங்ஙனம் எனின் ஒரு சத்திரத்திற்கு இரண்டு பேர் பகலில் போனார்கள்.

அதில் ஒருவன் படுத்துத் தூங்கினான். மற்றொருவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். அப்போது தூங்கினவன் ஒரு கனவு கண்டான். அந்தக் கனவில் ஒரு திருடன் தன் கழுத்தை நெருக்கி, அமுக்கிப் பிடித்ததாகக் கண்டு அலறியழுதான். உடனே பக்கத்திலிருந்தவன் இது என்ன பைத்தியம் என்று கூறிச் சிரித்தான். இதுபோல் பந்தத்தை சத்தியமாக கருதி யவர்களின் பிராந்தியைப் பார்த்து ஞானிகள் சிரிக்கிறார்கள்.

இந்தக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ள ஞானிகளின் நிச்சயத்தைப் பற்றி உங்கள் மாணவர்களுக்கு விளக்கிக் கூறவேண்டும்.

மற்றபடி எல்லா அன்பர்களுக்கும் எனது ஆசி உரித்தாகுக.



## கடிதம்: 38 [16]

*18-12-1978*

டாக்டர் T. முத்து அவர்களுக்கு விரும்புவது நலம். நலமறிய அவா. நிற்க இந்த பூவுலகத்தில் தோன்றிய மக்களுள் சிறந்த மாபெரும் பேரறிவாளர்கள் ஆற்றிய அரும்பெரும் முயற்சியின் பயனாக கண்டுபிடிக்கப்பட்டுள்ள பொருள்கள் இரண்டு விதமாய் இருக்கின்றது. அதில் ஒன்று பேரறிவுப் பொருள், மற்றொன்று அறிவற்ற ஜடப்பொருள். இந்த இரண்டுப் பொருள்களில் அறிவும், அறிவின் சமஷ்டியும் சேர்த்து ஆத்மா என்றும், கடவுள் என்றும், பிரம்மம் என்றும், சேதனம் என்றும், சித்து என்றும் இன்னும் பல பெயர்களால் அழைக்கப்படு கின்றது. பஞ்சபூதமும் அதன் காரியமான உடம்பும் அதிலுள்ள உறுப்புக்களும் ஜடம் அல்லது அசத்து என்றும் சொல்லப்படு கின்றது. இதில் முன்கூறிய ஆத்மாவே பகவான் என்ற சொல்லுக்கு பொருளாகும். அல்லது கடவுள் என்ற சொல்லுக்கும் அதுவே பொருளாகும். இதை ஞான வாசிட்டம் சுரகு கதையில் 29-வது பாட்டில் "பகவான் ஆகும் இவ்வான்ம தத்துவம் பரமமாம்" என்று கூறியிருப்பதால் அறியலாம்.

இதில் பரமமாம் என்பது மேலானதாகும் என்பது பொருள். இனி ஆத்மா சித்தாய் அதாவது அறிவாய் நிற்கும் என்பதற்கும், உடம்பு ஜடமாய் நிற்கும் என்பதற்கும் மேற்கோள் தமிழுக்கு இலக்கணம் கூறவந்த நன்னூலின் உயிரியல் பத்தாவது சூத்திரத்தின் உரையில் உயிர் சித்தாயும் உடம்பு ஜடமாயும் நிற்கும் என்று கூறியிருப்பதை காணலாம். ஜடமாகிய உடம்பில் சித்தாகிய ஆன்மாவின் பிரகாசம் ஏற்படுகின்றபோது நான், எனது, என்ற எண்ணங்கள் உண்டாகின்றது. அவற்றுள் ஒன்றை நினைப்பதற்கு மனம் என்றும், யோசிப்பதற்கு சித்தம் என்றும் நிச்சயிப்பதற்கு புத்தி என்றும் இப்படி வரலாமா என்று வேகப்படுவதற்கு அகங்காரம் என்றும் கூறப்படும். ஆக இந்த நாலும் சேர்ந்து மனம் என்று பெயர்ப்படும். இந்த மனம் தனக்கு அன்னியமான சகல பொருள்களையும் அனுபவித்துக்கொண்டு இருப்பதற்கு விஷயானந்தம் அல்லது சிற்றின்பம் என்று பெயர்பெறும். இதுபோல்தனக்குஅன்னியமானபொருள்களைஅனுபவிப்பது பேரின்பம் ஆகுமா? ஆகாது! சிந்திக்கவேண்டும்.

மனம் வாயுவின் அம்சமாகும் வாயு எப்படி ஜடமோ அப்படி மனமும் ஜடமாக வேண்டும். எந்த ஆத்மாவாகிய அறிவின் பிரகாசம் ஜடமாகிய மனதின்கண் ஏற்படுகின்றதோ அப்போது மனம் சித்துரூபமாக அதாவது அறிவு சொரூபமாக விளங்குகிறது. அந்த ஆத்மாவை தன் நிஜ சொரூபமாக தக்கார்பால் கேட்டு உணரும்போது அதுவே பேரின்பமாகும். ஏனெனில் மனதின்கண் விளங்கும் சேதனம் உற்பத்தி நாச ரகித நித்திய ஆனந்த நிர அதிசய பொருளாம். ஆதலால் அதன் வடிவம் பேரானந்தமாம். இவ்வாறாக மனம் என்ற சொல்லுக்கு சேதன பாகமும் ஜடபாகமுமாக இரண்டு அம்சங்கள் உண்டு. இதில் ஜடபாகம் கற்பனை என தள்ளிவிட்டு, சேதனபாகம் நித்தியம் எனக்கொள்ள வேண்டும். குடத்தில் தோன்றும் ஆகாயமும் வெளியில் தோன்றும் ஆகாயமும் ஒன்றாய் இருப்பதுபோல், ஒருவனுடைய மனதில் விளங்கும் அறிவும், சகல மனிதர்களுடைய அறிவும் சமஷ்டி, வியஷ்டி அதாவது பன்மை ஒருமை பேதத்தால் ஒன்றேயாகும்.

இதனால் இந்த அறிவை நிறைபொருள் என்றும் பேரறிவு என்றும் வேதம் கூறுகின்றது. ''சித்தம் அறியாதபடி சித்தத்தின் நின்று இலங்கும் திவ்ய தேஜோமயத்தை என்றும் சித்தம் மிசை குடிகொண்ட அறிவான தெய்வமே என்றும் மனதற்ற பரிசுத்த நிலை அருள்வாய்'' என்றும் தாயுமான சுவாமிகள் கூறியிருப்பதன் பொருள் இந்த அறிவே ஆகும். எனவே அறிவுக்கு தெய்வத்தன்மை கூறப்பட்டிருக்கிறது. சுழுத்தியில் உள்ள ஆனந்தமும் இந்த அறிவும் ஒன்றேயாகும். அறிவும் உடம்பும் ஒன்று சேருகின்றபோது எண்ணங்கள் உண்டாகின்றன. இந்த எண்ணங்களில் ஒன்று நான் என்பது. இந்த நான் கற்பிதமே ஒழிய உண்மையல்ல. இந்த நான் உடம்பிலுமில்லை. இருக்கு மானால் பிணமானபோது இருக்கவேண்டுமே. அங்ஙனமில்லை. இனி அறிவிலும் நான் என்பது இல்லை. இருந்தால் சுழுத்தியிலும் இருக்கவேண்டுமே, அங்குமில்லையே, ஏனெனில் சுழுத்தியிலும் அறிவு இருக்கிறது. நான் என்பது இல்லை.

சுழுத்தியில் அறிவு இல்லாது போனால் நனவில் நான் சுகமாய் தூங்கினேன் என்ற ஞாபகம் வரமுடியாது அல்லவா? வருவதால் அங்கு அறிவு இருக்கிறது. நான் என்பதில்லை. இந்த நான் அத்தியாசம் அதாவது கற்பனையாகும். அதை அறியவேண்டுமேயானால் திருவண்ணாமலை ரமணசுவாமிகள் ஆங்கிலத்தில் எழுதிய நான் யார்? என்ற புத்தகத்தைப் படித்துப் பாருங்கள். இவ்வாறாக கற்பனையான நான் என்பதே ஜீவன் என்பதாகும், இந்த ஜீவன் எல்லாவித கற்பனா சிருஷ்டிகளையும் செய்கின்றது. இந்த ஜீவனுடைய சிருஷ்டியே துன்பத்திற்கும் ஜனன மரணத்திற்கும் காரணமாகும். உதாரணமாக பூமி ஈஸ்வர சிருஷ்டி, வீடு, மடம், கோவில் போன்றவைகள் ஜீவசிருஷ்டி. தங்கம் ஈஸ்வரசிருஷ்டி; ஆபரணங்கள் ஜீவசிருஷ்டி, பஞ்சு ஈஸ்வரசிருஷ்டி; ஆடைகள் ஜீவ சிருஷ்டி. மரம் ஈஸ்வர சிருஷ்டி, டேபிள், நாற்காலி முதலியன ஜீவ சிருஷ்டி, இரும்பு ஈஸ்வர சிருஷ்டி, ஆயுதங்கள் ஜீவ சிருஷ்டி. இதேபோல் மனிதன் ஈஸ்வர சிருஷ்டி; ஆசை, கோபம், லோபம், மதம், மாச்சரியம், அகந்தை, அபிமானம், தற்பெருமை, இவைகள் ஜீவ சிருஷ்டி, ஈஸ்வர சிருஷ்டியான அன்னம், பழம், காய்கறிகள்

உண்டு ஆத்ம விசாரம் செய்து மோட்சம் அடைவதற்கு சாதகமாய் இருக்கிறது. ஜீவசிருஷ்டி ஜனன, மரணத்தை உண்டுபண்ணுவதாய் இருக்கிறது.*

இப்படிக்கு
**வாசுதேவானந்த சுவாமிகள்**
ஆனந்தாஸ்ரமம்
நாங்கூர்.

திரு. T. முத்து அவர்களுக்கு எழுதிய தபால் இத்துடன் முற்றுப்பெற்றது.



பிர்மமே சத்யம்
அதுவே நித்யம்

## கடிதம்: 39 [1]

*10-8-1974*

நாங்கூர் ஆனந்தாஸ்ரமத் தலைவர்
சுவாமி வாசுதேவானந்தா அவர்கள்
மருதவனம்
சுவாமி ஆத்மானந்தா அவர்களுக்கு எழுதிய

# ஆத்மஞான அனுபவ நிருபம்

பேரன்புமிக்க ஆத்மானந்தா அவர்களுக்கு விரும்புவது நலம். நலமறிய அவா. நிற்க தாங்கள் 8-8-74-ல் எழுதிய கடிதம் கிடைக்கப்பெற்றேன். திரு. பொன்னுதுரை பிள்ளை அவர்களுக்கும் மற்றுமுள்ள நண்பர்களுக்கும் எனது ஆசியை தெரிவிக்கவும். அரக்கோணத்தில் நடைபெற்ற திருமணம் சிறப்பாக நடந்தேறியது. நீங்கள் வராமல் இருந்த குறைதான் பாக்கி. நீங்கள் பேசவேண்டிய "உண்மை சந்நியாசம்" என்பதை நானே பேசி விளக்கி முடித்து விட்டேன். திரும்பி

* இதன் விளக்கம்: இந்நூலின் 13-வது கடிதத்தினை பார்க்கவும்.

வரும் வழியில் வேதாரண்யத்திற்கு போன நான் உடல் நலமில்லாமல் உடனே திரும்பி நாங்கூருக்கு வந்து சேர்ந்து விட்டேன். அதனால் உங்களை சந்திக்க முடியவில்லை. நிற்க உங்கள் தபாலை கவனித்து படித்துப் பார்த்தேன். அதில் நிருவிகர்ப்பசமாதியைப் பற்றிகூறும்நூல்களின்தாற்பரியத்தைக் குறிப்பிட்டு கேட்டிருந்தீர்கள். ஆனால் உங்கள் எதார்த்த சொரூபநிலையில் உங்களுக்கு ஐயப்பாடில்லை என்றும் எழுதியிருந்தீர்கள். அதுவரைக்கும் மகிழ்ச்சி அடைகிறேன். நூல்களில் வரும் சொற்களுக்கு இரண்டுவித உரைநடைகள் உண்டு. அதில் ஒன்று வெளி உரை, மற்றது உள் உரை எனப்படும். இது தெரியாமல் வேதாந்தம் படித்தவர்களும் குழப்பத்தை அடைகிறார்கள். தக்கார்பால் கேட்டு தெளிவு பெற்றவர்களுக்கே உள்ளுரை விளங்கும். (உ-ம்) ஞானவாசிட்டத்தில் இருந்தே ஒரு செய்யுளை காட்டுகிறேன். தேவபூஜை க்கதை 30-வது பாட்டில்

''அனைத்தான பூஜையினும் அங்கத்தை சுடுதலே அமலமாகும்''

இதற்கு ஸ்ரீ வீர சுப்பையா சுவாமிகள் உரையில் ''சகல பூஜைகளிலும் தேகத்தை தெகித்தலே நிர்மலமாகும்''. இது வெளி உரையாகும். இதன்படி தேகத்தை நெருப்பில் சுட்டு விடுவது மேலான பூஜை ஆகுமா? இதன் பதார்த்த உரையில் சரீரத்தை நான் என்னும் நினைவை விடுதலே மிகுந்த பூஜையாகும். இதுதான் உள்ளுரை. இதுபோல் ''நிருவிகர்ப்ப சமாதி'' என்று கூறும்போது இரண்டுவித உரைநடைகள் கொள்ள வேண்டும். அந்தக் கரணம் காற்றில்லாத விளக்குபோல் நிற்க வேண்டும். அல்லது பிரம்மத்தில் இரண்டறக் கலந்துவிட வேண்டும் என்று கொள்வது வெளி உரையாகும். ''ஞானிக்கு விவகாரவேளையெல்லாம் சமாதியாம்'' என்று கொள்ளுவது உள்ளுரையாகும். விஷய போகத்திலும் ஞானிக்கு சமாதி சித்திக்கிறது என்று விசாரசாகரம் கூறி இருப்பதை இங்கு உய்த்துணர்ந்து கொள்க! இதை வாசிட்டம், சுப்பையா சுவாமிகள் உரை 1079 பக்கத்தில் ''தத்துவத்தை உணர்ந்தவன் எப்பொழுதும்சமாதியில் இருப்பவனாயும் விவகரிப்பவனாயும் இருப்பான் என்றும் ஞானிக்கு அனவரதம் சமாதியேயாம் என்றும் கூறி இருப்பதை காண்க!''

மேலும் நிருவிகர்பம் என்பது ஒரு காலத்து ஏற்படுவது அன்று. ஏற்படுமானால் அது பிறிதொரு காலத்தில் பிரிந்து போகும். இதை ''புணர்ந்தன பிரியும், பிரிந்தன புணரும்'' என்று பட்டினத்து சுவாமிகளும் ''கூடுதலுடன் பிரிதலற்று'' என்று தாயுமான சுவாமிகளும், ''தோன்றுவதெல்லாம் அசத்து'' என்று தேவிகாலோத்திரத்தில் சிவபெருமானும் கூறி இருப்பதை யூகித்து உணர்க. இனி நிருவிகர்ப்பத்திற்கு விளக்கம் கூறுமிடத்தில் வாசிட்டம் சுப்பையா சுவாமி உரை 1951-வது பக்கத்தில் ''கேயூராதிகளில் கனகம் என்னும் ஏக புத்தி உடையவன் நிருவிகர்ப்பர் என்பர்.''

இதன் பொருள் ஆபரணங்கள் யாவும் சத்தியம் என்பது விகர்ப்பம். பணிகளனைத்தும் ஒரே தங்கமே என்று காணுவது நிருவிகர்ப்பம். இது உபமானம். உபமேயத்தில் ஜகஜீவபரம் சத்தியமாக காண்பது விகர்ப்பம். அவைகள் பிர்ம சொரூபமான தன் வடிவமே என காணுதல் நிருவிகர்ப்பம். ஜெகஜீவபர கற்பனை எதார்த்தமாக காணுதல் வெளி உரை. தன் வடிவமாக காணுதல் உள்ளுரை. இதில் ஐயம் என்ன? மேலும் வாசிட்டத்தில் 'நனவில் சுழுத்தி நிலைமேவி' என்ற செய்யுளுக்கு சுப்பையா சுவாமிகள் உரை 1726 பக்கத்தில் ''நனவில் ஜாக்கரத்தில் சுழுத்திநிலைமேவி - நிருவிகார சித்தனாய் கர்மங்களை செய்வாயாக'' என்று கூறியிருப்பதை காண்க! இதில் சுழுத்தி என்பதற்கு நிருவிகார சித்தனாய் கர்மங்களை செய்க என்பது உள்ளுரையாகும். மூட சுழுத்தியைப் போன்று அந்தக்கரணம் ஒடுங்கி பழக வேண்டும் என்பது வெளி உரையாகும்.

சுகபிரம்ம ரிஷி 1000 வருடம் நிருவிகர்ப்ப சமாதியில் இருந்தார் என்று வாசிட்டம் கூறுவதெல்லாம் வெளி உரையாகும். அது யுக்தி அனுபவத்திற்கு ஒத்துவராது. வெளி உரை ஏன் கூறவேண்டும் எனின், ஞானிகளின் வாழ்க்கையில் பொதுமக்களுக்கு ஓர் அற்புதங்கள் தோன்ற வேண்டும் என்பதற்காக அவ்வாறு கூறுகின்றது. இதற்கு பெயர் ஸ்துதி அர்த்த வாதமாம். இதை கோ. வடிவேல் செட்டியார் கைவல்யம் உரை 104-வது பக்கத்தில் ''ஞானியானவனுடைய தூல சரீரம் பிணமாக விழக்கூடாது என்றும், சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரமான் பெருமான், காரைக்கால் அம்மையார் முதலியோர்

தூல சரீரத்தோடு முக்தி அடைந்தார்கள் என்று கூறுவதெல்லாம் ஸ்துதி அர்த்த வாதமாகவும், நகுலீச பாசுபத மதத்தின் கொள்கையாகவும் கூறியதே ஒழிய அவை சித்தாந்தம் அல்ல''

என்று கூறி இருப்பதே போதுமான சான்றாகும். அர்த்தவாதமாக கூறியதை உள்ளுரையாக கொள்ளலாமா? அது யுக்தி அனுபவத்திற்கு ஒத்துவராதது என உணர்க!

எப்பொழுதும் நிருவிகர்ப்பனாயிருக்கும் சச்சிதானந்த சொரூபமாகிய தான் வருங்காலத்தில் நிருவிகர்ப்ப நிலையை அடையவேண்டும் என்று நினைப்பது அஸிபதத்தின் அர்த்தம் அறியாதவர்கள் என்பதற்கு ஐயமில்லை. ஏனென்றால் அஸிபதம் வருங்காலத்தை குறிக்குமா? அல்லது நிகழ்காலத்தை குறிக்குமா? நிகழ்காலத்தை குறிக்கும் எனின் ஏன்? வருங்காலத்தில் ஏற்படும் நிருவிகர்ப்ப சமாதியை எதிர்பார்க்க வேண்டும். எனவே சகஜ சமாதியில் இருந்துகொண்டு சகல விவகாரமும் செய்யுங்கள்.

''காண்பவையெல்லாம் சொப்பனம் போல் எண்ணித் துணிந்தவன் ஞானியாவான்.'' இனி நிருவிகர்ப்ப சமாதியில் அந்தக்கரணம் பிரம்மத்தில் லயமாகுமா? எனின் ஆகாது. அந்தக் கரணம் தத்தம் உபாதான காரணமான பஞ்சதன்மாத்திரையில் லயமாகுமேயொழிய பிரமத்தில் லயமாகாது. ஆகும் என்று கூறுவது உபசாரீகமாம் இதை கோ. வடிவேல் செட்டியார் கைவல்ய உரை 106-வது பக்கத்தில் ''சூட்சும சரீரம் சுத்த சேதனத்தில் லயமடையாது அடைவதாககூறுவது உபசாரீகமாம்'' என்று கூறி இருப்பதால் அறியலாம். எனவே அந்தக்கரணம் சூட்சும சரீரத்தின் ஒரு பகுதி அல்லவா! அது எப்படி? பிரமத்தில் லயமாகும் என்று வினாவி விடுக!

இக்கடித்ததின் சாராம்சம் என்னவென்றால் நிருவிகர்ப்ப சமாதி பழகி அதனால் அந்தக்கரணம், பிரமத்தில் லயமாக வேண்டும் or இரண்டற கலக்க வேண்டும் என்பது வெளி உரையாகும். எப்பொழுதும் பிரம்ம சொரூபமாகிய தான் முக்காலத்தும் நிருவிகர்ப்பன் என ஐயந் திரிபு அற உணர்ந்து செயலாற்றுவது உள்ளுரையாகும். பிரமத்தில் நின்று நேராக சிருஷ்டி வேதங்கள் சொல்லவில்லை. அப்படி இருக்க சிருஷ்டி பொருளான அந்தக்கரணம் எப்படி பிரமத்தில் லயமாகும்?

ஆகாது. இதை ஞான வாசிட்டம் 'ஞான விண் மகன் கதை' 34-வது பாட்டில் ''நிருவிகர்ப்ப ஆன்மாவில் ஜக தோற்ற ஒடுக்கம் இவை நேராய் இல்லை'' என்று கூறி இருப்பதால் பிரமத்தில் நின்று அந்தக்கரணம் உண்டாகவில்லை. இக்காரணம் பற்றி தத்துவ நூல்கள் பஞ்சதன் மாத்திரையாகிய சூட்சும பூதங்களில் நின்றும், சூட்சும சரீரம் உண்டாயிற்று என்று கூறியிருப்பதை காணலாம். அவைகள் தத்தம் காரணத்தில் லயமாகுமே தவிர, பிரமத்தில் லயமாகாது என்பது சிதையாத சித்தாந்தமாம்.

இனி ஒருமுறை 'நிருவிகர்ப்ப சமாதியில்' இருந்து பிரமானந்தத்தை அனுபவித்தவர்களுக்கு அல்லவா விவகாரத்தில் சமாதி கூடும் எனின் அது பொருந்தாது. பிரமானந்தத்தை அனுபவித்தது அறிந்தா? அறியாமலா? அறிந்து அனுபவித்தது எனின் அறிபடுபொருள் அஸத்து என்ற வேதவாக்கியத்திற்கு விரோதமாம்.

இனி அறியாமல் அனுபவித்தது எனின் அப்போது அனுபவித்தது தனக்கு தெரியாது என்பதாயிற்று. இனி ஆத்மா தன்னைத்தானே அனுபவித்தது எனின் அதுவும் பொருந்தாது. இதை பஞ்சதசி 1-வது புத்தகம் 201-வது பக்கத்தில் ''ஆத்மா தானே அனுபவம் என்னும் நித்திய ஞானவடிவமாய் இருத்தலால் அதற்கு அனுபவிக்கப்படும் தன்மை இல்லை. ஆத்மாவுக்கு அன்னியமாக ஞாதாவாகிய அறிபவனும் ஞானமாகிய அறிவும் இல்லாமையால் ஆத்மா தனக்குத்தானே அறிபடு பொருளாயிடுதல் கூடாது'' என்றும் பஞ்சதசி 1241-வது பக்கத்தில் ''ஞான வடிவ ஆத்மாவிற்கு வேறாய் சுகத்தின் சொரூபம் காணப்படாமையின் லௌகீக சுகம் அனைத்தும் ஆத்ம சுகமேயாம்'' என்று கூறி இருப்பதால் பிரமானந்தத்தை அனுபவித்தல் பொருந்தாது. மேலும் இவ்வாறே கைவல்யம் ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரை 165-வது பக்கத்தில் ''வெல்லத்திற்கு மதுர சுபாவம் எப்படியோ அப்படியே ஆன்மாவிற்கும் அனுபவ விஷயத்தன்மை வேண்டாவாகி தானே அனுபவ ரூபமாம்''. இதனால் தன்னை எதிரிட்டு அனுபவிக்கும் தன்மை இல்லையாயிற்று.

இனி பிரம்ம சொரூபத்தை தியானம் பண்ணி பிரமம் ஆகுவேன் எனின் அதுவும் பொருந்தாது. எப்படி எனில்

தியானிக்கப்படும் பொருளும் தியானிப்பவனும் தானே ஆதல் ஆத்மா ஆஸ்ரய தோஷமாம். பிர்மமாகிய தான் தனக்கே அறிபடு பொருளாயிடுதல் கூடாது. கூடும் எனின் அது ஆத்மா ஆஸ்ரய தோஷமாம். மேலும் வாசிட்டம் ஜனகராஜன் கதை 10-வது செய்யுளில் "அறிவானும் அறிபொருளும் கூடிய கூட்டுறவில் எழும் அறிவானந்தம் பிரியாத ஆத்மா தத்துவத்தில் எழுந்ததால் அதனை பேணல் செய்வோம்" என்று கூறி இருப்பதால் 'அறிவே ஆனந்தமாம்' 'ஆனந்தமே அறிவாம்' இங்ஙனம் இருக்க இந்த அறிவு தனக்குமேல் ஒரு ஆனந்தம் தேடவேண்டியது இல்லை. தேடுமானால் அது ஐவகை பிராந்தியில் சேர்ந்ததாகும்.

மற்றபடி எல்லா அன்பர்களுக்கும் எனது ஆசியை தெரிவிக்கவும். இந்த கடிதத்தை மீண்டும் மீண்டும் படித்துப் பார்த்து உங்கள் அபிப்பிராயத்தை எழுதுவீர்கள் என நம்புகிறேன்.

இப்படிக்கு,

ஸ்ரீ வாசுதேவானந்த சுவாமிகள்



## எது ஆனந்த வாழ்க்கை

### என்ற நூலுக்கு

# மதிப்புரை

எது ஆனந்த வாழ்க்கை என்ற கேள்விக்குறியை தலையங்கமாக தாங்கி வெளிவந்துள்ள இந்த சிறிய புத்தகத்தை துருவித்துருவி ஆராய்ந்து பார்க்குமிடத்தில் பலவிதமான ஆனந்த வாழ்க்கைகள் உண்டு என்று புலனாகிறது. அதில் எது துக்கமற்ற ஆனந்த வாழ்க்கை என்ற கேள்விக்கு இடம் தருகின்றது. காரணம் என்னவென்றால் எல்லாவிதமான வாழ்க்கையிலும் போகசாதனப் பொருள்களின் கூட்டுறவின்றி ஆனந்தம் உண்டாகாது என்பது பலருடைய அபிப்பிராயம் ஆகும். போகசாதனப் பொருள்களின்றியும் ஆனந்தம் உண்டு என்பது சிலருடைய அபிப்பிராயம் ஆகும். போகசாதனப் பொருள்கள் அதிகமாக சேர்த்து அனுபவிப்பவர்களுக்கும் கொஞ்சமாக சேர்த்து அனுபவிப்பவர்களுக்கும் ஆனந்தம் சமமாக உண்டு.

ஆனால் போகசாதனப் பொருள்கள் அதிகமாக சேர்த்து அனுபவிக்கும்காலத்தில் தோன்றும் ஆனந்தம் முன்பு சுகமாகவும் பின்பு துக்கமாகவும் காணப்படுவது உலகப் பிரசித்தமாம். உதாரணமாக அதிக போகசாதனப் பொருள்களை சேர்த்துவைத்து அனுபவிக்கும் ஒரு நண்பரைப் பார்த்து நீங்கள் ஆனந்தமாக இருக்கிறீர்களா? என்று கேட்டால் இல்லை ரொம்பவும் துக்கமாக இருக்கிறது. காரணம் என்னவென்றால் என் மனைவி என்னை அலட்சியமாக நினைக்கிறாள், பேசுகிறாள், பிள்ளைகள் சொன்னபடி கேட்பதில்லை, மாமியாருக்கும், மருமகளுக்கும் ஓயாது சண்டை மூண்டுகொண்டே இருக்கிறது. எனவே எல்லா வகையிலும் துக்கமாக இருக்கின்றதே ஒழிய ஆனந்தமாக இல்லை என்று சொல்கிறார். இக்காரணம்பற்றி அல்லவா கண்ணபிரான் கீதையில் விஷய சுகம் அனைத்தும் ஆரம்பத்தில் சுகமாகவும், முடிவில் துன்பமாகவும் இருக்கும் என்று கூறியிருப்பதே போதுமான சான்றாகும்.

இனி போகசாதனப் பொருள்கள் ஒன்றும் இன்றியும் ஆனந்தம் உண்டு என்பதைப் பற்றியும் சிறிது ஆராய்வோம். எல்லோரும் பொதுவாக பிரதிதினமும் அனுபவிக்கின்ற சுழுத்தி (தூக்கம்) ஆனந்தத்தில் எந்த போகசாதனப் பொருள்கள் இருந்தது. ஒன்றும் இல்லையே; அப்படியிருக்க நான் சுகமாக தூங்கினேன் என்ற அனுபவம் எப்படி வந்தது. இதுபற்றி அன்றோ "சுழுத்தி சுக ஆனந்தம் ஸ்மிருதி வடிவு ஆதலால் அவ்வானந்தமே அறிவாம்" என்று கைவல்யம் கூறி இருப்பதே போதும். சுழுத்தியில் அனுபவிக்கின்ற ஆனந்தமே ஸ்மிருதி அதாவது ஞாபகமே அறிவாக வெளிப்படுகின்றது என்பது பொருள். எனவே அந்த ஆனந்தமே எல்லோருடைய ஆத்ம சொரூபமாகும். இவ்வாறு தனது ஆத்ம சொரூபம் ஆனந்த மானது என்று தக்கார்பால் கேட்டு ஐயம் திரிபு அற உணர்ந்த போது துக்கம் கற்பிதகுணமாக தோன்றும் கற்பிதப் பொருள் யதார்த்த பொருளை ஒன்றும் செய்ய முடியாது.

உதாரணமாக கயிற்றில் தோன்றும் பாம்பு கயிறை ஒன்றும் செய்ய முடியாததுபோலும் எனக்கொள்க. ஆனந்த சொரூபமான ஆத்மாவே சகல ஜீவராசிகளுக்கும் குடத்துக்கு மண்போல் உபாதான காரணமாகும். மண்ணையன்றி குடம்

இன்றாயவாறுபோல் ஆனந்தத்தை அன்றி தனக்கு வேறு சொரூபம் இல்லை என்ற உண்மையை உள்ளங்கையில் கனிபோல் அறிந்த ஒருவனுடைய இல்லறமாகிய நல்லற வாழ்க்கைதான் உண்மையாகிய ஆனந்த வாழ்க்கையாகும். எது ஆனந்தவாழ்க்கை என்ற கேள்விக்குறிக்கு இங்கே விடை பகர்ந்துள்ளதை காண்க. ஆனந்த சொரூபமான ஆத்மாவே தன் யதார்த்த சொரூபம் என்று உணர்ந்தவர்கள்; மனைவி, மக்கள், வியாபாரம், விவசாயம், உத்தியோகம் முதலிய எத்தொழிலில் ஈடுபட்டுக்கொண்டிருந்தாலும் அவர்களுடைய வாழ்க்கை ஆனந்தமான வாழ்க்கையாகும் என்பதற்கு ஐயம் இல்லை.

இதுபற்றி அன்றோ "கைவல்யம் சித்து நான் நிறைந்தோன் என்ற திடம் மறவாதிருந்தால் எத்தனை எண்ணினாலும் ஏது செய்தாலும் என்னே? நித்திரை உணர்ந்தபின்பு நிற்கின்ற கனாவைப்போல் அத்தனையும் பொய் ஆனந்த வடிவு நானே" என்று கூறியிருப்பதைக் காண்க. வேதோபநிஷத்தின் ரகசியமான இந்த பிரம்ம வித்தையை பரமகுப்த வித்தை என்று வருணித்தார் அன்னிபெசண்ட் அம்மையார்.

இத்தகைய அதிரகசியமான பிரம்ம வித்தையை மக்கள் எல்லோரும் தங்கள் தங்கள் வாழ்க்கையில் அனுபவமாய் அறிந்து வாழ்க்கையை துக்கமற்ற ஆனந்த வாழ்க்கையாக இன்புற்று வாழவேண்டும் என்னும் உயரிய நோக்கத்தால் தமிழ்நாட்டுத் தத்துவஞானி ஸ்ரீ குரு கிணகர் சுவாமி அவர்கள் 15-12-44ல் திருவாரூர் புலிவலம் பிரம்ம வித்யா பீடத்தில் ஆற்றிய சொற்பொழிவின் சாரமே இந்த சிறிய புத்தகரூபமாக வெளிவந்துள்ளது. மாமேதையும் வேதாந்த விற்பன்னருமான இவர் முதல்நூல், வழிநூல், சார்புநூல் ஆகிய வேதாந்தமென்னும் பாற்கடல் கடைந்து எடுத்து அளித்த வெண்ணையை போன்றதாகும் இந்நூல்.

இந்த நூலகத்தில் விசாரசாகரம், பஞ்சதசி, உபநிஷத்துக்கள் போன்ற எல்லா வேதாந்த நூல்களின் சாரமும் இந்த நூலில் காணலாம். இந்நூலை வாசிக்கும் மணமக்களும் மற்றுமுள்ள அன்பர்களும் தங்கள் வாஸ்தவ சொரூபம் துக்கமற்ற ஆனந்தக் கடல் என உணர்ந்து ஜனகராஜனைப் போன்றும், கிருஷ்ணனைப்

போன்றும் ஜீவன் முக்தர்களாக தங்கள் இல்லறமாகிய நல்லற வாழ்க்கை ஆனந்த வாழ்க்கையாக நடத்திக்காட்ட வேண்டும்.

இந்நூல் ஆசிரியரும் நூல் கடைசியில் தனது யதார்த்த சொரூபம் சத்து சித்து ஆனந்தம் பிரம்மம் என சந்தேகமற அனுபவபூர்வமாய் உணர்ந்த நிலையிலேயே சகல கர்மத்தையும் செயலில் புரிந்துகொண்டு வாழ்க்கை நடத்துவதே ஆனந்த வாழ்க்கையாகுமென்று கூறியிருப்பதே போதிய சான்றாகும்.

உதாரணமாக தண்ணீரில் உற்பத்தியாகும் நெட்டியானது ஆயிரம் வருடம் நீரில் கிடந்தாலும் உள்ளே ஈரம் புகுவதில்லை அதுபோல் ஞானியானவன் எந்த செயலைப் புரிந்தாலும் அந்த செயல் அவனைப் பற்றுவதில்லை.

கர்மத்தில் அதாவது செயலில் ஞானி இருக்கிறான். ஞானியினிடத்தில் கர்மம் இல்லை. இக்காரணம் பற்றி ஞானிகளை கர்மயோகிகள் எனக் கூறப்படுகிறது.

எனவே மணமக்களும் வாசகர்களும் இந்த உண்மையைத் தங்கள் வாழ்க்கை ஆனந்த வாழ்க்கையாக வாழ்ந்து பிறருக்கு எடுத்துக்காட்டாக அமையவேண்டும் என விரும்புகிறேன்.

இப்படிக்கு,
**ஸ்ரீ வாசுதேவானந்த சுவாமிகள்,**
நாங்கூர்.

ஆ

## எது ஆனந்த வாழ்க்கை?

ஆனந்தத்தினின்றே சகல பிராணிகளும் தோன்றி, அவ்வானந்தத்தினாலேயே ஜீவனத்தையடைந்து அவைகளின் லயம் சுழுத்தி (உறக்கம்) காலத்தில் சொரூப வடிவ ஆனந்தத்திலேயே உண்டாகின்றதினால் 'ஆனந்தமே பிர்மம்' என்று வேதங்கள் போதிக்கின்றன. அதாவது சகலத்தினுடைய சொரூபம் ஆனந்தம் என்பதாகிறது. இதற்கு நமது தினசரி சுழுத்தி அவஸ்தையே அனுபவமாகும். ஏனெனில் அப்பொழுது ஆனந்தத்திற்கு வேறாக எவ்வஸ்துவின் அனுபவமும்

இல்லாததினால் ஆனந்தம் பிர்மம் என்பதில் சம்சயமில்லை. மேலும் இவ்வானந்தம் வேறு கருவி கரணங்களின் உதவியில்லாது தனக்குத்தானே விளங்குவதாலும் இப்பிர்மம் சுயம் பிரகாசவஸ்து என்பதும் சிந்திப்பதாகின்றது. இவ்வுண்மையை எவனொருவன் விவேக பூர்வமாய் உள்முகத்தில் விசாரித்து, இந்த ஜாக்கிரதா (விழிப்பு) வஸ்தையிலும் தனது சொரூபம் அவ்வாறே விளங்கிக் கொண்டிருப்பதை எப்பொழுது அனுபவமாய் உணர்கின்றானோ அவனே ஞானியென சொல்லப் பட்டு ஆனந்தத்திலே நிலைபெற்றவனாகி ஆனந்த வாழ்க்கை நடத்த தகுதியுள்ளவனாகின்றான். அப்படியென்றால் நம் வாழ்க்கைக்கு தேவையான கொஞ்சம் பொருள், மனைவி, மக்கள் மற்றும் போக சாதனங்கள், முடியுமானால் சில கலைகளைப்பற்றிய அறிவைப் பெறுதல் முதலிய இவைகளோடு வாழ்வதே ஆனந்த வாழ்க்கையாகாதோ? என்று கேட்கலாம். அத்தகைய வாழ்வு ஆனந்த வாழ்க்கைபோல் தோன்றுமெனினும் அவை காலப்போக்கில் மாறும் தன்மையுடையதாயும், உடம்பு உள்ள வரையிலும்தான் அனுபவிக்கக்கூடியதாகி அநித்தியமாக வுள்ளது. உடலோ நினையாதபோது திடீரென ஏற்படும் நோய், மரணம் இவைகளால் தாக்கப்பட்டு நாசமடையும் இயல்புடையதாயிருக்கிறது. வயோதிக பருவமடைந்துவிட்டால் முன் இன்பமாய் தோன்றியவை அனைத்தும் துக்கமாகத் தோன்றுகிறது. உடலைச் சார்ந்த இந்திரிய சுகானுபவங்களில் நித்தியமான சுகத்தைக் கண்ட மனிதர் எவருமில்லை. எனவே ஊண், உடை, தனம், புகழ் மற்றும் போகங்கள் முதலியவற்றால் வரும் சுகம் பகற்காலத்தில் தோன்றி அழியும் மின்னலைப் போன்றுள்ளது என்ற உண்மையை விவேகித்துணர்ந்து அவைகள் எதுவும் தங்களை திருப்தி செய்ய முடியாமலிருக்கும் நிலையிலுள்ள அறிவுடையோர்கள் மேற்சொல்லிய அநித்தியமான சிற்றின்ப வாழ்க்கையில் மறந்தும் இச்சையில்லாதவர்களாய் அழிவிலா பேரின்பம் அல்லது ஆனந்த வாழ்க்கையிலேயே நாட்டமுடையோராயுள்ளனர். என்றும் அழியா பேரின்பமொன்றேகடவுள்அல்லது ஆனந்தம் என்ற பெயரால் போற்றப் படுகிறது. ஆகவே இப்பேரின்பத்தை தேடுதலும் கடவுள் நாட்டமும் வேறு வேறானவையல்ல. அழகிய காட்சியிலோ, இன்னிசையிலோ, ஈடுபட்டிருக்கும்போது நமக்கு ஆனந்தம்

உண்டாகிறது. அதாவது நம் உடம்பை அவ்வேளை மட்டிலு மாவது மறந்துவிடுகிறோம். நம் உடலைப் பற்றிய அறிவோடு இருக்கும்பொழுது ஆனந்தம் விளங்குவதில்லை. தவிர ஆறுதலாயிருக்கும்பொழுதும், ஓய்வுற்றிருக்கும்போதும், எண்ணத்திலாழ்ந்து நிற்கும் தருவாயிலும், உடம்பைப்பற்றிய ஞாபகமே இருப்பதில்லை நினைவு மறைந்துவிடுகிறது. இந்நிலையில் நமது உடல், உள்ளம் இவை கடக்கப்பட்டதாகி நமது உண்மை சொரூபமாகிய ஆனந்தத்தில் நிலைக்கிறோம். அப்போது ஆனந்தத்தை தவிர வேறு எதுவும் அனுபவமாவ தில்லை, இதனால் நமது இயற்கை வடிவம் ஆனந்தம் என்பதை யூகிக்க இடமிருக்கிறது. ஒவ்வொருவரும் மனவமைதியற்று ஓயாதுழைப்பது இன்பத்தைக் கோரியே என்பதும் இழந்துவிட்ட தமது இயற்கை ஆனந்த சொரூபத்தை நாடிச் செல்வதைத்தான் குறிக்கின்றது. மனிதன் அளவற்ற அவாவுடையவனாகி மேலும் மேலும் வேண்டுமென்கிற ஆவல் தணியப் பெறாதவனா கின்றான் என்பதும், உலக போகங்களாலும் வஸ்துக்களாலும் மன நிறைவு அல்லது நித்திய திருப்தி ஏற்படாமல் அலைகின்ற உண்மை ஒன்றே, அது அவனது இயற்கை நிலையல்ல என்றும் காட்டுகிறது. எனவே மனிதன் உண்மையில் வரம்புகடந்த ஆனந்தமே தன் இயற்கை வடிவமாகப் பெற்றுள்ள உண்மையை உணர்ந்து அவ்வானந்த நிலையில் நிலைபெற்றிருக்க ஒவ்வொரு வரும் முயற்சி செய்ய கடமைப்பட்டவர்கள் ஆகிறோம்.

நிற்க, நமது உடல் முதற்கொண்டு வெளிமுகமான உலக வஸ்துக்கள் ஈராக அனைத்தும் நம் அறிவிற்கு விஷயமாகி அறிவினாலேயே அறியப்படுவதாகின்றது. ஆனால் அவை எதுவும் நம்மை அறிவதில்லை. இவ்விதம் நாம் சர்வத்தையும் அறியும் ஆற்றல் பெற்ற அறிவு வடிவினர்களாயிருந்தும். அறிபடு பொருளாயும், பஞ்சபூதங்களின் மாற்றுருவமானதும், தன்னையும் பிறவற்றையும் அறியாத சடப்பொருளான உடலையே 'நாம்' என்று கருதிவிடுகிறோம். நாம் கருதியபடி உடலே நாமாக இருக்கும் பக்ஷத்தில், தூங்கும்போதும் நம்பக்கம் யார் வந்தாலும், வேறு என்ன நிகழ்ச்சி நடந்தாலும், அவற்றை நம் உடல் அறியவேண்டும். ஆனால் அவ்வாறு இல்லை என்பதே நமது அனுபவம்.

இவ்வாறு தானல்லாத உடலை 'நான்' என்று கொண்டுள்ள விபரீதத்திற்குத்தான் அஞ்ஞானம் அல்லது மயக்கம் என்று சொல்லப்படுகிறது. அதாவது தான் ஞானசொரூபியாய் இருந்தும் அதை மறந்திருத்தலே அஞ்ஞானம் (ஞானமின்மை) எனப்படுகிறது. இவ்வஞ்ஞானமே மனிதர்களுக்கு ஏற்பட்டுள்ள ஜனன, மரண, சம்சார, பந்த துக்கம் அனைத்திற்கும் மூல காரணம் என்பது சாஸ்திரங்களினுடையவும் புத்திமான் களுடையதுமான துணிபு. இத்தகைய அஞ்ஞானமும் அதன் காரணமாக ஏற்பட்டுள்ள சர்வ துக்கங்களின் நிவர்த்தியோடு கூடிய பரமானந்த பிராப்தியாகிய உன்னத நிலைக்கு 'மோக்ஷம்' எனக் கூறப்படுகிறது. இந்நிலை எய்துவதற்கு உற்ற உபாயம் ஆத்மஞானம் அல்லது கடவுளறிவு ஒன்றைத்தவிர வேறு மார்க்கமில்லை என்பது வேதாந்தத்தின் உத்தம போதனையாகும்.

ஆத்மஞானம் வேதாந்த சிரவணாதிகளான (நான் யார்? கடவுள் யார்? என்பன போன்ற) விசாரத்தாலேயே சித்திப்பதா கின்றது. கர்மம் உபாசனை முதலியன சித்தசுத்தியை உண்டாக்கும் வாயிலாக ஞானத்திற்கு சாதனமாக செயல்படுகிறதன்றி அவைகள் ஞானமாகா. ஞானத்திற்கு நேர்சாதனம் விசாரமே. ஆத்மஞானத்தை போதிப்பது வேதசிரஸான உபநிஷத்துக்களாகும். அவ்வுபநிடதங்கள் 'எல்லாம் கடவுள் மயம்' இருப்பது கடவுள் ஒன்றே! கடவுளுக்கு அந்நியமாக ஒன்றுமில்லை! சகல வஸ்துக்களினுடைய உண்மை சொரூபம் கடவுளே! அது நீயாயிருக்கிறாய் என்பன போன்ற வாக்கியங்களால் கோஷிக் கின்றன. எனவே உபநிடதங்களின் உத்தம சித்தாந்தமாகிய "தத்துவ மஸி" 'அகம் பிர்மாஸ்மி" முதலிய மகாவாக்கியங்களின் உண்மை தத்துவத்தை தக்கார்பால் பிரமாணங்களோடு உள்ளபடி விசாரித்து தனது யதார்த்த வடிவம் சத், சித், ஆனந்த பிர்மம் அல்லது கடவுளுக்கு வேறாகாமலிருப்பதை சந்தேகமற யுக்தி பூர்வமாயும், அனுபவ பூர்மாயும் உணர்ந்து அவ்வுணர்வின் சொரூப நிலையிலேயே சகல கர்மத்தையும் செயலில் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்துவதே ஆனந்த வாழ்க்கையாகும் என்பதை விவேகிகள் ஊகித்தறிவார்களாக.

தமிழ்நாட்டு தத்துவ ஞானி,
**ஸ்ரீ குரு கிணகர் சுவாமிகள்**

## முடிவுரை

## சநாதன உண்மை தத்துவம்

ஜம்புத் தீபமென்னும் பரதகண்டமாகிய இக்கீழ்த் திசையிலே தோன்றியிருந்த சநாதன விஞ்ஞான அறிஞர்கள், தங்கள் மனோதத்துவ அனுபவங்களால் ஆராய்ந்து உணர்ந்து வெளியிட்டுள்ள ''ஐதரேயம், பிரசிணம், முண்டகம், தைத்திரீயம், கடம், பிரஹதாரண்யம், கேணம், சாந்தோக்கியம், கவுஷீதகி, ஈசம் முதலிய உபநிஷத்துக்களில் உள்ள உண்மை தத்துவங்களை மிகவும் தெளிவாகவும் எளிய நடையிலும் விளக்கமாகவும் தமது சிஷ்யர்களுக்கு எழுதிய 39 கடிதங்களின் மூலம் ''தான்'' பெற்ற பேரு வையகம் பெறவேண்டும் என்ற பெருநோக்கத்தோடு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

இந்தியா பூராவும் சுமார் 40 ஆண்டுகாலம் கால்நடையாக சுற்றுப்பயணம் செய்து அநேக மகான்களையும், பெரியோர் களையும் கண்டு அவர்களிடம் ஆத்ம அநாத்ம விசாரம் செய்து தான் ஆத்ம சொரூபன் என்பதையும் ஆனந்த சொரூபன் என்பதையும் காண்பானின்றி கண்டு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

அறிபடு பொருளுக்கு வேறாக அறிபவன் இருக்கிறான் என்பதையும் அறிபடு பொருளாகிய தேகாதி பிரபஞ்சம் அனைத்தும் அசத்து, ஜடம், துக்கம், அநித்தியம், கண்டம் என்றும் அறிபவனாகிய; தான், சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம், பூரணம் என்பதையும் காண்பானின்றி கண்டு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

குடத்திற்கு முதல் காரணம் மண்ணை அன்றி குடம் என்னும் சொல்லுக்கும், உருவத்திற்கும் தனிப்பொருளில்லாதது போல; தேகாதி பிரபஞ்சம் என்னும் சொல்லுக்கும் உருவத்திற்கும் முதல் காரணமான பிரம்மத்தையன்றி தனிப்பொருள் இல்லை என்பதை கண்டு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

விஷயானந்தங்கள் அனைத்தும் சொரூபானந்தமேயொழிய விஷயத்தில் ஆனந்தம் இல்லை என்பதை உணர்ந்து வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

ஆதிசங்கரருடைய அத்வைத சித்தாந்தமான ஒரே ஆனந்தத்தில் இருந்து தோன்றிய மக்கள் ஆனந்த சொரூபிகளாக விளங்கி ஆனந்தத்தில் லயம் ஆகின்ற இந்த உண்மையை தான் வேறாகாது கண்டு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

பகவத்கீதை 11-வது அத்தியாயத்தில் கூறும் விஸ்வரூபமான உலகம் முழுவதும் தானென கண்டதுடன் கைவல்யத்தில் கூறும் 11 ஆனந்தங்களும் தன் சொரூபானந்தத்தின் திவலைகள் ஆகும் என துணிந்ததுடன் சொரூபானந்த கடலில் மூழ்கி ஜீவன் முக்தனாக வாழ்ந்து கொண்டு இருக்கிறார் சுவாமி வாசுதேவானந்தா.

தத்துவமஸி மகாவாக்கியத்தின் தத்பத லட்சியமான பிர்மமும் துவம்பத இலட்சியமான கூடஸ்தனும், கடாகாயம், மகாகாயம் போல் ஏகமே என கண்டு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

ஆனந்தமே சொரூப குணமாக பெற்றுள்ள பிர்மத்தில் தோன்றிய மக்கள் தாங்கள் ஆனந்த சொரூபமான பிர்மமே என்று அறிந்தால் ஒழிய அறிஞர்கள் கண்ட கனவாகிய சத்தியம், அகிம்சை, சகோதரத்துவம், அன்பு முதலிய பரிசுத்த குணங்கள் நனவாக நிலைபெற்று விளங்காதென்பது வைரமலைக் கொப்பான சிதையாத சித்தாந்தம் என்று கண்டு வெளியிட்டுள்ளார்கள் சுவாமி வாசுதேவானந்தா.

எனவே! வாசகர்கள் தனது நிஜ சொரூபமாகிய ஆத்ம சொரூபமே அபேதமாகவும், அகண்டமாகவும் எங்கும் நிறைந்த தாகவும், எல்லாமாகவும், அல்லதுமாகவும் விளங்குவதை காண்பானின்றி கண்டு பிர்ம சாக்ஷத்கார அனுபவம் பெற்று சகஜானுபவ சமாதியில் திளைத்து இல்லறத்தை நல்லறமாக இனிது நிகழ்த்தி ஜீவன் முக்தர்களாக வாழுமாறு கேட்டுக் கொள்வதோடு இந்நூலை தங்களின் (வாசகர்களின்) இதய கமலங்களில் சமர்ப்பிக்கின்றோம்.

இங்ஙனம்,
**பேரறிஞர் ஸாது பிர்மானந்தா**, தலைவர்,
பிர்மவித்யா பீடம்,
புலிவலம் P.O., திருவாரூர். 610 109.

10-8-1981



# Things to be remembered
# நினைவில் கொள்ள வேண்டியவைகள்

1. Awake from darkness and ingnorance.
அறியாமை என்னும் இருளிலிருந்து விழித்துக்கொள்.
2. Base is the flesh and beacon is the life.
உடல் உயர்வானதல்ல; நீயோ கலங்கரை விளக்கம்போல் உயர்ந்தவன்.
3. Compassion and not contradiction is the life.
இரக்க உணர்ச்சியோடு வாழ்வதே வாழ்வு; எதிர்ப் புணர்ச்சியோடு வாழ்வது வாழ்வல்ல.
4. Death is better by snake bite than by sadness.
சோகத்தால் இறப்பதைவிட நாகத்தால் இறத்தல்மேல்.
5. Egotism is the negation of enlightement.
அகங்காரம் மெய்ஞ்ஞானத்தை மறைக்கும்.
6. Fail not to perceive yourself apart from your body.
உனது உடலினின்றும் உன்னைப் பிரித்தறியத் தவறாதே.
7. Greatness of a man lies in his thought and not in his living.
மனிதனின் உயர்வு அவன் ஆயுளைப் பொறுத்ததல்ல, அவன் சிந்தனையைப் பொறுத்தது.
8. Hail the wise and brave who fail not to perceive the unity in diversity.
வேற்றுமையில் ஒற்றுமையைக் காணத்தவறாத அறிவாற்றல் மிக்க வீரர்களைப் போற்றுக.

9. Identify yourself with the Almighty the Supreme. (Brahamam)
சர்வ வல்லமையுள்ள பிர்மமாக உன்னைக் கண்டுகொள்.
10. Judge yourself first before judging others.
நீ பிறரைப்பற்றி தீர்மானம் செய்யுமுன் உன்னைப்பற்றித் தீர்மானித்துக்கொள்.
11. Keen intelligence, earnestness, and good association lead to realisation.
புத்திகூர்மை, சிரத்தை, சத்சங்கம் இவை தன்னை அறியத் துணைசெய்யும்.
12. Learned is one who perceives himself in everything.
எல்லாவற்றிலும் தன்னைக் காண்பவனே கற்றவனாவான்.
13. Man is not the Constitution but the eternal conscience (Anther Athma)
உடல் அமைப்பு மனிதனைக் குறிக்காது. அந்தராத்மாவே மனிதனாவான்.
14. Negation of self is the nature of an atheist.
தன்னை மறுப்பவனே நாத்திகனாவான்.
15. One learns stronger by experience than by education.
கல்வி அறிவைவிட அனுபவ அறிவே உறுதியானது.
16. Plants without rainfall and partner without affection perish soon.
மழைத்துளி காணாத பயிரும், பாசம் இல்லாத உறவும் விரைவில் அழியும்.
17. Qualitative knowledge is better than quantitative.
பலவற்றைக் கற்பதைவிட சிறந்த சிலவற்றை ஆழ கற்பது மேல்.
18. Rare to be born as a man, rarer still to be with human character.
மனிதனாய்ப் பிறத்தல் அரிது, மனித அறிவோடு வாழ்தல் அதனினும் அரிது.
19. Saintliness lies not in the robes but in his enlightenment.
துறவின் புனிதத்தன்மை அங்கியில் இல்லை; அகவிழிப்பில் உள்ளது.

20. The object of real education is the self realisation.

தன்னை அறிதலே உண்மைக் கல்வியாகும்.

21. Unfortunate are those who fall sick when young and become poor When old.

இளமையில் நோய்வாய் படுவோனும், முதுமையில் வறுமையால் வாடுவோறும் துரதிஷ்ட்டசாலிகள்.

22. Virtuous persons (Vaitheegan) are not jealous.

நற்குணவானிடம் பொறாமை இராது.

23. Worship of saints and seers is the Worship of God Himself.

ஞானிகளை வழிபடுதலே கடவுள் வழிபாடாகும்.

24. Xoanon is nothing but the creation of man.

கடவுளின் சிலைகள் மனிதனின் படைப்பேயாகும்.

25. Yours is nothing in the world but of the Ommipotent.

பிர்மம் ஒன்றைத்தவிர இவ்வுலகில் உன்னுடையது என்று எதுவும் இல்லை.

26. Zealous are house who lose foresight for a moment and become victims.

கணப்பொழுதில் அறிவை இழந்து பலியாவது உணர்ச்சி வயப்பட்டவனின் செயலாகும்.


By
S. VENUGOPALAN, M.A., B.Com, B.T.
K. GANGADARAN, M.A., B.T.
Brahma Vidya Peedam,
Tiruvarur.

12-8-1981.



தமிழ்நாட்டுத் தத்துவஞானி

# ஸ்ரீ குரு கிணகர் சுவாமிகள்

## இயற்றியது

(வீரசுதந்திரம் வேண்டிநின்றார் பின்னால் என்ற மெட்டு)

மானிட ஜென்மம் நீர் ஏனெடுத்தீரே - மாநில மாந்தர்களே
மாய வாழ்வினிலே மாறுபாடடைந்தே - மாறவோ தீனர்களே
(மா)

**(தொகையறா)**

ஊனுடலெடுத்துலக தூல நோக்கத்திலே
ஊர்ந்து சுகதுக்க மென்ற
தூனிலே கட்டுண்டு அவிழ்க்க வழிதெரியாது
சோம்பியென் செய்வதென்ற

**பாட்டு**

சலன மனோநிலை சார்ந்து வீணான - சம்பந்த தொடர்பாலே
சமரச தனது மெய் சமஷ்டி சொரூபமான
சாயலைப் பாராமலே (மா)

**(தொகையறா)**

அண்டபகிரண்டமும் அகண்டு கண்டஸ்தான - ஆபாஸமுளதுபோலே
கண்படி நானாவகை ஜீவபேதமாய் - காலதேசாதியாலே.

பாட்டு

சுயம் பரம்பொருளே நிஜமெனவுருவாய்
துவைத பாவனையடைந்தே
தோன்றியும் தோன்றாத - சூசக மகிமையை
துருவி உணரா அயர்ந்தே (மா)

(தொகையறா)

வேண்டுமட்டும் பெரிய விபரீத செய்கைகள்
விரும்பி வாழ்நாள் கடத்த
மீண்டும் மீண்டும் செய்து அபசார சிகரத்தை - மீளாது பற்றிமெத்த

பாட்டு

நடைப்பிணமாகிய மனமலதடிப்பால்
நன்மையை யறியீரே
நாடியினியாகிலும் **கிணகர்** சுவாமிகள்
போதஞான முணருவீரே (மா)



# பிரமமே சத்தியம்

,

*தன்னை மறவாமலும் பிற நினையாமலும்*
*தன்னை யாய்ந்திருப்பது தத்துவந்தானே*

- விருத்திஞானம்

*இருவினையற்று (விருப்பு வெறுப்பற்று)*
*நடுநிலை நீங்காமல் காரண காரியம்*
*அற்றிருத்தலே*

- அத்வைதம்

*சுத்த சைதன்யமான தன்னை சுட்டுப்பார்வையற்ற*
*தன்னால் சகல கேவலங்களை சாராத தானே*
*இரண்டற ஒன்றரியாத அறிதலாகிய சும்மா*
*இருத்தலே*

- அத்வைதம்

*கண்ணே திற கண்மூடிப் போனால் மண்மூடிப்*
*போகும் ஞானக்கண்ணே திற*

- சித்தே சிவலிங்கம்

*கல்லையுடைத்தால் தூளாகும் அது கலையாய்*
*வடித்தால் சிலையாகும்.*
*தன்னையறிந்தால் சிவமாகும் - அது*
*அறியாது போனால் சவமாகும்.*

- சொரூபம்

*சற்குரு முகமாய் தத்துவத்தையறிந்தவன்*
*தன்னையறிவான்*

- சச்சிதானந்தம்

- சாது



